அருவத்தநீயுராமுமன்னியமாவதன்றி
யுருவத்துமவ்வாறென்னவோங்குமாத்தலமுமுண்டாற்
பருவத்துமடந்தாய்பூமேற்பசுவன்றிவான்மேற்றங்குந்
திருவத்தோர்பசுவைக்கொண்டுசிருட்டிசெய்தலமுமுண்டால். (௩௭)

உற்றவன்பினர்செய்வேலியொன்றுளநாமைவேலிப்
பொற்றளியாதிகொண்டுபொலிதருதலமுமுண்டா
லற்றமிலன்புவாய்ந்தாரியாவரும்புகலூரொன்று
பெற்றவண்சிறப்பினோங்கிப்பிறங்குறுதலமுமுண்டால். (௩௮)

கொடுமைசெய்களிற்றைமாட்டிக்குலவுநீமுந்தியீன்ற
வடிவேறுகளிறுபோற்றிவழிபடுதலமுமுண்டா
னெடுமறையனைத்தும்வெவ்வேறுருக்கொடுநிரம்பப்போற்றப்
படிவரமிதப்பநல்கிப்பதிபெரும்பதியுமுண்டால். (௩௯)

விடரடைவடிவுமற்றும்விரும்பிநாமமுதுசெய்து
படரடையாமலன்பற்புரந்தவான்பதியுமுண்டா
லிடர்தபுதிருவாசப்பேரியன்முனிவரற்காவின்ப
மடர்திருநடனஞ்செய்தவரும்பெருந்தலமுமுண்டால். (௪௦)

பண்ணியகலைகள்போலப்பகராறுபத்துநான்கு
புண்ணியவாடல்செய்துபொலிதருதலமுமுண்டான்
மண்ணியமணிநேரன்புவாய்ந்தவளொருத்தியாற்ற
வண்ணியகபோலக்கிள்ளோடமர்தருதலமுமுண்டால். (௪௧)

திருகுகோட்டுதலுக்குற்றசென்னியும்யானைக்குற்ற
பெருகுதோலுடம்புந்தீர்த்துப்பிறங்கொருதலமுமுண்டா
லுருகுமோர்கௌரிக்காமூவுருவுகொண்டுற்றநாதோ
மருகுமோர்காளையாகியமர்தருதலமுமுண்டால். (௪௨)

ஆயிலாரிரும்பூதெய்தாரரிமதர்மழைக்கட்பாவாய்
தாயிலாநமக்குவேயேதாயாகுந்தலமுமுண்டா
னோயிலாவொருநமைப்போனுலருஞ்சிறப்பிற்றாகி
மாயிலாக்குறும்பலாவொன்றமர்வளத்தலமுமுண்டால். (௪௩)

தழுவியசிலையிராமனரக்கனைத்தடிந்தபாவங்
கழுவியுவந்துபோற்றுங்காமருதலமுமுண்டால்
வழுவியவரக்கன்கைக்குவராதுமாபலமேயாகிச்
செழுவியநம்துகோசஞ்செறிதருதலமுமுண்டால். (௪௪)

இவைமுதற்றலமனேகமிக்கயிலாயம்போலு
நவையறுமிவற்றுண்மேலாநாமமர்தானமொன்று
குவைமலர்க்குழலாயஃதுகுறித்தகாரோணமாகுஞ்
செவையுறக்குறிப்போர்க்கெல்லாச்சித்தியுமெளிதினல்கும். (௪௫)

நாடுமிக்கயிலையாதிரவின்றபஃறலங்கட்கெல்லாம்
பாடுகாரோணமேன்மைபடைத்ததெத்திறனுலென்னிற்
கூடுபேரண்டமெல்லாங்குலையுகாண்மூர்த்தியாவு
நீடுமெத்தலத்தேவர்துவிரம்புதலாலென்றேர்தி. (௪௬)

அத்தலத்திடையுதித்தாரத்தலத்திடைவசித்தா
ரத்தலத்துயிர்விடுத்தாரத்தலத்தாசைவைத்தா
ரத்தலத்தெல்லைசூழ்ந்தாரத்தலத்தலர்தூய்த்தாழ்வா
ரத்தலப்பெருமைதேர்ந்தாரனைவருமுத்தராவார். (௪௭)

கருதினவருளுநாகைக்காயாரோகணத்தலத்தி
லொருகணம்வசிப்பாரேனுமுறுபலன்பெரியதாகின்
மருவுமற்றதன்மேலாகவசிப்பவர்க்குரைப்பதென்னே
பொருவில்பஃறலத்தும்வைகும்பயனெலாம்பொருந்துவாரால். (௪௮)

அத்தலத்துயர்ந்ததானமகிலத்துமில்லையாகு
மூந்தலங்களினுமொத்ததிதுவென்றுமொழிவாரில்லை
கைத்தலமழுமானேநதுமெம்மையேநிகருங்கண்டாய்
மைததலஞ்சனமுமோவவயங்குகார்க்கூநதனல்லாய். (௪௯)

பலவிரித்துரைவதென்னைபகருமத்தலததைச்சார்நதார்
நலமருவெமைச்சாரநதாரேநவின்றதற்கையமில்லை
நிலவுமிவ்விசேடத்தாலேநிரம்பியபிரியம்வைத்தோ
மலமரலன்றிநீயுமமைத்தனையறிதியென்றான். (௫௦)

தலவளநந்தியெம்மான்சனற்குமாரனுக்குச்சொற்ற
நலமுறவெடுத்துச்சொறறுநயந்தவன்விழைவுநோக்கிக்
குலமுனிபுண்டரீகன்குறிமுதறகாட்சிபெற்று
நிலவியதுரைத்தவாறுதெரிதரநிகழ்த்தலுற்றான். (௫௧)

தலவிசேடபபடலம் முற்றிற்று.

ஆ படலம்-எ-இ திருவிருததம் - ௪௬௩.

## புண்டரீகமுனிவர் முதற்காட்சியுரைத்தபடலம்.

நலமலியுநநதிபிரானுடுசனற்குமரமுனி
பொலமலியுஞ்சிவராசதானியெனும்புரத்தினுக்குக்
கலமலியுங்கடனாகைக்காயாரோகணமெனும்பேர்
நிலமலியும்படிசொல்லென்னிகழ்த்துகெனநேர்ந்துரைப்பான். (௧)

அறமனைத்துங்குடிகொளுங்கையம்பிகையன்னலைவணங்கி
மறமனைத்துந்தவிர்தலத்தின்மான்மியங்கேட்டுளமகிழ்ந்தேன்
றிறமனைத்தும்புணர்வினையத்தலத்தடைந்துசேர்ந்தவர்யார்
நிறமனைத்துந்தருமதுவுமுரைத்தியெனநிகழ்த்திடுவான். (௨)

புரையெறியும்பெருங்குணத்திற்புண்ணியப்பூங்கொம்பேகேள்
வரையெறியும்பன்மணியுமால்யானைக்கோடுகளும்
விரையெறியுமொண்மலருமேதகுசந்தனக்குறடுந்
திரையெறியும்யமுனையெனுந்திருத்தகுமாநதிக்கரையில். (௩)

சாதமறைமுழங்கொலியுஞ்சாலையழலோம்பொலியும்
போதவமரரையவியூண்புசிக்கவழைத்திடுமொலியு
மேதமின்மங்கலவொலியுமென்றுமெழுகடலொலியாம்
வேதபுரமெனும்பெயரின்விளங்குமொருதிருநகரில். (௪)

வழிவழிநம்மடிக்கன்பேவயக்கிவருபெருங்குணத்தா
லிழிவுசிறிதேனுமுறுதென்ஞான்றுமுயர்வேயுற்
றொழிவரியகண்ணோட்டமொப்புரவாதிகடழுவிக்
கழிபுகழினனிபொலிந்துகமழ்கற்பகோத்திரத்தில். (௫)

மறைமுழுதும்வடித்துணர்ந்தானங்கமுமாண்புறத்தெரிந்தா
னிறைதருமாகமக்கடலுநீந்தினனல்லொழுக்க
முறைநெறியிற்றலைநின்றான்முனிவருநந்தமையுணர்ந்து
கறைகெழுபல்பவமுமறுகருத்தமனென்றொருமறையோன். (௬)

அந்தமுனிவரன்றவத்திலான்றபாற்கடலுதித்த
சந்தமதியெனவுதித்தான்சதுர்வேதமுதலாக
வந்தகலைபற்பலவும்வடித்துணர்ந்துதந்தையினு
நந்தலறிவினிற்சிறந்தானல்லொழுக்கந்தலைநின்றான். (௭)

நம்மடியர்தமைக்கரணினுமென்றேயுபசரிப்பான்
செம்மலர்மேலயனுதித்தேவரனுமிணையில்லான்
விம்மலறுபெருந்தவமேவிளைந்ததனால்வருமுவகைப்
பொம்மல்படைத்துயர்ந்தோங்குபுண்டரீகப்பெயரான். (௮)

அன்னமுனிவரன்றந்தையாயகருத்தமற்பணிந்து
சொன்னபவத்துயரகற்றித்தூயசாயுச்சியமா
நன்னரமைமுத்தியினைநயந்தளிக்குங்கடவுளெவன்
மன்னவுரைத்தருளென்றான்மற்றவனுமகிழ்ந்துரைப்பான். (௯)

உரவில்விடயாதிகளினுழலிளமைப்பருவத்தே
கரவுதவிரின்பமுத்திகாதலித்தாயம்முத்தி
விரவுதிறலினனீயே வீடுமுதல்யாதானும்
பரசிவனையல்லாதுபாலிப்பாரிலையுணர்தி. (௧௦)

சங்கரனாலெவ்வுயிர்க்குந்தாவில்சுகங்கொடுத்தலினாற்
பங்கவியசனந்தவிர்க்கும்பண்பினாலுருத்திரனே
யங்கணருள்பொழியம்பைசமேதனாயமர்தலினாற்
றுங்கமிகுசாம்பனெனச்சொல்லுவாரறிவுடையோர். (௧௧)

நிலமுரத்துத்தரித்திடலுநீர்குளிர்ந்துபதஞ்செயலுங்
கனலழல்சுட்டொன்றுதலுங்கால்சலித்துத்திரட்டுதலும்
வலனமைவிண்ணிரந்தரமாயிடங்கொடுத்துமருவுதலு
மலமரலிலருட்பெருமான்கட்டளையென்றறிமைந்த. (கஉ)

இரவிமதிமுதலாயகோள்கடகவியங்குதலுங்
கரவறமீன்புணர்பரவைகளைகடவாதடங்குதலும்
புரவமையும்புவனங்கள்போவதுவுமாவதுவு
மரவணியுஞ்சிவபெருமானாணையெனவறிமைந்த. (கங)

மறைகளவன்வாய்மொழியேமறைகளவன்வந்தியரே
மறைகளவனபாதுகையேமறைகளவன்காற்சிலம்பே
மறைகளவனூர்பரியேகாணாதுமயங்குதலு
மறைகளெனிற்சிவபெருமானமான்மியநானென்னுரைக்கேன், (கச)

எங்குமவன்றிருமுடியேயெங்குமவன்றிருமுகமே
யெங்குமவனுலோசனமேயெங்குமவன்குழைச்செவியே
யெங்குமவன்செவ்வாயேயெங்குங்கையேபதமு
மெங்குமெனிற்சிவபெருமானேற்றநானென்னுரைக்கேன். (கரு)

புனையுருவெட்டொன்பதுமுற்புணர்ந்துமோருருவுமிலன்
வினையொருநான்கொன்றியற்றிமேவினுமோர்வினையுமிலன்
புனையிழையோர்பானமருவப்பொருந்தினும்விகாரமில
னனையபிரானுண்மைநிலையாரியம்பவல்லவரே. (கசா)

மண்ணிடையைந்தாயமர்ந்தானீரிடைநான்காய்வதிந்தான
கண்ணிடைதீயிடைமூன்றாய்க்காலிடைமற்றேரிரண்டாய்
விண்ணிடையொன்றாயமைந்தானுணுமவிளம்பியவை
யெண்ணிடைவதல்லாமலினனனெனவுணர்வனவோ. (கஎ)

கூற்றுவன்செய்கொடுந்தண்டங்குதிந்துய்யக்குறித்தவர்க
ளேற்றுமிசைவருபெருமானடியன்றியெண்ணுவரோ
போற்றுமறையாகமபுராணமெலாமபுகல்பவாதோங்
காற்றுவலியமைகாலகாலனெனத்துதித்தலினால. (கஅ)

எண்ணியபூங்கணைமதவேளிரவுபகலாவியற்றுங்
கண்ணியவெந்துயரனைத்துங்கடந்துய்யவுளங்குறித்த
புண்ணியர்களவனையன்றிப்பிறரையுமபூசிப்பர்கொலோ
தண்ணியநூலெலாங்காமதகனனெனமுறையிடலால். (ககூ)

மேயபல்துயரமெலாம்விரைந்தெழுவான்றேற்றிடுவித்
தாயபிறப்பொழித்திடுவானமையவுளத்திடைக்குறித்த
ஆயமுதியினர்சிவனையல்லாதுதுதிப்பர்கொலோ
பாயுமறைபிறப்பிலியென்றெடுத்துரைக்கும்பான்மையினால். (உ0)

அரியகடவுளராயவரிபிரமாதியர்க்கெல்லாம்
பெரியபிரான்சங்கரனேயென்றறிஞர்பேசிடுவார்
தெரியமுரசறைந்ததெனச்செகமுழுதுமவாய்க்கேட்க
வுரியமறைமாதேவனெனுந்திருப்பேரோதுதலால். (உக)

பிரணவத்திலுரியபொருள்பிறொன்றுபேசிடுவார்
முரணவித்தற்காகமங்கண்முதலாயவேண்டுபவோ
கரணவிகற்பங்கடப்பாய்காவதமெண்ணில்கமழுந
திரன்மிகுத்தசெழுங்கொன்றைமாலிகைசேர்தரக்கண்டும். (உஉ)

வேதகாயத்திரியின்பொருளாகும்வித்தகரார்
போதநாயகனைபொங்கொளிச்சம்புவையன்றி
யேதநீவாதமரும்யாவரையும்புகன்றிடலா
மோதவாம்பற்கனெனுமொருமொழிநள்ளமையாதேல். (உங)

மும்மறையுணமெமறையின்முனிவிலெழுகாண்டத்திற்
செம்மைதருநடுக்காண்டஞ்சேர்நதவெழுசங்கிதையி
லம்மநடுச்சங்கிதையினுதியீரொழித்துநடுப்
பொம்மலுறவமர்மனுவின்பொருளாவானெவன்மைந்த, (உச)

இருத்தமிகுமறைமுடிபாய்த்திகழ்தருகாலாக்கினிசா
ருருத்திரபீபேருபநிடதமுதலாயவுரைப்பதெலாம்
வருத்தமறவுலகனைத்துமிளைப்பொழித்துமாதேவன்
பொருத்தமுறமெய்ப்பூசுபுண்ணியநீறேபிறிதோ. (உரு)

பிரியமிகவனைத்தினுக்கும்பிரமாணமாயமறை
தெரியவெடுத்தினிதுரைத்தல்சிவலிங்கார்ச்சனையொன்றே
யுரியவெனப்பிறர்வடிவமுரைத்ததுமற்றுண்டுகொலோ
வரியதலத்திருமைந்தவறைவதெவனிதனமேலும். (உசு)

ஆதலினம்பரசிவனையரிபிரமாதியர்பல்லோர்
காதலிற்பூசனைபுரிநதுகருதியதெய்தினரின்னு
மேதமறயானைமுதலெறும்பீருதிப்பலவுட்
போதமுறப்பூசித்துப்பொலிந்தவைக்கோரளவுண்டோ. (உஎ)

இன்னுமுயர்பரசிவனையிருதினையினுயிரனைத்து
மன்னும்வழிபாடியற்றிவயங்கியவைக்கறிகுறியா
மின்னுபலதலம்பொலியுமின்றியினிரனையபிரா
னுன்னுமொருவனைப்பூசையுஞற்றியதுமுண்டுகொலோ. (உஅ)

விச்சுவமென்றெடுத்தியம்பவிளங்குவானொருமுகுந்தன்
விச்சுவத்திற்கதிகனெனவிளங்குவான்பரமசிவ
னெச்சமென்யாவர்களுமியம்புவார்மாயவனை
யெச்சவதிபதிசிவனேயெனப்புகலுமெம்மறையும். (உகூ)

பரசிவனேபிரமமெனப்பன்மறையுமெடுத்தோது
முரனிலானையும்பரமென்றோதிடுவதென்னையெனில்
விரவுமுபசாரமேயன்றியுமேவுயிர்ப்பரப்பின்
றரமுணர்ந்தும்போதுமெனச்சாற்றுவார்சான்றோரே. (௩௦)

படைத்தலொடுகாத்தலுநம்பரமசிவன்புரிதொழிலே
படைத்தலயனொருழிலெனிற்பாறியவோர்தலையின்னும்
படைத்தறனக்கியற்றுகிலான்மால்காப்பனெனப்பகரிற்
படைத்தமகாருறுபபழிவுமுடம்பழிவும்பார்த்திருந்தான். (௩௧)

எம்பெருமானித்தியமுமேனையோரனித்தியமு
நம்பமையமறையாதியெடுத்துநவின்றிடவேண்டா
கம்பமுறவருகற்பகாலங்கடோறுங்கவர்ந்த
வம்பதுமன்முதலியர்தந்தலைத்தொடையேயறிவிக்கும். (௩௨)

ஆயமலரவனாதியமரரொலாம்பசுக்களே
மேயபசுபதிசிவனேவிளம்புவதெனின்னுங்கே
ணேயமிகுமாதேவநின்மலன்வானபரவையிடை
மாயவனாதியரொருதிவலையாமெனறுணருதியால். (௩௩)

அந்தமாதேவனேயகிலகாரணன்காண்டி
பந்தமுமற்றஃதொழியப்பற்றுமொருபெருவீடு
நந்தவனருளன்றிநண்ணார்நண்ணுவாரெடுவா
னுந்தவமைபசுநதோலிறசுருட்டும்வலியுளராவார். (௩௪)

மன்னியவப்பரசிவனையவனமாமாத்தலத்தடைந்து
நன்னியமத்தொடுபோறறிககருதியதுநன்கடைவாய்
முன்னியநின்கருமமிடையூறினறிமுறறுகவென்
றன்னியமில்கருத்தமனனகருளிவிடைகொடுத்தனனே. (௩௫)

வேறு.

தநதையாருரைத்தவார்த்தைதலைகொடுபுண்டரீக
னிந்தைதீர்தலத்தின்மிககதெதுவெனநினையுங்காலை
முந்தையோர்பலருங்காசிமுழுநகரடைதியெனனச்
சிந்தைகூர்களிப்பிறேடுதிருத்தலம்வநதுபுககான். (௩௬)

ஆனநதவனத்துமேயவளமெலாமமையநோக்கி
யானந்தம்பயப்பதற்கோரளவுமினறென்றுதேர்நதே
யானநதவறமுண்டாக்குமறபுதக்கங்கையாடி
யானந்தவுருவமாநம்மருட்குறிபணிநதெழுநதான். (௩௭)

கங்கையினன்னீராடல்காலங்கடோறுஞ்சார்ந்து
செங்கையின்மழுமானேந்தித்திகழுநங்குறிசேவித்த
லங்கையிற்கண்ணாய்நீயாமன்னபூரணியைப்போற்றல
சங்கையினியமங்கொண்டான்றவத்துயர்புண்டரீகன். (௩௮)

இந்தநன்னியமம்பூண்டேயிராயிரவருடங்காறு
நந்தவெம்பொறியடக்கலாதியநயந்துமேவும்
பந்தமின்முனிக்குக்காட்சிபாலித்தேமல்லேமாக
வந்தநன்முனிவனுள்ளத்தவலத்தாற்கவலலுற்றான். (௪௯)

இரங்கிடுகாலைவாமதேவமாமுனியாங்கெய்தி
வரங்கிளரொருநீநெஞ்சமாழாந்ததென்னையென்னப்
பரங்கிளருடம்பினோடுமுத்தியிற்படர்தல்வேட்டேன்
கரங்கனன்மழுவேந்தண்ணல்கருணைசெய்திலனாலின்னும். (௫0)

அதுகுறித்திரங்குகின்றேனையனேயென்றனன்றான்
விதுமுடிப்பெருமானீங்குவீந்தார்க்குத்தன்சாரூபங்
கதுமெனக்கொடுப்பதன்றிக்கருதியதளித்தல்செய்யான்
மதுமலர்ச்சூதக்காஞ்சிமாநகர்குறுகுகென்றான். (௫௧)

மொழிபுகழ்வாமதேவமுனிவன்சொலுள்ளங்கொண்டு
கழிதவப்புண்டரீகன்காஞ்சிமாநகரஞ்சென்று
பழிதபுகம்பையாதிப்பற்பலபுனலுமாடி
யிழிவறுசூதநீழலெம்மையாங்கிறைஞ்சினானே. (௫௨)

கறைதபுகாமக்கண்ணியெனும்பெயர்கலந்துவாழு
மறைபுகன்னியையும்போற்றிவழுத்துமத்தலத்தின்கண்ணே
முறைமையினொருகாரோணமூர்த்தியைத்தாபித்தன்பிற்
பொறைமிகவாண்டுபன்னீராயிரம்பூசித்தானால். (௫௩)

ஆங்குநாங்காட்சிநல்கேமாயினேமதுதெரிந்து
பாங்குசால்புண்டரீகன்படருற்றுத்துயருங்காலை
யீங்குமேவினருடம்போடுறுமுத்தியெய்தாதாகும்
வீங்குபோகாதியாவும்வீசுதல்கூடுமோர்தி. (௫௪)

ஆதலிற்கும்பகோணமடுத்துநீபூசிப்பாயேற்
காதலிற்பெறுவாயென்றுகருதசரீரியானு
மோதலிற்களிப்புமேவியொருகும்பகோணஞ்சார்ந்தான்
போதலிற்கருதன்முற்றப்புணருமென்றுள்ளங்கொண்டே. (௫௫)

மன்னுமத்தலத்தின்மேலாமாமகதீர்த்தமாடித்
துன்னுநந்திருமுனும்பொற்றாமரைப்புனலுந்தோய்ந்து
பன்னுநங்குறியும்போற்றிமங்களப்பெயர்பரித்து
பின்னுநின்றனையும்போற்றிமற்றவும்விருப்பிற்றாழ்ந்தான். (௫௬)

எண்ணியவாங்குக்காயாரோகணலிங்கந்தாபித்
தண்ணியவன்பினெண்பானாயிரவருடம்பூசை
பண்ணியமுனிவனுக்குப்பருவம்வந்துற்றமையாலே
கண்ணியதருளாவண்ணமிருந்தனங்கருக்கட்பாவாய். (௫௭)

இத்தனையாண்டுப்பூசையியற்றியுமிருவர்தேரு
வத்தனையடியுர்க்கெய்ப்பில்வைப்பெனவருளனாதி
மூத்தனையடையப்பெற்றேமலமென்றுமுனிவன்வாடிப்
பித்தனிகர்ப்பமேன்மேற்பெதுறுகின்றகாலை, (௪௮)

கண்ணுவமுனிவன்றோன்றிக்கருதியதடைய்வேண்டி
லெண்ணுவதினியொன்றின்றியிராங்குகீழ்ப்பரவைக்கோட்டி
லண்ணுவமானமில்லாவாதிபுராணஞ்சார்ந்து
பண்ணுவதாங்குச்செய்யிற்பலித்திடுநினைத்ததென்றான். (௪௯)

முனியுரைதலைமேற்கொண்டுமொய்வளக்குடந்தைநீத்தே
யினியதுசெய்வேனென்றுச்சிவராசதானியென்னும்
பனிமலர்ப்பொழில்சூழாதிபுராணமாத்தலம்படர்ந்து
துனிதவிர்தேவதீர்த்தமுதற்பலபுனலுந்தோய்ந்தான். (௫0)

பொருந்தவங்கமருமாதிபுராணப்பெருமையுமென்மைக்
கருந்தடங்கண்ணியென்னக்கலந்தமர்நினையும்போற்றித்
திருந்தும்வண்சறுவதீர்த்தத்தென்மேறகாச்சிரமஞ்செய்தாங்
கருந்தவர்தொழுங்காரோணலிங்கமும்பதிட்டையாற்றி. (௫௧)

அந்தமாலிங்கத்திற்குமளப்பருமன்புபொங்கச்
சந்தமென்மலர்களாதியாவையுநதழீஇப்பூசித்துப்
பந்தமுற்றொழியுமாறுபரவிநன்கமர்முனிக்குக்
கந்தமென்மலர்ப்பூங்கோதாய்காட்சிதந்தருளினேமால். (௫௨)

காட்சிதந்தருளலோடுங்கதுமெனவடியில்வீழ்ந்து
மாட்சிசாலன்பர்வாழ்வேவருபவப்பிணிமருந்தே
மூட்சிசால்விருப்பிற்பன்றுண்முயன்றனனின்றாள்காணப்
பூட்சியோடடியேனின்னைப்புணர்திறமருளாயென்றான். (௫௩)

முன்னியபுண்டரீகமுனிவநம்மூன்றுங்காட்சி
மன்னியகாலத்தெண்ணம்வாய்த்திடப்பெறுவாயென்று
நன்னியமத்தவற்குநாஞ்சொல்லிமறைந்தேம்யாரும்
பன்னியலிங்கத்துள்ளாற்பனிவரைபயநததோகாய். (௫௪)

உரைத்தருளியசொற்கொண்டேயுறுவரோறுபோல்வான்
விரைத்தபூம்பொழில்சூழாங்கேமேவிநோற்றிருந்தான்மாண்பாற்
புரைத்தநாமெழுவாய்க்காட்சிபுணர்த்தியதுணர்தியென்று
ரைத்தசாந்தளாயகொங்கையம்மையுள்ளுவகைபூத்தாள். (௫௫)

பந்தமில்புண்டரீகப்பணவனுக்கெழுவாய்க்காட்சி
தந்தமையெடுத்துச்சொற்றுஞ்சிவராசதானிமேய
வந்தமிலனையமூர்த்தியணிகிளரிரண்டாங்காட்சி
கந்தநன்கருளுமாறுநாமினியுரைக்கலுற்றும். (௫௬)

புண்டரீகமுனிவர்முதற்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம்-அ-இ-திருவிருத்தம்-ருகக.

# புண்டரீகமுனிவரிரண்டாங்காட்சியுரைத்தபடலம்.

பொருவுதவிர்சனற்குமரனந்திபிரானடிவணங்கிப்புண்டரீகன்
வெருவுதவிர்சிவராசதானியாச்சிராமத்துவிருப்பின்மேவி
மருவுதவிராவிரண்டாங்காட்சிபெற்றவரலாறும்வகுத்தியென்ன
வொருவுதவிர்நயசுருணத்தனையன்மனமகிழ்ச்சிமிகுந்துரைக்கலுற்றான். ()

சிற்றுதரம்வருந்தாமலண்டபகிரண்டமெலாஞ்செழிக்கவீன்றுஞ்
சற்றுமொருதளர்ச்சியுறுதிளங்கன்னியாயமருஞ்சயிலப்பாவை
கற்றுநவில்புகழ்முனிக்குநீயிரண்டாங்காட்சிதந்தகருணைகேட்கும்
பற்றுமிகுந்தனனெனப்பன்னூலகுமுய்யவிடமுண்டபரமன்கூறும். (௨)

மாண்டதவப்புண்டரீகப்பெருமாமுனிகிரியைவழுவாதாற்ற
நீண்டமனமுடையானுய்வகைநயிற்றுயிலெழுந்துநிகரிலாமை
யாண்டநறுந்தேவதீர்த்தங்குடைந்துவெள்ளியநீறணிந்துமேன்மை[யான்
பூண்டமணித்தொடைபுனைந்துபிடகைகொடுநந்தவனம்புகூஉப்பூக்கொய்

நந்தியாவட்டமாதளைசந்துகூதாளநரந்தநாவல்
புந்திகூர்மாலூரமந்தாரமாஞாழல்புன்னாகஞ்செவ்
வந்திபாடலங்கன்னிகாரமாமலகமார்மாயோன்காந்தி
முந்தியாம்விழைகொன்றைதேங்கொன்றைவகுளநீர்முள்ளிகாஞ்சி. (௪)

சிந்துவாரங்குரவஞ்செவ்வகத்திநீர்மிட்டான்செருந்திவேங்கை
நந்துநாயுருவிபொன்னாவிரைகுருந்துவன்னிகுசைநாணல்காயா
முந்துமோரிதழ்க்கமலம்வழைகொக்குமந்தாரைமூளரிதான்றி
யுநதுபொன்னூமத்தைகூத்தன்குதம்பைசெவ்வரத்தமுயரசோகம். (௫)

மருவருக்கம்வெட்பாலைவெள்ளிலோத்தம்பூளைமாவிலிங்கம் [ளை
கருவிளம்பன்னீர்திலமார்பலாசு பட்டிபருத்திவெண்காக்கணஞ் செங்கீ
யொருகுவளைசேதாம்பல்சதகுப்பைவெட்சிதுழாயோங்குவாகை
கருநிறத்துமலர்ச்செம்பைகண்டங்கத்திரிகிளுவைகரந்தைகாளா. (௬)

கொழுந்துவிளாவலரிதுரோணங்கரீந்தள்வெட்டிவேர்கோட்டந்தாழை
யெழுந்துபொலிவிலாமிச்சவேர்மஞ்சணத்திகடம்பிரவிகாந்தி
செழுநதகைவெற்றிலையறுகுகருங்காலிகுளவிபச்சைசிறந்தசாலி
தழுந்தரம்பாரழிஞ்சில்வழுதுணைமயிலையொண்பாரிசாதந்தாளி. (௭)

வதரியெனுமிச்சைபுலிதொடக்கிநறுமல்லிகையவாங்குச்சிப்பு
லித்திமிருசண்பகமாதிப்பற்பலவுமிதப்பக்கொய்தெடுத்துக்கொண்டு [ஞ்
கதமிலொருதலையமைத்துமாலையு மிண்டையுந்தொடையுங்கண்ணித்தாரு
சுதமினமையலங்கரிக்கத்தக்கபடிமுயன்றமைத்துத்தொகுத்தபின்னர். ()

வண்டுபடுமொரங்கண்ணிவளவர்பிரான்முனிவர்பிரான்மாண்புதேர்ந்து
கொண்டுபரிசனம்பூசாதிரவியமுனையவுங்கொடுத்துவேண்டக்
கண்டுமகிழ்ச்சியிற்றழுவிக்கதிர்முதிர்முன்மஞ்சனநீர்கனிவிற்றெவ்வீ [டு.
யண்டிநிறைதொறுநிரப்பித்துடிகருப்பூரம்பொடித்திட்டமைத்துக்கொண்

பலநிவேதனமமைக்கச்சிலரையேவிப்பசுங்கர்ப்பூரமாதிப்
பலவிராய்ச்சாந்தமைக்கச்சிலரையேவிப்புனிதம்பாத்திரங்கள்
பலவும்வாய்த்திடவியற்றச்சிலரையேவிக்கனிவுபரவபூக்கள்
பலவிராம்புனைமீட்டுங்குடைநறுநீற்றொடுகணமணிபராய்த்தரித்தே. ()

தெளிவளராய்பதமைந்துமுளத்தெண்ணியன்பொடுநற்றிருமுன்போந்து
களிவளர்நம்மனுவைஞ்பெற்றுவிதிவழியேபுண்ணியாகவாசனஞ்செய்
தளிவளர்கௌவியபூசையாற்றியமுதோரைநதமமையப்போற்றி
யொளிவளரொன்பதுகும்பநிறீஇததொழுதுதழற்கருமமுஞறறினனே. ()

ஒருமருப்பன்முதலாயதுவாரவானவர்பூசையுவந்துசெய்து
பொருவரியகருக்கிரகம்புகுநதுவரநதிபூசைபொலியவாற்றிப்
பெருவலியிறபூதசுத்திதானசுதநிமனுச்சுதநிபெருககம்வாய்நது
மருவுதிரவியசுத்தியிலிங்கசுதநியோரைந்துமாணவிறைற்றி. (கஉ)

சொற்றபாத்தியமுமாசமனமுநல்லருகநியமுநறுய்தாபபண்ணி
யுறறவாதாரசதநிமுதற்சத்திமண்டலமீறுறப்பூசித்துப்
பற்றவாவாகனமுந்தாபனமுமுளததனபுபநியவாறறி
மற்றவாறைந்தன்மேலெட்டங்கநியாசமுநனமாணவிறைற்றி. (கங)

கூறுசந்நிதானமொடுசநநிரோதனமவகுண்டனமுஞ்செய்து
பேறுதருநற்றேனுமுததிரைமுற்பறபலவும்பிறஙகநலகி
வீறுகெழுபாத்தியமாசமனமருகநியங்கொடுததுவேலையேழு
மாறுகொடுமுழங்கியனவியமுழங்கவபிடேகமாண்பிற்செயவான். (கச)

ஆன்றநறுநதயிலமாகெல்லியரிசனங்குடஞ்சுட்டமைநதவைநது
சானறவமுதைநதுநெய்பாறயிர்சுவைத்தேனயிரரமபைதழைவருககை
யென்றநறுஞ்சூதமுயர்கருப்பஞ்சாறிலிகுசத்தினெடுத்தசாறு
தோன்றநரநதக்கனிமாதுளங்கனிதமரக்கனியிறறெருகுததசாறு (கரு)

மேயவிளநீரடிசிலசாநதுதபனங்கங்கைவில்வசசாறு
பாயசகத்திரதாரைசிருங்கம்வலம்புரிமுறைமையப்பவாட்டி
நேயமுறவாட்டுதொறுமிடையிடைசசுததோதகநன்னிவேதனநி
யாயபுரிநதொறறுண்டையிட்டுமிளிரபரிவட்டமலங்கச்சூழ்நது. (கசு)

தூயவுபவீதமெடுத்தணிநதுமணிமுடிகுழைபொறசுடர்கேயூர
மாயவொளிபடுவயிரகடகமணிமதாணியொளிராழிநாண்மு
னேயமலிதரச்சாத்திநீறெடுசாந்தணிநதுதொடைநிரம்பச்சூட்டிப
பாயநறுநதுபமொளிர்தீபமெடுத்துறவயக்கிப்பண்புமேவ. (கஎ)

நாடுதளவரும்பனசுத்தோதனமொண்பருபபடிசினன்பாற்சொன்றி
நீடுகுளப்பொம்மல்புளியடிமிதவைதிலமூரனெய்யிரேடு
கூடுசருக்கரைவல்சிமரிசயினிதநிமடைகுய்கோலச்செய்து
வாடுதவில்சுவைக்கருனைபாகரிலட்டுசெர்தோசையளங்கூர்பிட்டு (கஅ)

பண்ணியமோதகமுழுந்தவடையினியநோலைமற்றும்பகராபூபந்
தண்ணியதெங்கிளநீரின்குளநீர்வண்பழநீர்மோர்சார்ந்தனூநீர்
கண்ணியவொண்சுத்தநீரிவையனைத்து மொரோவொன்றுக்கனிவினல்கிப்
புண்ணியமாருக்கியர்தாம்பூலமுகவாசமுறைபொலிவினீந்து. (௧௯)

விரைகெழுதூபங்கொடுத்துமேலடுக்குதீபமுதல்விளம்பாநின்ற
புரையில்பலவாகியவாராதனமும்புரிந்துமணப்பூக்கவேவிக்
கரையுநீராஞ்சனஞ்செய்தபின்பளிதவிளக்கெடுத்துக்கனிவுமேவ [நி
வுரைபருத்திவித்தொடுவேப்பிலைசுழற்றியெறிந்துவெண்ணீறுளிரச்சாத்

திருந்துநருப்பணங்கவிகைவெண்கவரியாலவட்டஞ்சிவிறியாய
பொருந்துமிவைநேர்வயக்கிப்புதுமலரக்கதைசாத்திப்புனிதந்தீரா
திருந்துதிகழருக்கியமுமீந்துபலமலரிடக்கையேந்திச்சன்ம [னி.
மருந்துபுரையைந்தெழுத்தும்வலக்கையிற் கண்மணிமாலை வாங்கியெண்

ஆயவினிதாகியநம்மடிமலரிற்சாத்தியபினட்டாங்கத்தி
னேயமிகப்பணிந்தெழுந்துதுதித்துவெளிவந்தொருசார்நிலவுமேவிப்
பாயநமதருளுருவங்குறித்தமர்ந்துபின்னெழுந்துபணிந்தின்றூர்க்கு
மேயபிரசாதநல்கிவிதிப்படிநின்னையும்பூசைவிரும்பிச்செய்வான். (௨௨)

காலைவளச்சுரதீர்த்தம்படிந்திவ்வாறியற்றியவக்கருத்தமன்சேய்
பாலைநிகர்மொழிமடவாய்முனிதீர்த்தமுழுகுபுநண்பகலாமுச்சி
வேலையினமுன்சொற்றபடியெம்மையுநின்னையும்பூசைவிழைந்துசெய்வான்
மாலையில்வண்காகநீர்தோயந்துபூசனைபுரிவான்மகிழ்ச்சிபொங்க. (௨௩)

பொய்யினொடுகூடாதபுண்டரீகப்பெயரோன்புக்கிலாய
மெய்யினொடும்விடலுடையான்சருவதீர்த்தம்படிந்துமேலோங்கன்பின்
மொய்யினொடுவேண்டுவகொண்டத்தயாமப்பூசைமுயன்றுசெய்வா
னெய்யினொடாங்குழலாய்நித்தியமிதுநைமித்தியமுநிகழ்த்தக்கேண்மோ.

பனிவரையின்முளைத்தமலர்ப்பசுங்கொம்பேநமக்கன்புபரிபயார்தம்மிற்
புனிதநனியுடையவனம்மடியவரைநாமென்றேபுந்திசெய்வோ
னினியபுனலுடனிப்போன்முனமொழிந்தவளவன்வருமிடையூறேட்டி
முனிவனுளமெப்படியப்படிநடக்குமொருவிரதமுன்போற்பூண்டான். ()

வேறு.

[டைப்
திருகுகோட்டுச்செழுந்தகர்த்திங்களில், வருகுணைத்தநெய்வான்றிருநாளி
பெருகுவாசகசொழுந்துபெருக்கியே,யுருகுமன்பினுஞற்றுவன்பூசனை. ()

கொழுவியிற்பெருங்குண்டைமதிவரு,செழுமுறத்திருநாளிற்சிறப்புறத்
தழுவுசாந்தநக்கொடுபோற்றுவான்-வழுவிலாதமுனிமலைமங்கையே ()

மேயதுயமிதுனமதியிடை, யாயவன்றிலடைதிருநாள்வயிற் [னே.
பாயமூன்றுயபழமுங்கொண்டேத்துவான், மாயவாழ்க்கைமதியாமுனிவ

கவைபடுங்காற்கடகமதிவரு, நவையிலாதவுடைகுளநாள்வயிற் [விறுய்
செவையினும்பயங்கொண்டுசிறப்பிப்பான், குவையருமலர்கொண்டளுழ

பரவுகின்றபஞ்சர்னைத்திங்களில், வரவுமேவியமாயவனுளிடை
விரவுசீரயிரர்ன்மிகப்போற்றுவான்,புரவுமேவிப்பொலியுங்கைமாதராய்()

விரைநறுங்குழற்கன்னிமினிர்மதிக், களைசிறப்பிற்கடைக்குளநாள்வயிற்
புரையிலாதவபூயத்திற்பூசிப்பான்,வரையுதித்தபைந்தோகைமயிலனாய். ()

தொக்கமேன்மைத்துலாமதிவாய்ப்பகை, யுக்கஞூலமுறுந்திருநாளிடைத்
திகைவாவுபதத்திற்சிறப்பிப்பா,னக்கதாமரைபோன்முகநங்கையே. (௫௨)

தட்டனென்றுசொலப்படுந்திங்களி, லிட்டமாமறுநாளிலிலகுறப்
பட்டதீபம்பலகொடுபூசிப்பான், வட்டமாமுலைவாள்விழிமாதராய். (௫௫)

குனிசிலைப்பெயர்கொண்டமதியிடைப்,புனிதமாகியசெங்கைபொருந்நா
ளினியவானநெய்கொண்டினிதேத்துவான்,கனியுநாணக்கரையுமின்சொல்
விளுய். (௫௬)

இரையுலாமகரப்பெயர்சேர்மதிப்,புரையிலாதகொடிறுபுருந்தின[ரத்தாய்.
முரைசிறந்தசெந்தேன்கொண்டுவப்பிப்பான்,றரைமுன்யாவையுந்தந்தவுத

கோலமேயகுடப்பெயர்த்திங்களின், ஞாலமேத்துங்கொடுநுகநாளிடைக்
காலவாயநெய்க்கம்பலஞ்சாத்துவா, னேலமார்ந்தகருங்குழலேந்திழாய்

விடையமைந்துவெடித்தெழுமீன்மதிக், கடையெழுஞ்சனிநாளிற்கனிவுற்
வுடைதராததயிர்கொண்டுவப்பிப்பா,னடையினேதிமானுறநாட்டுவாய்.

இந்தவாறுரைமிததியமென்பது,நந்தநாளுநடாத்துந்திறலினுன்
பந்தமோவப்பனவர்குலமெலா,முந்தவாற்றுதவத்தின்முளைத்துளான். ()

பிணையுமின்னைவைபோனுவதன்றியுந்,துணையிலாதவத்துங்கமுனிவர
னணையுநாளொன்றனுக்கிலக்கம்பிரண்,டிணையிலாதவெழுத்தைந்துமெண்
[ணுவான்.(௫௯)

புண்டரீகன்பொலியும்பெருந்தவங்,தண்டவானவர்கோனுட்கவலுரு
வண்டரோடினிதாய்ந்துசிதைத்திடும்,வண்டவாவுகைமாதரைக்கூவினான்.

அரம்பைமேனகையாதியமாதரார்,வரம்பையோவியமாமைசுமந்துளார்
திரம்பைநாகஞ்சிதைத்திடுமல்குலார்,சிரம்பைமுன்னருற்றீதுநிகழ்த்து
[வார். (௬௧)

வேதனுவியலைத்திடல்வேண்டியோ,வோதமீதிலுறங்குமுகுந்தனு [யோ.
மாதகாதெனவாற்றுதல்வேண்டியோ,மாதவத்தனைவாட்டுதல்வேண்டி

இன்றுநீவிரைந்தெம்மைவிளித்தது,குன்றுசெற்றகுலிசப்படையினு [ன்.
யென்றுகூறலுமிந்திரனேதுவ,தொன்றுகேண்மினென்றோதுதன்மேயினு

குணகடற்பெருங்கூலத்தொருதலம்,புணருமாதிபுராணமெனும்பெயர்த்
தணவுமத்தலத்தாய்புண்டரீகன்செய், மணவருந்தவமாற்றுதிர்போமென்
[றான். (௬௪)

என்றுகூறலுமித்துணையோவெனு,மின்றுநக்குநிலத்தரமங்கைய [யார்.
ரன்றுவந்தனராதிபுராணத்தைச்,சென்றுசேர்ந்தனர்வென்றிடுஞ்சிந்தை

புண்டரீகமுனிவன்முன்போயினார், பண்டவாதவிசைபலபாடினு
ரொண்டவாதநடமுமியற்றினார்,தண்டமீதுவிழுந்துந்தழுவினார். (௪௬)

நம்மையேயுளங்கொண்டுநயந்திடுஞ்,செம்மையாளனிச்செய்கையுணர்ந்தி
லான்,கொம்மைவெம்முலைக்கோடுறத்தாக்கவுந், தம்மைவாட்டுதறியுமோ
[த்தானரோ. (௪௭)

கண்டமங்கையர்நாணங்கதித்திடக்,கொண்டனார்திருமுன்குறுகினார்[ர்,
விண்டவாவத்தலப்பெருமேன்மையாலொண்டவாமனுறையுமுனியென்று

இனியிபறறுவதென்னையெனக்கவன்,றனியமோவியவாண்டளப்பாளொடு
ம், புனிதவானவரும்புடைசூழ்வரப், பனிமலர்த்தலையான்பதஞ்சார்ந்தன

தானவேநதன்வரவுதகத்தெரிந், தானவேதனவனொடுமேவியே [ன்.
மீனவேலைவிழிதுயில்பைநதுழாய்க், கானமார்பனைக்கண்டுரையாடினான்.

அன்னரோடுமனையனம்பாலடைந்,தன்னருநதவத்தோங்குமொருமுனி[ம்
முன்னமேவிமுழுதருள்செய்யென, நன்னர்யாமவரோடங்குநண்ணினோ

புண்டரீகன்பொருக்கென்றெழுந்தொரு, தண்டனோத்தரையிற்பணிந்தன
னண்டருக்குமனுகருங்காட்சியான், கண்டதென்னனமென்றுகளித்தனன்.

உறுவகேண்முனுரைத்தபடிமறரோர், மறுவில்காட்சியில்வாய்ப்பநின்னெ
ண்ணமே, பெறுவையெனறுறபபேசிப்பல்லாரொடு, மறுவிலாதமர்நாம
[றைந்தாமன்றே. (௫௩)

பொங்குகேள்விபடுகரின்முனிவரன், றங்குமோகைதவாதுதலைக்கொளத்
தெங்குவார்பொழில்சூழத்திருநக,ரங்குமேவியருந்தவமாற்றினான். (௫௪)

பற்றுநீத்தபடிமையர்யாவரு, முற்றுநோக்கியுறுவதிதுவெனுக் [துவாம்.
கற்றுமேவிரண்டாவதுகாட்சியைச், சொற்றுளாமினிக்காட்சியுஞ்சொல்

புண்டரீகமுனிவ ரிரண்டாங்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம்-௯-இ திருவிருத்தம்-௫௪.

## புண்டரீகமுனிவர்மூன்றாங்காட்சியுரைத்தபடலம்,

மாதவச்சனற்குமாரன்நதிவானவனைப்போற்றி
மூதறிவுடையனையமுனிவற்குமூன்றாங்காட்சி
மேதகுபெருமானல்குகருணையும்விளம்புகென்னச்
சீதளவதனங்காட்டிமகிழ்ச்சியிற்செப்புகின்றான். (௧)

சரர்சரமனைத்துமீன்றதாயிளங்கொடிவணங்கி
நிராமயபரமானந்தநிருமலபுண்டரீகன
பராவநீமூன்றாங்காட்சியாலிப்பின்முற்றுநந்த
புராதனசரிதங்கூறெனவிரத்தனும்புராணன்கூறும். (௨)

ஒருவினம்பிரண்டாம்பாதமூணங்கொடுகருமமாற்றிப்
பொருவருஙாலாம்பாதமெய்யொடும்புணர்தல்வேட்டான்
கருவடர்புண்டரீகன்கருதினிதிறம்பூதின்னு
மருமலர்க்கிழவனுதியெவர்க்கும்வாய்த்திடுவதன்றே. (ந.)

அம்மையென்றுலகமேத்துமருட்பசுங்கொம்பேமிக்க
செம்மைகொள்புண்டரீகன்றிகழ்மனவாக்குக்காய
மும்மையுமுலகமாயமூன்றினுமுய்த்தல்செய்யா
னம்மையேகுறித்துநிற்பானிருவினைகலிவுநீர்ந்தான். (ச)

பொறையுருவமைந்தகோதாய்பொறியைநதுமடக்கிநாளு
நிறைதவஞ்செய்தலன்றிநிரம்புங்குறியையபோற்றி
முறையுறச்சூழ்தலோடுமூழ்குதீர்த்தமுமயாவோரு
மறைசெய்க்ஷேத்திரமுஞ்சூழ்வானருநதவமுருக்கொண்டன்னான். (ரு)

இறைசெய்திர்த்தங்களெல்லாஞ்சென்றுசென்றன்பினுடிக்
கறைசெய்வெண்ணீறுபூசிக்கண்மணிமாலைபூண்டு
புறைசெயைநதெழுத்துமெண்ணியபோக்கருங்கனிவுபொங்க
விறைசெயங்கதுபனில்லாய்மேதகநமைப்பூசிப்பான். (சா)

அலங்குநங்கோயின்மேவியலகிடன்மெழுகன்மற்று
மிலங்குபஃறீபமேறறலாதியவியற்றுவாறை
விலங்குவெங்கரணமொன்றிவிரும்புமைஞசுத்தியாற்றித்
துலங்குநம்பூசைசெய்துதொழுதுதோத்திரஞ்செய்வாறை. (எ)

வளியிருவழியுஞ்சேறன்மாறறுபுநாப்பணுடி
யுளியெழவெழுபிரம்மையுணர்ந்தனரிருக்கின்றுறை
விளிவின்முபபொருளுமோர்ந்துவெவ்வியபாசநீங்கிக்
களிகொளநம்மோடொன்றுதொனறிவாழ்கலப்பினுறை. (அ)

கண்டிடுதொறுமார்த்தாண்டன்வரவுகாண்கமலப்போது
கொண்டிடுவிகசிதந்தன்குருமுகத்தியல்பேய்ந்தான்ற
மண்டிடுமிடியன்செம்பொன்வைபபெதிர்கணடாற்போன்று
விண்டிடுமுகமனோடுவிறைந்தெதிர்சூழ்இயுவப்பான். (கூ)

இன்னணமொழுகுநதுயோவிறையவன்மூன்றுங்காட்சி
நன்னாயாம்பெறுவதெந்தஞானறெனவுள்ளத்துள்ளி
முன்னருஞ்சறுவதீர்த்தமுழுகுபுகறைமேல்வநது
பன்னருமாங்குமேவுநங்குறிபரவிப்போற்றி. (க0)

ஓங்குதென்கறைப்பாலெய்தியுயர்குணதிசையைநோக்கிப்
பாங்குசேர்சுகாசனத்துப்பண்புமேவுறவிருநது
வீங்குஞானமூகன்மால்வேதவேதாநதமுணரொணுத
தேங்குபேரொளியாநம்மைச்சிந்தையிற்பதித்திருந்தான். (கக)

என்றுமோர்பொழுதேசற்றுண்டிரவுளுப்புண்டரீக
னன்றுதொட்டொருநாள்விட்டுமெழுமதரவிருநாள்விட்டு
மொன்றுறமுந்நாள்விட்டுமொருங்கொருபக்கம்விட்டு
நன்றொருமதியம்விட்டுகோடாதுசிறிதுண்பானால், (௧௨)

அயனமொவ்வொன்றுநீத்துமொவ்வொராண்டமையநீத்தும்
பயன்மிகவுடையுமாண்டுபன்னிரண்டொருங்குநீத்தும்
வியனுறநூறுநீத்துஞ்சிறிதுணவிழையுமன்று
னியலுமெவ்வுணவுநீத்தானிருந்தனன்கற்றூணத்தே. (௧௩)

இவ்வண்ணமிலக்கமேலோரிருபானுயிரமாண்டெல்லை
யவ்வண்ணமாயநம்மையகங்கொடுபுண்டரீகன்
மெய்வண்ணத்தவத்துமேவமேற்பொங்கியெழுந்ததம்மா
செவ்வண்ணத்தீயினோடுஞ்செறிபுகைப்படலமென்மேல. (௧௪)

தடநெடும்புகைமேற்பொங்கித்தானமூற்புவனமெல்லாம்
படருபுவெதுப்பலோடும்பண்ணவர்நடுநடுங்கிக்
கடவுவெண்களிற்றன்பாதங்கலந்தனரிறைஞ்சிக்கூற
மடனின்மற்றவனோர்காலைமகதியாழ்முனிவன்வந்தான். (௧௫)

வந்தமாமுனியைத்தாழ்ந்துமணஞ்செய்கற்பகத்தார்வேந்த
னிந்தவான்றூமமேவற்கேதுநீயுரைத்தியென்ன
நந்தனமுகத்தானவாழநகாநின்றும்வருதல்செய்வேன்
சந்தமார்புண்டரீகன்றனாததலைத்தவஞ்செய்கின்றான். (௧௬)

அன்னவன்றவத்தாலாயதூமமென்றறைந்தாராங்கு
முன்னமேயுணர்த்தேனென்றுமொழிந்தனனெழுந்துபோனான்
கொன்னவில்குலிசத்தோளான்குலவரம்பையரைக்கூவிப்
பன்னரும்புண்டரீகனபயிறவஞ்சிதைப்பீரென்றான். (௧௭)

செழுமணிவயிரத்தூணைச்சிதலரியரித்திட்டாலு
முழுமுதற்பரனையாலமுயன்றெழுந்தடாநிட்டாலும்
வழுவின்மற்றவனைக்காமன்மலர்க்கணைமயக்கினாலும்
பழுதிலம்முனிவனோன்புபாழ்றுதெம்மாலென்றார். (௧௮)

இனியெவன்செய்துநாமென்றிலேகர்தங்கூட்டத்தோடும்
பனிமலர்க்கிழவன்பாங்காப்படர்ந்தவன்பாதம்போற்றி
முனிவரன்றவத்தாலாயமுழுப்புகைமுருக்குந்தன்மை
நனியெடுத்துரைத்தான்வானநாட்டவன்கேட்டவேதன். (௧௯)

விரையவிந்திரனோடும்பால்வேலையினடுவட்பச்சை
வளாபலகமலம்பூத்துமாநாகமிசைக்கிடந்தாற்
புரையறம்மானைத்தாங்கிவிழிவளர்புயலைச்சார்ந்தா
னுரையமைவணக்கஞ்செய்தாங்குரைத்திடலுற்றானன்றே. (௨௦)

திருமகண்மணாளனேன்மோதிரைக்கடல்வளாகத்துள்ளா
லொருமுனிதவஞ்செய்கின்றானுறுபுலைகப்படலையாலே
கருகியவனைத்துமோர்ந்துங்கண்டுயில்கின்றாயென்னப்
பருவரலொழிமினென்றுபகர்ந்தனனெழுந்தானன்றே. (உக)

மாயவன்பிரமனாதிவானவரொடும்விரைந்து
தூயநந்திருமுன்வந்துதொழுதவிண்ணப்பஞ்செய்ய
நேயமால்விடைமேற்கொண்டுநிரம்பியவவர்களோடும்
பாயபல்கணமுஞ்சூழமுனிவன்முன்படர்ந்தாமன்றே. (உஉ)

காட்சிதந்தருளநம்மைக்கண்டுவெல்விலாநதெழுந்து
பூட்சியோடடையுமுத்திபொருந்தியதின்றெனவுன்னி
யாட்சிகொடவத்தான்பல்காலடிமிசைப்பணிந்துசூழ்ந்து
மீட்சியிலெதிர்நின்றோவாத்துதிபலவிளம்பலுற்றான். (உரு)

எவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமெய்து
மெவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமாயு
மெவனருள்வலியாலோவாவின்பமெவ்வுயிர்க்குமேவு
மவனொருநீயேயன்றியாருளாரறவேற்றண்ணால். (உச)

எவனுடையாணையாலேமதிகதிரியங்காநிற்குங்
கவனவாநதிரைநீர்வேலைகரைகடவாதுமேவும்
புவனங்களனைத்தும்வைத்தநிலைமையிற்பொருந்தாநிற்கு
மவனொருநீயேயன்றியாருளார்மிளிர்முக்கண்ணாய். (உரு)

அதிசயம்பயக்குநாராயணவுபநிடதம்யாரை
மதியினிற்குறித்தியாவர்வணங்கினுமவ்வணக்கந்
துதிகெழுசினவேயென்றுசொலுமுனைக்குறித்துநாயேன்
விதியிற்செய்வணக்கம்வேறுமேவுமோவிமலவாழ்வே. (உசா)

சாதலும்பிறப்புமில்லாய்தணத்தலும்புணர்வுமற்றாய்
காதலும்வெறுப்புந்தீர்ந்தாய்நினைத்தலுமறப்புங்காணாப்
போதலுங்களிப்புங்கூடாய்நுண்மையாய்திதூலத்தா
யாதன்முன்னொடுபின்சாராயடியனிற்புகழாநின்றேன். (உஎ)

விரிதருபடைப்புக்காப்புவினைத்திடுதேவர்நாளுந்
திரிபில்சட்டுவமேபோன்றுசெயற்படச்செயற்படுத்தி
யுரிமையிறகாலநோக்கியொழித்துமீட்டுறத்தல்செய்தும்
புரிதருவிகாரஞ்சற்றும்புணராய்நிற்புணர்வான்வேட்டேன். (உஅ)

அரிதனைத்தனையலாளையனிவினைமுதலாச்செய்துந்
தெரியொர்பாற்படைத்திரண்டாம்வேற்றுமைப்பொருளாச்செய்து
மெரிகனைசெய்துமூன்றாம்வேற்றுமைப்பொருணியென்றும்
புரிபடையருளிநான்காம்வேற்றுமைப்பொருள்புணர்த்தும். (உகூ)

செறியிளைப்பொழியவைந்தாம்வேற்றுமைப்பொருளுஞ்செய்து
நெறிகொளத்தழுவியாறும்வேற்றுமைப்பொருணிறைத்துங்
குறிகொண்மார்பமர்த்தேயேழாம்வேற்றுமைப்பொருளாக்கொண்டு
மறிபெயர்ப்பொருளேநின்னையடைதரமுயலாநின்றேன். (௩0)

மாயவன்வந்துவேண்டமலரணைப்பொருட்டுமேய
தூயனைமகவாத்தந்துஞ்சுந்தரமுகங்கணன்கு
மேயவப்பிரமன்வேண்டவிண்டுவைமகவாத்தந்தும்
பாயகாரணமாய்நின்றபரமநிற்பழிச்சாநின்றேனே. (௩௧)

திருமேனியோரெட்டுள்ளுஞ்சிலீமுகமொருமூன்றாக
விருமேனியுருளையாகவியவையொன்றாகமற்று
மொருமேனியிரதமாகவொன்றுதானவர்கள்சோரப்
பொருமேனிலாஞ்சோமூன்றும்பொடித்தாய்நிற்புணர்தல்வேட்டேன். ()

சயந்தனமறைத்துவைகருந்தானமுஞ்சடைமுற்பூண
னயந்தபல்கலங்கள்வைக்கும்பேழையுநகுதாண்மேலா
வயங்குபொற்கழலிற்பூண்டுமருவலும்பிலமாச்செய்து
சயங்குலவடிகேணின்னைச்சார்தரமுயன்றுநின்றேன். (௩௩)

படுசுவையுணவுநல்குமட்டிலும்பகைபோய்ப்பாற
விடுகணையிட்டுவைகுமாவமும்விரும்பிளஞ்சே
யடுபசிப்பிணிதவிர்க்குமருமருந்தன்னசெயபுந
தொடுபயக்கடலாக்கொண்டதூயநிற்றொழுதல்வேட்டேன். (௩௪)

நகுசடைமுடியாய்போற்றிநஞ்சுண்டுமுடியாய்போற்றி
நகுபநல்லுடையாய்போற்றிகாண்டிபற்குடையாய்போற்றி
செகுமழுப்படையாய்போற்றிசிதைவளம்படையாய்போற்றி
மிகுதிறலேற்றாய்போற்றிவிரிநதீரேற்றாய்போற்றி. (௩௫)

சூலவெம்படையாய்போற்றிதொக்கதோலுடையாய்போற்றி
ஞாலமுண்விடையாய்போற்றிநதிமதிச்சடையாய்போற்றி
யாலமுண்டுடையாய்போற்றியலிருளத்தடையாய்போற்றி
மாலமர்புடையாய்போற்றிவான்புகழ்நடையாய்போற்றி. (௩௬)

மறைமுதற்கலையாய்போற்றிவண்மதிக்கலையாய்போற்றி
யிறைமையிற்கலையாய்போற்றியிரசிதக்கலையாய்போற்றி
நிறைதிசைக்கலையாய்போற்றிநிலவுகைக்கலையாய்போற்றி
யறையொளிக்கலையாய்போற்றியரவமேகலையாய்போற்றி. (௩௭)

வரிசிலைமலையாய்போற்றிவயங்குகமலையாய்போற்றி
யுரியவமலையாய்போற்றியொண்டாழைமலையாய்போற்றி
புரியகமலையாய்போற்றிபுயலெனுமலையாய்போற்றி
யரியொடுமலையாய்போற்றியலரகமலையாய்போற்றி. (௩௮)

திருநகரர்சாய்மன்னுஞ்சிவராசதானியென்னு
மொருநகரரசேபோற்றியும்பர்நாயகனேபோற்றி
பெருமறையின்னுநதேருப்பேரருளாளபோற்றி
பொருவிடைப்பாகவாதிபுராணநாயகனேபோற்றி. (கூக)

பொருவரும்வளஞ்சாலாதிபுராணத்தினினிதுமேவி
மருவுயிர்தமைப்பகல்கிவாழ்கருந்தடங்கண்ணம்மை
யொருபுறத்தமையக்கொண்டவுத்தமயோகிபோற்றி
பெருமையிற்பொலிகாயாரோகணப்பெருமானேபோற்றி. (௪0)

என்றுநைந்துருகிக்கண்ணீரிழிதரவெதிர்நின்றுனை
நன்றுளக்கருணைபொங்கநாமிருகரத்தால்வாங்கி
யொன்றுதலமையக்காயத்தொடுமாரோகணஞ்செய்தோமோர்
கன்றுதலின்றியொன்றாய்க்கலந்தின்பந்துளைந்தானன்றே. (௪க)

இன்னதுகண்டவானோரிணர்மலர்மாரிபெய்தார்
பன்னகக்கிடக்கையானும்பங்கயத்திருக்கையானுந்
தன்னிகர்புண்டரீகமுனிவரன்சார்ந்ததெண்ணி
யன்னமென்னடையாயொல்லாவழுக்காற்றுண்முழுகினாரால். (௪உ)

வெங்கதிரவனுஞ்சீதமதியெனமெய்குளிர்ந்தான
மங்கலமலரளாவிமந்தமாருதமுலாவிற
றங்கணர்கருணையென்னுவிருந்ததென்றுடியாடித
துங்கநன்முனிவரெல்லாந்தோய்ந்தனருவகைவாரி. (௪௩)

அறிவினிற்சிறந்தோர்பன்னாள்வருந்தியுமமையுமாறு
முறிவருமெமதுநாலாம்பாதமேமுயங்கிவாழ்வார்
செறிவலிச்சியம்யானைத்திறன்மருப்புறுவோரன்றிப
பிறிதுமொன்றவாவுங்கொல்லோபிறழ்கருநதடங்கணல்லாய. (௪௪)

பொருவரும்புண்டரீகன்புணருமினையமுத்தி
மருவியதினையவாதிபுராணத்தினவலியாலென்பார்
பெருகுமிச்சறுவதீர்த்தப்பிறங்குமாண்மியத்தாலென்பார்
வெருவருமினையமூர்த்திவிளங்கிடும்விசேடத்தெனபார். (௪௫)

இத்தரம்புகன்றுவானோரிலங்குமச்சறுவதீர்த்தத்
துத்தமமேவமூழ்கியொளிருநக்குறிபூசிதநத்
தத்தம்திருக்கைசேர்ந்தார்தவலருமுனிவர்பல்லோ
ரத்தலமகலாராகியருந்தவம்புரிநதுவாழ்ந்தார். (௪௬)

அன்றுதொட்டினையதீர்த்தமரும்புண்டரீகதீர்த்த
மென்றுபேர்புனைந்ததின்னுமெய்ம்மையேயென்றுகூற
வொன்றுவெண்கமலம்பல்லவுருகெழவலராநிற்குங்
கன்றுபஃனுபிருமினபங்கலவநோக்கிடுகணல்லாய். (௪௭)

முன்னியபுண்டரீகமுனிவரன்சரிதங்கேட்டு
மன்னியசருவதீர்த்தம்வாஞ்சையினுடியெங்கு
மன்னியமில்லாநம்மையன்புறப்பூசைசெய்வார்
மின்னியவடிக்கலப்பின்மேவுதலுண்மையாமால். (சஅ)

புண்ணியம்பாவமில்லையெனப்புகல்பொல்லாமூர்க்கர்
மண்ணியமணியேபோலுமாதவப்புண்டரீகன்
கண்ணியசரிதங்கேளார்கேட்பினுங்களையார்மேலோ
ரண்ணியதீங்கேசார்வரவரொடுமறைந்துளோரும். (சகூ)

விரும்புறமுன்னமாதிபுராணமென்பெயர்மேவிற்று
விருஞ்சிவராசதானியெனும்பெயர்பின்னராய
தரும்புகழுமைகாயாரோகணப்பெயரமைந்ததஃது
கருங்கணுய்மரீஇயிற்றுற்பின்காரோணமெனவோவொன்றுன். (ருo)

என்றலுமுமைமகிழ்ந்தாள்காயாரோகணமெனும்பேர்
நன்றினிதமைதற்கேதுவுணவொன்றுணர்ந்திப்புதகே
ளொன்றியபுண்டரீகனுற்றதையெடுத்துச்சொற்றும்
வென்றிசைதேவதீர்த்தமான்மியம்விளம்பலுற்றும். (ருக)

புண்டரீகமுனிவர்மூன்றுங்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் கo-இ திருவிருத்தம் அஉ௫.

## தேவதீர்த்தப்படலம்.

தாவரும்புகழ்ச்சனற்குமரன்றக்கவர்
நாவருநந்தியைநயநதுபோற்றுபு
தேவதீர்த்தத்துமான்மியமுஞ்செப்பென
வோவருமகிழ்ச்சியினுரைத்தன்மேயினுன். (க)

மலைமகளாகியவன்னைவானதிக்
கலைமதியொடுபுனைகடவுட்டாழ்ந்தெழா
வலைகடலுகைக்காரோணத்தற்புத
மூலைவறக்கேட்டுமிக்குளமகிழ்ந்துளேன். (உ)

மறிதிரைப்பெருங்கடல்வளைப்பில்யாருநன்
னெறிகடைப்பிடித்திலர்நியமநீத்தன
ரறிமறையுருநின்னடியிற்பத்திமை
செறிதரக்கொண்டிலர்கலியின்றீமையால். (௩)

குறையறமார்பகங்கொண்டநூலலான்
மறைமுதனூலெல்லாமதித்துக்கொணடிலர்
நிறைபுகழ்நீற்றினைநீத்துவேறுவே
றுறைதரவிலாஞ்சனைநுதலுறுத்துவார். (ச)

நீறுமெய்ப்பூசுமந்தணருமோதன்
மாறுவாயாற்பிறபெயர்வழுத்துவார்
வேறுனாசெய்தலுமெய்மையேரவதற்
கூறுறவுள்ளத்திலுன்னல்கோடியே. (அ)

அந்தணரென்பதற்கமைந்தகாரணஞ்
சிந்தையிற்கொளாரிடுகுறிசெய்தாரினு
நந்தியதீத்தொழிலயர்துளாரெனல்
வெந்தொழின்மேற்றெனவிருப்பிற்கொண்டுளார். (கூ)

இழிதொழிலியற்றியும்யாவர்மாட்டும்வெம்
பழிபடுபட்டிமையாதிபண்ணியு
மொழிவறவுணுமுதல்விற்றுமோகையிற்
கழிபொருளீட்டலேகருத்தமைத்தனர். (எ)

பொருண்மறையவர்களிப்புன்மைமேவலால்
வருணமாச்சிரமமும்வழீஇமற்றியாவரு
மிருண்மிடற்றுன்னடியெண்ணலோவினார்
மருண்முனத்துதரமோம்புதலின்மன்னினார். (அ)

மன்னவர்நெறிமுறைமாறுநூலுணர்
முன்னவருளுமுழுதொழின்முயற்சிசெய்
பின்னவருளுஞ்சிலரன்றிப்பேதநீஇ
யென்னருநெறிமுறையிகந்துமேவுவார். (கூ)

மற்றிவராயுளுஞ்சிறியவல்வினை
யொற்றியநோய்களோபெரியவொன்றுபு
முற்றியவறுமையான்மூடப்பட்டுளார்
பற்றியஞானமுமணுவின்பாலதால். (கo)

ஆதலிற்பிறப்பிவரகன்றுமுத்தியிற்
காதலிற்புகுவதெக்காலமன்றியுஞ்
சாதலிற்பெருந்துயர்தருபல்கும்பியும்
போதலிற்றளருமேபுடைவறத்தலால். (கக)

ஆணத்திற்பெருந்துயரனைத்துந்தீரக்கா
ரோணத்தின்வசித்துணைப்போற்றலொன்றுகொன்
மாணத்தினகப்படுமற்றுமுண்டுகொ
லேணத்தின்கரத்திறையியம்புகென்றனள். (கஉ)

என்றலுந்திருவுளமிரங்கியெம்பிரா
னன்றலினமதுகாரோணத்தல்குபு
பொன்றலிலாநமைப்போற்றலன்றியு
மொன்றலினென்றுளதுரைப்பக்கேட்டியால். (கந)

வினைதபுநமதுகாரோணமெய்ப்பெயர்
புனைகுறிக்கழற்றிசைபபொருந்துநீரது
தனையருநதவத்தரோசாரத்தக்கது
வனையினம்போதுயர்மாட்சிமேயது. (௧௪)

ஆதிநாளுமினிதமைககப்பட்டது
நீதியாடினர்கலெலாநிரப்புநீரது
காதிமாபாதகங்காற்றவல்லதா
லோதிமாமுகிலனையுளதொர்தீரததமே. (௧௫)

அறுபதினறலையிடுமாறுகோடியென்
றுறுபெருநதீர்த்தங்களொருங்குதொக்கது
மறுவறநினைப்பினும்வழுததககேட்பினுங
கறுவறககாணினுங்கதிகொடுபபது. (௧௬)

அதுநிகர்தீர்த்தமறறகிலத்திலலையான
மதுமலர்க்குழலினாய்மறறதன்சிறப
பிதுவெனவுரைக்குநரோவாயாமலாற
புதுமையதறச்சிலபுகலுவாமரோ. (௧௭)

கூறுமுபபதமுக்கோடித்தேவரு
நாறுகறபகததொடைநயநதவேநதனு
மூறுதேமலர்த்தவிசுளானுநதாரகிய
னேறுமாயனுமறறையாருமுனனைநாள. (௧௮)

இரணவேலவுணரோடேற்றுவென்றிட
மரணநீத்தமர்பெருவன்மையெய்துவா
னரணமாமருநதுபெற்றருந்தலெண்ணினார்
சரணமேவினருளர்ந்தவாதகாட்சியாய். (௧௯)

புரைதபுமந்தரப்பொருபபுநாட்டினார்
விரைதரவரவநாண்விழைந்துபூட்டினார்
தரைபுகழ்பெருமதித்தமபங்கூட்டினா
கரைபொருதிரங்குபாற்கடலைவாட்டினார். (௨௦)

ஓடதிகொடுததனருறக்கடைந்திட
நாடருஞ்சுவைதகுடநனகெழுநததா
லாடல்சாலமரர்களதுகைபபற்றினார்
வீடருமவுணரைவெரீஇயினாரரோ. (௨௧)

கலிமிகுமாறறலர்காணவுண்பமேல்
வலிமிகுபுயததவர்வெளவினென்செய்வா
மொலிகடலவளைப்பகத்தாறுறுதவைப
பொலிவிடமெதுவெனபபுந்தியாயநதனர். (௨௨)

கடையெழுவெள்ளமுங்கலுழக்கண்டுவர்
தடையவர்தமைப்புரந்தழிவிலாதமர்
மிடைவளத்திருநகர்வேறுகண்டிலே
முடையவர்செறிநதகாரோணமொன்றலால். (உ௩)

என்றுதம்முளங்குறித்தெய்தினாரவண்
வென்றுயாதீர்த்தத்தின்விழையுந்தென்கலா
நன்றுயர்சுதைக்கடநயந்துவைத்தனர்
துன்றுவண்புனல்படிந்துணறுணிந்தனர். (உ௪)

எண்ணியபடியிருந்தடத்திறங்கினா
ரண்ணியசங்கற்பமறைந்துமூழ்கினார்
தண்ணியவெண்பொடிதயங்கப்பூசினார்
புண்ணியமலிதரக்கரையிற்போதுமுன். (உ௫)

இருஞ்சுதைக்கும்பமோரிலிங்கமாகநா
மொருங்குளத்தெண்ணினேமொளியிலிங்கமாய்
மருங்கிருளறுத்ததுவயங்கக்கண்டோரா
லருங்குறைத்தெனப்புகுந்தமர்ந்துளேமரோ. (உ௬)

உலைவில்கன்றுப்புதட்பிழுக்கையோர்மகண்
முலையளந்திடுமொருகருவிமொக்கணி
யலைவறவிவையெலாமமருநாஞ்சுதை
நிலையகும்பத்திடைநீங்குவெங்கோலோ. (உ௭)

வானவர்சுதைக்குடமருங்குவந்தனர்
தானதுமிலிங்கமாய்த்தயங்கக்கண்டன
ரானதொன்றிஃதெனவறியகிற்றில
ரீனமிலுளத்திகைப்பெய்தினாரரோ. (உ௮)

செறிதருவானவர்திகைப்புமாற்றிட
ஒறிதநமவ்விலிங்கத்துநின்றியாங்
குறிதருமான்மழுவகொண்டகையொடும்
வெறிதருகூந்தலாய்வெளிவந்தாமரோ. (உ௯)

வெளிவருநம்மடிவீழ்ந்துபண்ணவ
ரொளிவருசோதியேயெங்கடெய்வமே
யளிவருகருணையேயமலமேயெனத்
துளிவருங்கண்ணொடுதுதிசெய்தாரரோ. (௩0)

துதிபுரிபவர்முகநோக்கித்தூயவித்
திதிபெறுதலத்திடைச்செறிந்தவாதுகப்
பொதியெலாமிலிங்கமாய்ப்பொலியுமென்றிடி
னதிசுவைச்சுதைக்கடமயலொன்றாகுமோ. (௩௧)

ஏற்றஞ்சாலமுதகடேசமென்றொரு
தோற்றஞ்சால்பெயர்பெறீஇத்தலஞ்சுமித்தல
மாற்றஞ்சாறுதியொடுவணங்குவார்க்கரு
ளூற்றஞ்சால்வினையொழித்துதவுநாளுமே. (௬௨)

வண்பதுமாசனனுதிவானுளீ
ருண்பதுபோயதென்றுளம்புழுங்கலீர்
பண்பதுபராயவித்தடதநினறுமோர்
கண்பதுசால்சுதைக்குடநன்றீகுவாம். (௬௩)

என்றொருசுதைக்குடமெழநினைந்தன
மன்றொருகடலெழுமமுதவிந்துவி
னன்றொருங்கெழுந்ததுநயநதுகண்டனர்
பொன்றொருதினமுமின்றென்றுபுங்கவர். (௬௪)

வெருவமுதெதிரப்படவெறுத்தல்சாலமு
தருவருளாற்றலமைநததன்றெனு
மருதுநிறபாசகளைவாங்கியுண்டுமெய்
யிருவலிபெறுமினென்றியம்பினுமரோ. (௬௫)

அருண்மறுத்திடுவதற்கஞ்சிவானவர்
தெருள்சுதைக்குடத்தினைச்சென்றுபற்றினார்
வெருளறயாவரும்விரும்பியுண்டனர்
மருளில்யாமாவயினமறைநதுளேமரோ. (௬௬)

மறைமுடிவயங்குநாமறையக்காண்டலு
நிறைவெருக்கொண்டதுநீங்கிப்பின்னரு
முறையினத்தடம்படிஇமுன்னினார்க்கெலாங்
குறைதபுகருணைக்காரோணம்புக்கனா. (௬௭)

ஆண்டுநம்மையுமருளமைந்தனினையும்
பூண்டுபேரன்புளம்போற்றியாங்கொரீஇ
மீண்டுவநதமுதகடேசமேவினார்
தூண்டுகாதலின்மிகத்துதித்துப்பூசித்தார். (௬௮)

விடைகொடுதத்தமதிருக்கைகமேவினார்
குடைபவர்பாதகங்குமைக்குமபபுனல்
கடையுறுத்தேவபுட்கரணியாயது
நடைகொளிவ்வேதுவாலுணர்திநங்கைநீ. (௬௯)

தேவதீர்த்தப்பெயர்செறிந்தவாவியுள்
யாவர்போய்க்குடையினுமியைந்தவெவ்விய
பாவநூறுயிரகோடிபாறிடு
மேவமால்வணாவருவிமலையின்னுங்கேள் (௭0)

வேறு.

ஆயவெங்கதிரொனவொருபொழுதுசெய்யரசும்
பாயதாரகைக்கணநடுப்பொலிதருபண்புந்
தூயவானவர்தம்பசியவித்திடுதுணிவு
மேயசீதளகலைமதியென்பவன்மேனாள். (௪௧)

பர்மடந்தையர்ப்புணர்தலிற்படுபழிபாவந்
திரமடைந்திடுமென்பதுதன்னுளந்தெரிந்துஞ்
சிரநெடுந்துயர்விளைத்திடுகருமலச்செருக்கால்
வரமிகுங்குருமனைநலம்புணர்வதுமதித்தான். (௪௨)

ஆன்றசாலிமுற்பற்பலருயர்புற்றததிந்துஞ்
சான்றபேரொழிற்றாரையுஞ்சந்திரனழகே
மான்றவுள்ளத்துமதித்தனள்வருபழிமதியா
டோன்றவாண்டளப்பாற்பிழைத்திடுவதேதுணிந்தாள். (௪௩)

இருதிறத்தருமின்னராயொழுகுழியொருநா
ளொருகழைச்சிலைகோட்டியொண்சுரும்புநாண்பூட்டிக்
குருமலர்க்கணையெடுத்தெடுத்தளப்பிலகூட்டித்
தெருமரச்சமர்செய்தனன்மாரவேள்சினந்து. (௪௪)

வருமலர்க்கணைபாய்தலுநெஞ்சமாழாந்து
கருகிருட்கதிரரசனில்லமையத்திற்கசிந்து
வெருவரச்சென்றுதாரைமென்மலர்க்கரம்பிடித்தா
னருவருப்புறுதவளுமற்றவனுடனணைந்தாள். (௪௫)

கொண்டுபோயொருதன்மனைக்குறுகிமெல்லமளி
மண்டுவான்பரியங்கத்தினிருத்துபுவரம்பு
விண்டுமேல்விழாமெய்யுறத்தழுவிவாயூற
லுண்டுதேக்கியொண்முகத்தொடுமுகமியைத்துவந்தான் (௪௬)

முத்தமுண்டனனிளமுலைவருடினன்முழுதுஞ்
சித்தமின்புறவொக்கலைநெகிழ்த்தனன்செழும்போ
தொத்தவொண்கடிதடத்தளைவிடுத்தனனுவப்புற்
றத்தகைப்படுங்கடலகத்தழுந்தினனலோன். (௪௭)

மதியழிந்தொருமதிகுருமனையொடிவ்வண்ணங்
கதியமைந்தவர்போன்றுபன்னாளுளங்களிக்க
விதிகொளந்தணன்மனைவியைக்காணலன்வெருவித்
திதியமைந்தவைப்பெங்கணுந்தேடினன்றெரிந்தான். (௪௮)

பாவகாரியீதாற்றியதென்னெனப்பதறித்
தேவர்வேந்தனோடொருழியடைதரத்திரட்டி
மேவவெவ்வியமதிபுரிசெயலெலாம்விளம்பி
யாவநாந்துறவடைகுதுமினியெனவறைந்தான். (௪௯)

குரவன்வாய்மொழிசெவித்துணைகுறுகலுங்கொதித்துப்
பரவுவானவர்யாவருமிகமனம்பதறிக்
கரவனாகியமதியினைப்புடைத்திவட்கழித்து
விரவுதுன்பமுங்கழிக்குதுமெனவெருண்டெழுந்தார். (௫௦)

அதுதெரிந்துமிக்கஞ்சுபுவிதிர்விதிர்ப்படைந்து
விதுபளிங்கமரிடம்புகூஉவவனடிவீழ்ந்து
கதுமெனச்சுரர்வளைந்துபோர்குறித்ததுகளைய
விதுவெனாவதென்றவனுமற்றவுணருக்கிசைத்தான். (௫௧)

தீயதானவர்வட்டுடையிறுக்கினர்சினத்திற்
பாயமாமுகரோமமுமுறுக்கினர்பலகை
யாயவாள்சராசனமுதல்யாவுங்கையமைத்தார்
மாயவான்சமர்குறித்துவானாடரைவளைத்தார். (௫௨)

திதியளித்தவர்வளைந்தமைதெரிந்துகண்சிவந்து
பொதிகுடச்சுதையெடுத்தயின்றமரராய்ப்பொலிவார்
கொதிசமர்த்திறற்கோலத்திற்குறைவறக்கொண்டு
மதிபிழைப்பதின்றெங்கெனவாளமரேற்றார். (௫௩)

சிலைவளைத்தனர்செறியநாணேற்றினர்திக்கின்
மலைபிளப்புறமாமதயானையுமயங்கித்
தலைவிதிர்த்திடநாணொலியெழுப்பினர்சலதி
யலைமுழக்கமுமச்சுறத்தோள்புடைத்தார்பலார். (௫௪)

ஒன்றுபத்துநூறாயிரமெனக்கணையுகைப்பார்
சென்றுசென்றுவாள்வீசுபுசாரிகைதிரிவா
ரன்றுவாள்வெட்டுப்பலகையிற்றகைந்துசென்றடாப்பா
ரின்றுவென்றிமற்றெமதெனநெடுமொழியிசைப்பார். (௫௫)

பரியுகைப்பவர்பரியுகைப்பவரொடுங்கழைகொல்
கரியுகைப்பவர்கரியுகைப்பவரொடுமுருளைக்
கிரியுகைப்பவர்கிரியுகைப்பவரொடுஞ்செங்க
ணரியுகைப்பவரரியுகைப்பவரொடுமமர்த்தார். (௫௬)

மண்ணிடைப்புகும்வாளராக்குலம்பலவயங்குங்
கண்ணிடைப்புகுமழைக்குலத்திடைப்புகுங்கார்கோ
ளெண்ணிடைப்புகுதிசையெலாம்புகுமிருதிறத்தா
புண்ணிடைப்புகுந்துருவியபொருதிறற்பகழி. (௫௭)

முடியழுத்தியமணிபலதெறித்திடமுழுதுங்
கடிமணிக்குழைசிதர்ந்திடத்தோள்வளைகழல
வடிபிடித்தனர்மேலெடுத்தறைந்திடுமள்ளர்
தடியிடைக்கதிர்ச்சாலிகொன்மள்ளரும்போன்றார். (௫௮)

மொழிந்தமள்ளர்களறைதலுமுற்றியசெந்நெல்
கழிந்தலையிலின்மேலெடுத்தெறிதிறங்கடுப்ப
வழிந்தநெஞ்சிலாவொருவரையொருவர்தொட்டறைந்து
பிழிந்தவாற்றல்செய்தெடுத்தெடுத்தெறிவர்மேற்பிறங்க. (௫௯)

தோளிழந்தவரிழந்தனர்தும்பைமாலிகையுந்
தாளிழந்தவரிழந்தனர்தழங்கொலிக்கழலும்
வாளிழந்தவரிழந்தனர்பிடித்தவன்கையு
நாளிழந்தவரொனுவிருதிறத்தருணலிந்து. (௬௦)

ஆவமாகிமெய்சிவப்பவும்விழிச்சிவப்பழியா
ரோவமேயெனநிற்பினுநிற்பரஃதொழிந்து
மேவமுன்வைத்தபாதம்பின்வைத்திடாவிறலார்
பாவமுந்தருமமுஞ்சமராடியபடியார். (௬௧)

ஒருவர்தண்டமற்றொருவர்கைத்தண்டத்தாலுடையு
மொருவர்தோமரமொருவர்தோமரத்தினுலொழியு
மொருவர்வெஞ்சரமொருவர்வெஞ்சரத்துடைநதோடு
மொருவராற்றன்மற்றொருவராற்றலிறறையுதிரும். (௬௨)

படையிழந்தவரொண்ணிமெய்ப்புதைபடைபறித்துத்
தடையிலாதெதிர்சமர்செயவம்மினென்றழைப்பார்
படைபறித்தவருளுஞ்சிலர்கோணுதல்பார்த்தத
தடையிலாதுடற்புண்ணிட்டுமிமிாத்தனர்சார்வார். (௬௩)

மேயவாகவபூமியின்மதிதரவீழ்ந்த
பாயகேடகம்பரிகலம்பரநதுவீழ்மூளை
யாயசொனறிமறறதன்மிசையீருளம்பருப்பு
நேயமெனறசைநிணமெலாநிரப்பியகறிகள். (௬௪)

என்புவற்றல்வீழரக்குநீரினிதுபெய்கிருது
வன்புமேயதோன்மூடியபரிவட்டமாக
வன்புமேவியசயமகணிவேதனமமையும
புன்புலாலுடல்சாய்ந்தவர்பணிபவாபோன்முர். (௬௫)

இந்தவாறமர்நிகழ்வுழியுலகெலாமேங்கச்
சந்தநான்முகனறிநதவணடைந்தமர்தணித்துப்
பந்தமேவியமதியினைக்கூயவற்பார்த்து
நந்தநீயென்செய்தனையென்றினநவில்வான். (௬௬)

கற்றகல்வியும்பரிதியோடெண்ணிடுகணிப்புஞ்
சொற்றகோள்களுளொன்றெனத்துலங்கிடுமாண்பு
மற்றமோவவெவவுணவுநின்றுக்கிடுமமைவும்
பெற்றநீயென்செய்தனையறிவிலாப்பேதாய். (௬௭)

ஈரநெஞ்சிலாமுருடருமிதசெயத்துணியார்
வீரமொன்றிலாவலியுருமேல்விளைந்திடுமே
பாரமோவுருப்பாதகநதடிக்குமேயயலார்
தாரம்வெளவினார்நரகன்றிச்சார்வதுமுண்டோ. (௬௯)

தீயசெய்தனை தாரையைவிடுமதிசெத்தோ
ஞயசெய்கையையுயிருடனிருந்துமென்றறைந்தான்
தூயதேவர்கள்குரவனைப்பிழைத்தவித்துட்டன்
மேயவேள்வியிற்பாகமெய்தானெனவிதித்தார். (௬௧)

நிலைகலங்கியவிமகரனொடிதுயிர்ப்பெறிந்து
தலைவனைந்தொருதாரையைவிடுத்தனன்வியாழங்
கலைசொலுங்கழுவாய்செய்துகைக்கொடுபோனு
னலைவில்வானவர்யாருந்தம்பிருக்கைசென்றடைந்தார். (௭0)

முத்தவாணகைத்தாரைசின்னுளிற்குன்முதிர்ந்து
வித்தகேரொருமைந்தனையீன்றனளிவெய்யோ
னுத்ததானவனென்மகனெனவழக்குரைத்தான்
சுத்தவாரியன்றன்மகனேயெனச்சொற்றான். (௭௧)

இருவருங்கலாய்த்தின்னணமாடுறுமேல்லை
மருமலர்த்தீவிசோன்முனம்போலவேவந்து
குருமலர்க்குழற்றாரையைநேர்வரக்கூவிக்
கருவில்யாவராலமைந்ததிக்கான்முளையென்றான். (௭௨)

என்றகாலையிலறிந்திலாய்போல்வீங்கென்னை
யொன்றநீவினவியதெவன்மதியெனவுரைத்தா
ளன்றவன்மதியாலெனல்குறிப்பினாலறிந்தான்
வென்றதானவன்பாலுறமகவினைவிடுத்தான். (௭௩)

அன்னமூர்பவன்றனமர்வளநகரடைந்தான்
பின்னமேவுருத்தீவினைபெருகலான்மதியோன்
முன்னமேவியதேசுமுற்றொழிதரமுன்னி
யென்னகாரியஞ்செய்தனமென்றிழித்திருந்தான். (௭௪)

மதலையாம்புதனைத்தழீஇமகிழ்தலினிந்த
விதலைதீர்திறமின்றெனமெலிந்துளத்தெண்ணி
முதலைசூழ்புவித்தீர்த்தங்களிடைச்சென்றமூழ்கி
னதலைவாந்துயர்தீர்க்குமென்றவனிவந்தடைந்தான். (௭௫)

தூயகங்கைமுற்றீர்த்தங்களனைத்தினுந்தோய்ந்தான்
காயமேவொளிமுன்னையிற்பொலிதரக்காணுன்
மேயபாதகம்வீந்திலதின்னுமென்செய்வா
மாயமோவிஃதென்றமுதிரங்கினன்மதியோன் (௭௬)

அந்தவேலையின்மகதியாழ்முனிவரனடுத்தான்
முந்தமேவியயாவையுமறிதரமொழிந்து
சந்தமேவலனடிமிசையழுதுதாழ்ந்தெழலு
நந்தவோதுவதுண்டெனவலையவனவில்வான். (எஎ)

குணகடற்கரைநாகைககாரோணத்தைக்குறுகி
யணவுதேவதீர்த்தத்துநீமூழ்குவையாகிற்
புணரும்பாதகமெவ்வளவிருப்பினும்போகு
முணருமாறுநீமுன்னையிறபொலிவையெனவுரைத்தான். (எஅ)

சொற்றவாசகங்கேட்டலுமுவகையிற்றுளைந்தே
யற்றமேதுமினாகைக்காரோணம்வந்தடைந்தா
னுற்றவானவர்பலர்குழீஇக்குடைவதுமுணர்ந்து
வெற்றதேவபுட்கரணியாதெனவினவினனே. (எகூ)

ஈதுதானெனநிகழ்த்தினருவகைமிகவெய்திச்
சாதுவானவரவரொடுமத்தடம்படிந்தான்
காதுதீவினைவேரொடுங்கருகியதுடனே
யோதுமுன்னையினுருப்பொலிந்தெழுந்தனனுவந்தான். (அ0)

வெய்யபாதகமுழுகுமுன்விடுபடப்போக்கி
ஐயமுன்னையிறபொலிவுநன்கருளியதென்னில்
வையமெங்கணுநாடினுமிதுபொருஉம்வாவி
செய்யவாயினுயுண்டுகொலசெப்புவதினியென். (அக)

அரவினால்விடுபட்டவனுத்தலங்காலோன்
புரவினுயர்நந்திருக்கோயிலுட்புகுந்தே
யிரவினுற்புரிகண்டத்தெம்பினையடியிறைஞ்சி
யுரவினுற்பொலிநின்னையும்வழுத்தினுலுமையே. (அ௨)

திருந்துநங்குறிப்பதிட்டையுமினிதுறச்செய்து
பொருந்துபூசனையொருமதிசெய்தனன்போற்றத்
திருந்துபல்வரங்களுந்தந்துதேவரோடளாவி
யருந்துவேள்வியிற்பாகமும்பெறும்படியளித்தோம். (அ௩)

[illegible]ளைசெயாம்பல்கண்முகமலர்ந்திடவெழும்வீபத்
[illegible]ளைசெயமுனையிறசிறப்படைந்துவப்புறப்பணிந்து
புலைசெய்நாமருளவிடையொடுநதன்பதம்புகுந்து
கலைசெய்தன்செயல்புரிந்துவாழ்ந்திருந்தனனகளித்தே. (அ௪)

மன்னுதேவதீர்த்தப்பெருமான்மியமபகரி
னன்னுதாலளவிட்டெவர்நவின்றிடவல்லார்
பன்னுதேவினுமமுதினுநனிசுவைபடுமொ
ழின்னுமொன்றெடுத்தியம்புதுமினிதுகேட்டிடுதி. (அ௫)

வேறு.

மின்னுகாணுமருங்குல்விமலைகேள், பன்னுமண்ணுலகெல்லாம்பரிப்பவன்
பொன்னுநேரில்குணத்தன்புரூரவா, வென்னுநாமத்தரசனிருந்தனன். ()

மதிக்குலஞ்செய்தவத்துறவந்தவன், விதிக்கொடுந்திக்குமேவும்புகழினான்
றுதிக்கிரங்குநந்தாடொழுவாழ்க்கையா, னுதிக்குமன்பினுயிரினிதோம்
[வான். (௮௭)

அறியுமேன்மையமைச்சர்புரோகிதர், செறியுந்தானைத்தலைவர்சிறந்துற
நெறியுமாலெணநேர்ந்துதழுவித்தோ, மெறியுஞ்செங்கோலினிதுசெலுத்
[துநான். (௮௮)

மீனவார்கடல்சூழ்புவிவேந்தகே, ளானவேட்டவினையதுதாழ்த்தலாற்
றுனவாரணமாதிதழைதசெழூஉ, வீனமாற்றுமென்றுரிறைஞ்சிச்சிலர். ()

கேட்டவேந்தன்கிளாநததுதாழ்த்திடி, லூட்டவாம்பயிராதியொழிதரும்
வாட்டமல்லதென்மன்னுயிர்க்குண்டெனு, வேட்டமாடும்விருப்பினெழுந்
[தனன். (௯0)

அரையிற்காழுரியாடையுடுத்தினன், விரையக்கச்சுடைவாளொடும்வீக்கி
னன், கரையுமெய்யிற்கவசம்புனைந்தனன், புரைமிலாத்தலைச்சாத்தும்பொ
[ருத்தினன். (௯௧)

முதுபெரும்பகையாளர்முடித்தலைக், கதுமெனக்குரம்வைத்துயிர்காற்றிடு
வதுகடுப்பின்மறலுங்கொடியகாற், றதுதிறம்புமடற்பரியேறினான். (௯௨)

கூற்றம்பல்லுருக்கொண்டன்னகொள்கையர், சீற்றமின்றியுந்தீயெழநோ
ரொற்றமிக்கவிருதிறல்வீரர்க, ளூற்றமிக்கவுவகையின்முந்தினார். [க்குவா

ராயுஞ்சிற்றமும்போர்தின்கருக்குநேர், வாயுமுள்ளரல்வளைதருதோகையு
மேயுஞாளிக்குலம்பலவீண்டின, தோயும்வார்வலையாளருந்துன்னினார். ()

மிடலொடுங்கலில்வெம்பகையோருமி, ரடல்செயும்படையாள்கைப்புரூர
வா, விடலிலார்தொடர்வீரரொனுப்படுங், கடலொடும்பெருங்காட்டுட்புகுந்
[தனன். (௯௫)

ஓடியெறிந்தனர்வாருமொழுக்கினார், கடியவார்வலைசூழவுங்கட்டினார்[னர்
துடியெறிநதுவன்றியவேடர்கள், வெடிகொளும்பல்விலங்குமெழுப்பி

சிங்கம்யாளிசினக்குந்தரக்குமா, தங்கமென்குதவாவலிச்சல்லியங் [ன
துங்கமான்கருங்கேழற்றெருடக்கத்த, வெங்கண்மாக்கள்வெருவியெழுந்த

கூடிச்சென்றுசுரிகையிற்குத்துவார், நாடிப்பாய்ந்துவைநாந்தகம்வீசுவார்
தேடித்தேடிச்சிலைக்கணைதூற்றுவார், வாடிச்சோரவில்வாறமராற்றினார்.

வாலிழந்தனபல்லவலிகை[illegible], காலிழந்தனபல்லகலங்கிமெய்த்
தோலிழந்தனபல்லதுடிதுடித், தோலிழந்தனபல்லவுடன்றரோ. (௯௯)

துடித்திடுஞ்சிலதோகையெடுத்துமண், ணடித்திடுஞ்சிலவாரயிலாதியைக்
கடித்திடுஞ்சிலகாணகத்துளெழு, வெடித்திடுஞ்சிலயிக்கபன்மாக்களுள்.()

இனனவாகவனத்துவிலங்கெழூஉப், பின்னமாகிப்பெயர்தருகாலையிற் [ன்.
சொன்னவார்கழற்றென்றலபுரூரவா, மனனனேர்ந்துவடிக்கணைதூவினு

புலிமுகததிற்புகுநதோர்நெடுங்கணை, வலியிறபினசென்றுவாலடித்தோன்
றுவ, மெலிவிலாவிவ்விலஙகுக்கிரட்டைவா, னலியுமாறுறறதென்னென
நாடவே. (கo௨)

ஏற்றயு[illegible]முகத்திலிருகணை, யேற்ரவுள்ளாறுழைந்தும்வெளியினுந
தோற[illegible]மருப்புச்சுமநததெத,தோற்றமெனறுதுணிதரவாய்வரால்.

மடங்கலேயெனவல்விரைநதேகியோர், மடங்கன்மார்புகிழித்ததொர்வன்
கணை,மடஙகல்கூடாவலிசாலொருநர,மடங்கல்கீண்டவலியபுண்மானவே

கணையொனறுயபபக்கடுகிமதிக்கண்வாழ், துணையணைந்திடமேற்செலுஞ்
சூழ்ச்சிபோ, லிணையுமவேகததெழுநதுமேறறுவுவ. பிணையொடுமபயில்
[பெட்பிலகுரங்கமே. (கo௫)

மோகவாணமுனிநதாலுமுனிவுவீண், போகமேனமயிாக்கேடகம் போாத
தென, வாகநீணமயிராருநகுடாவடி, வேகமாறும்விடுகணையொன்றனுல்.

கோடிழுநதனகுஞ்சரமார்பகத், தோடிழுந்தனவேங்கையுயிாதிறற்
பாடிழுநதனபஞசானனமபெருங், காடிழுந்தனமொய்த்தகவரியே. (கoஎ)

வாளியோயினுமவைறுதிவேலவிடு, மீளியோயினும்வெவ்வியகட்கமா
மாளியோயினுமாஙகாஙதுப்பறறிடு, ஞாளியோய்விலதாயினநாடினே. ()

ஞலடைநதபிஞுவைததொலைத்திலான், மாலடைநதபறழுமவதைததிலா
ஞேலடைநதவுறுசினமாககளோ, வேலடைநதவிருநதெனறுநூறுவான, ()

மேயவிததிறம்வேட்டைவினைமுடித், தாயமன்னனடுபரிமேறகொளாப்
பாயவெமபசிபறறிவருததலாற, ஞேயமாநகர்துனனமுடுகினுன. (ககo)

பரிவிரைநதுபடருநடைவையோர், விரிகிளைத்தருநிழலோாவேதியன்
சரிவருததநதணியபகிடநதளன, புரிநிறததிறபுரவிமிதிததததே. (ககக)

உளைவயபபரியோரடிளவத்தலும், வளைமருப்பெருமைப்பகரோபவன்
விளைநயப்புறமேவுநகாசெலவா,ளிளைதிறததினனீரடிவைததனன. (கக௨)

கண்டமனனன கலங்கிககவன்றனன், மண்டவந்தவன்பிரமக்கொலை
யெண்டவாவிதறகெனசெயலெனறுசோ, கொண்டமாதவர்கூட்டங்குறுகு
[வான. (ககந)

ஆனமையோர்பொழிலாங்குவசித்திடும், வெண்மைதீர்விசுவாமிததிரன்
முத, லொண்மையோர்திருத்துப்பணிநத[illegible] ளெண்மையோவநடநதி
[யமபினுன். (கக௪)

கேட்டமாதவர்கேழ்கிளர்வேந்தனின், வாட்டமோவுமறையவனுக்கிடு
காட்டகத்துக்கடனுரியோர்க்கொடு, நாட்டமேலநடத்துதிநன்றரோ. ()

பின்னர்நீபரிமேதமகம்பிணை, நன்னர்மேவநடத்திடுவாயெனின்
மன்னரேறனையாய்வந்ததீங்கொடு, மூன்னராற்றியதீங்குமுருங்குமால்.()

என்றுகூறவிறைஞ்சினனேகினன், பொன்றுவேதியனுக்குப்புரிகட
னன்றுசெய்நகைக்கொண்டினிதாற்றினு, ஞென்றுமாமகஞ்செய்வதற்கு
[ன்னினன். (கக௭)

அளவிலாமறையந்தணைாத்தழீஇ, யளவிலாச்செம்பொன்[illegible]
னளவிலாவறமாக்கும்பரிமக, மளவிலாப்புகழானினிதாற்[illegible] (கக௮)

அதுபுரிந்துமகன்றிலதாய்ப்பழி, க்துவிநீழலிற்பற்றக்கலங்கியே [னன்.
யெதுசெய்துய்வலினியெனவேதங்கள், சதுவுமோர்ந்ததவுமியற்சார்ந்த

முன்னடந்ததனைத்துமொழிதலு, மன்னமாதவனுள்ளத்தினுய்ந்தனன்
பின்னமின்றிப்பிறங்குபன்னூல்களுஞ், சொன்னதீர்த்தங்கள்யாவுந்துனை
[யென்றுன். (க௨௦)

ஆயகங்கைமுதற்பலதோயமு, மாயவன்பினனைந்தனைந்தாடினன் [ன்.
பாயசெம்பொன்முற்றுனமும்பண்ணினன், நீயதாயதுதீர்தரக்கண்டிலா

கிட்டும்வாசமராற்றற்கெனக்கெழீஇ, யொட்டுங்கோபித்துடன்றெழுமார்
பகர், தட்டும்போக்குத்தடுக்குந்தடம்புயங், கொட்டுமார்க்குங்குதிக்கும
[திர்க்குமே. (க௨௨)

பெயர்விலாதபிரமகத்திக்கெவன், செயலெனுவுளந்தேம்பிக்கவுதமி
யுயர்நதிக்கரையுற்றகவுதம, னயர்வில்பாதமடைந்தனனண்ணலே.(க௨௩)

அன்னமாதவற்கோதியழுதன, னென்னபாதகமேனுமுள்ளெண்ணலை
யின்னநீருங்கமூவாயியமபுது, மன்னவென்றுவகுத்துரையாடுவான். ()

செறிவளங்கொடென்றேசத்துள்யாவரு, மறிபுலிக்கொடியான்றிருநாட்
டிடைக், குறிகொள்கீழ்கடல்வேலையிற்கோலமார், நெறியினின்றுநிலவுங்
[காரோணமே. (க௨௫)

கேடுபோக்கிடுங்கேத்திராசமென், றூடுநாமத்தொடுமத்தலமுறும்
பாடுசாலநினுள்ளதுபாரெலா, நாடுவானவதீர்த்தநராதிப. (க௨௬)

அந்தத்தீர்த்தத்திடைந்துமூழ்குதி, னெந்தப்பாதகமுங்கழிந்தேகிடு
மந்தத்தானத்தமரிலிங்கந்தொழி, னெந்தப்பேறுமெளிதிற்கைகூடுமே, ()

அடையின்னேயென்றாசனையேவினன், மிடையுமோகைதுளும்பிடவேந்
தனுங், கடையுறுத்திருக்காரோணத்தெய்திவின்,குடையுந்தெய்வப்புனல்
[குடைந்தானரோ. (க௨௮)

குடைந்தபோதேகொடும்பழிமாய்ந்தது, மிடைந்ததேசின்விளங்கியெழு
ந்தன, னடைந்தவோலைகயனுய்நம்மெதிரடைந, துடைந்தநெஞ்சினுருகித்
[தொழுதனன். (கஉக)

சேய்மேமிகுவின்னையும்போற்றினன், றூயதெய்வச்சுவைப்புனற்றென்க
ரை,மேயகும்பத்தலமும்விழைநதுதாழ்ந, தேயவங்கணிருந்தனனெனப
[வே. (கரு0)

இதுதெரிந்திலனித்தனைநாளெலா, முதுகொடுந்துயர்மூழ்கலுற்றேனந்
வெதுவிரும்பினுமீயுமித்தேமெனுப்,பதுமமாதிபலகொடுபூசிப்பான்.[தோ

பரவுசெம்பொன்பரப்பியுயர்கருக், கிரகமோடத்தமண்டபங்கேடிலா
வரனிலாவியமாமண்டபம்மெழில், விரவவாற்றினிக்கும்விளைத்தனன்.

மலழயுரிஞ்சுமதிலைநதெடுத்தனன், றழைபொற்கோபுரம்பல்லசமைத்தன
ன், விழையுநதூண்பலமேவியமண்டபம், பிழையில்யாவுமபெருகவியற்றி
[னன. (கருரு)

அருள்விராயவமுதகடேசத்தும், பொருள்விராயபலவும்புரிநதனன் [ன
றெருள்விராயவண்டெய்வப்புனற்குக்கா, மருள்விராயபடியும்வகுததன

விளைநிலங்களுமேதகுசோலையு, மிளைகொணந்தவனமுமியைபெருங்
களையமைநதகனகப்பணிகளு, மளையும்பட்டுடையாதியபல்லவும், (கருரு)

குடைவெண்சாமரைகோணுததண்டக்கோ,ணடைதருந்தண்டமான்றபல்
பாத்திர, முடைதராச்செம்பொனூர்தியுமற்றுநன், னடைகொள்வேநதன
[மக்குறநல்கினன். (கருசு)

அந்தமாத்தலத்தன்பின்வசிப்பவர்க், குந்தவேண்டுவயாவுமுதவினு
னந்தமாரருள்பெற்றுநலம்விராய்ப, பநதமோவியபார்த்திபனேகினன்.()

தேவதீர்த்தப்பெருமையைச்செப்பினு,மேவவின்னும்விளம்பிலனேகமாம்
பாவமற்றதனபோசொலபபாறிடு, மோவநேருமொளியிழைமாதராய். ()

என்றுகூறவிறைவிமகிழ்ந்தன, ளன்றுவானவதீர்த்தநலஞ்சொற்று [ம்.
மொன்றுமாமுனிதீர்த்ததிலுண்மையுங், கன்றுசேர்கற்கழியப்புகலுவா

தேவதிர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கச-இ-திருவிருத்தம்-எகூச.

## முனிதீர்த்தப்படலம்.

நலமலிசனற்குமரனந்திதன்மலர்பபாதம்
புலமலிதரப்போற்றிப்புகர்தபுமுனிதீர்த்த
வலமலிமான்மியமும்வகுத்தருளென்றிரப்பப்,
பலமலிதவத்தனையான்பன்னுவனுவப்புற்றே. (க)

இறையவன்முகநோக்கியேழுலகமுமீன்றுண்
மறைமுடியுணர்வரியாய்வானவதீர்த்தத்தி
னிறைபுகழ்கேட்டுவந்தேனிலவுமத்தலத்தின்று
முறைபுனல்சிறந்துளதேலருளென[illegible]ாசெய்வான். (௨)

பனிமலைவருபாவாய்பதுமகற்பத்திடையுட்
கனிவருகலிவருதல்காணுபுவசிட்டனமுதன்
முனிவரர்மலர்மகனைமுனனுபுதொழுதேத்திப்
புனிதமூறுதானம்புகறவஞ்செயறகென்றார். (௩)

அனையவனுளத்தெண்ணியார்கலிசூழுலகிற்
புனைதமிழ்வளநாட்டுட்பொன்னியின்புனல்பாய்ந்து
நினைவளம்பலவாக்குநேரியனன்னாட்டிற்
கனைகடறகரையுளதுகடைதபுகாரோணம். (௪)

கண்ணியபாதாளகங்கையென்றொருதீர்த்த
மண்ணியசிவபெருமானன்றமைத்திட்டது
புண்ணியமிகவாக்கும்பொற்புளதத்தலத்தே
நண்ணியததுவைகுநதானமுநவின்றிடுவர்ம். (௫)

கருதியகாயாரோகணலிங்கத்தினுக்கு
நிருதியந்திசைமேவுநிகரிலத்தடம்படிந்து
சுருதிசொல்விதிப்படியவ்விலிங்கத்தைத்தொழுதேத்தி
யொருதினம்வசிததிடினுமுறுபயன்பெரிதாமால. (௬)

அத்தலமுப்பொழுதுமயின்றினிதிருப்பாரு
முத்தலங்களும்புகழமுத்தர்களேயாவர்
பித்தலமந்துழலும்பேயர்களடைந்தாலுங்
கைத்தலவாமலகம்போற்கதிகாணுவரே. (௭)

கண்டவர்சிவலோகங்கண்டவர்காணுது
விண்டவருயர்பனைத்தும்விண்டவரளறனைத்துங்
கொண்டவர்வசிக்குநசைகொண்டவரமுதள்ளி
யுண்டவர்தொழப்பொலிவாருத்தமரவர்கண்டீர். (௮)

கடுநுகர்காயாரோகணச்சிவபெருமானூர்
வடுவகிர்க்கருந்தடங்கண்ணுமையொடுமகிழ்ந்தமர்ந்து
கொடுவினைமலங்கசுகுறுகினர்தமகொழித்து
நெடுநிலம்புகழின்பநிரப்புவர்முனிவரர்காள். (௯)

சொற்றவத்தலம்புகுந்துதூயவத்தடம்படிந்து
பொற்றநங்காரோணப்புனிதனைக்கைதொழுது
நற்றவமினிதியற்றியமருமினெனநளினத்
துற்றவன்விடைகொடுத்தானுறுவரர்தொழுதெழுந்தார். (௧0)

தொழுதெழுமுனிவரெலாந்துமலரோனுரைத்த
பழுதறுகாரோணப்பதிவயினுறப்புகுந்து
செழுவளம்பலநோக்கிச்சிந்தையிற்களிப்பெய்தி
யுழுவலன்பொடுநிருதித்திசைப்புண[illegible]ற்றனரே. (கக)

தருப்பைகையுறக்கோத்துச்சங்கற்பம்புரிவாரும்
விருப்பொடுபடிவாரும்வெண்பொடிபுனைவாரு
மொருப்படுபிதிர்க்கருமமொருங்கவட்புரிவாரு
மருங்குபுறச்சூழ்வாருமாயினர்பலரம்மா. (கஉ)

அதிசயமிகவிளையவன்னதுந்தெரிந்தாராய்
மதிமுனிவரரெல்லாமறைமுதற்கலையுணர்க்கும்
விதிகொடுபடிந்தாடிவெள்ளியநீறணிந்து
துதிசெய்கண்மணிபூண்டைந்தெழுத்துமெண்ணினர்துணிந்தே. (கந)

நமதருட்குறிமுன்புநண்ணினர்தொழுதேத்தி
விமலமதுறநினையுமிகுவிருப்பொடும்போற்றி
யமுதகடேசத்துமணைந்தனர்சூழ்ந்திறைஞ்சிக்
குமுதமென்மலர்செறியப்பனற்கரைகுறுகினரால். (கச)

சாலைகள்பலவமைத்துத்தவவசிட்டன்பிருகு
மாலைபிறிரணவிந்துமார்க்கண்டன்மனுத்தக்கன்
காலவன்றீர்க்கபதன்கௌதமன்கற்கனறம்
போலமர்சதாநந்தன்புலகன்கண்ணுவன்குசரு. (கரு)

அத்திரியாங்கிரசன்றவுமியன்விசுவா
மித்திரன்வாதாசிவாயுபோசனன்மிளிர
கத்தியன்முதலானோர்கணக்கிலர்கலைகற்கும்
புத்திரர்தம்மோடும்பொருந்தினராவயினே. (கசு)

கலைநவில்பாதாளகங்கையென்பெயர்த்தீர்த்த
மலைவறவன்றமுதன்மாமுனிதீர்த்தமெனத்
தலையமைபெயர்பெற்றதத்தடம்படிவார்க
டொலைவரும்பாவமெலாந்தொலைத்துயர்புறலுண்மை. (கஎ)

ஆயவத்தடப்புனறோய்ந்தமர்தருபெருஞ்சிறப்பாற்
பாயவைம்பொறியடக்கிப்பழமலவேர்களைந்து
தூயநிமருள்வாய்ந்துசுந்தரப்பேரின்ப
மேயவராயுவந்தார்வேண்டுவதினியென்னே. (கஅ)

வணிகர்தங்குலத்துதித்தான்மடமுருக்கொண்டனையான்
கணிதமில்பெரும்பாதகக்கொருகுழிசியனு
னணியிழைமடவார்க்கேயாட்படும்பெருநோன்பிற்
றிணிமனத்தானொருவன்றேவலனெனும்பெயரான். (க௯)

வேதநிந்தனைபுரிவாராகமம்விளம்பிடினும்
போதநிந்தனைபுரிவானபுன்மையில்லைநிகரொன்
றோதநிந்தனைபுரிவானுலாத்தவையன்றியும்பல்
பேதநிந்தனைபுரிவானயித்தரினுழிதருவான். (௨0)

நீறுகண்மணிபூண்டுநேர்வருந்திருவினரைச்
சீறுபுழுங்கிடுவானிந்தையுஞ்செப்பிடுவான
பேறுசெய்நீராடலபிறங்கரங்குறிகாணடல்
காறுமொன்றருந்தாலாககலபயவளாயுங்கபேயான. (௨௧)

பரதிரவியங்கவர்வான்பழிபாவங்கருதான
பரமடவார்ப்புணர்வான்பாதகம்புரிவாரோ
பரமெனப்புகழுநதிடுவானபாரிடுககணபடுதல
பரவுறககணடேகண்படைகொளுங்கியதியினன. (௨௨)

இழிகுலத்துதித்தாருமிழிதொழிலபுரிவாரும
பழிவரல்கருதாதானபறறினாறுகர்வாரும்
பிழியுறக்குடிப்பாரும்பெண்களைபபுணர்பபாருங்
கழிமகிழ்கொளத்தழுவிககலந்தமாவாழ்க்கையினன. (௨௩)

தண்மையும்பொறுமையுநறறவமுடையாககுதவும
வண்மையுங்கண்ணோட்டமாணமையும்வருவதுணா
றுண்மையுமறம்புரியுநோண்மையுமேலாய
வுண்மையுமவனிருநதவூரினுமிலைமாதே. (௨௪)

கொடியவனிவனொடுங்கூடுதற்கஞ்சினள்போ
னெடியசுகுணமனைவிநீத்தனளுயிரபபாற
கடியமைபுதல்வர்களுங்கழிநதனர்தனியாகிய
படியுழிதாலுற்றான்பாதகத்தேவலனே. (௨௫)

தீயினுமவருத்துமிடிசெறிநதலைதிடபபுழுதத
நாயினுஙகடைபபட்டுநாட்டுழிதருகாலை
நோயினுங்கோட்பட்டுநோதகவொருங்குமிகப
பேயினுமுலைகின்றனபேதைமைததொடக்குணடான. (௨௬)

உடம்பிடைநெய்ததோரசியொழுகுறுபுண்ணுகி
விடம்படுவாய்முழுதுமிகக்கிருமிகளகொணட
விடம்படுகாசழுதலெத்தனையோபிணிகண்
மடம்படுமவற்குறறவருத்திடும்பசிபிணியும். (௨௭)

ஓவெனவலறிடுவாலுளமுலைநதிரங்கிடுவா
னுவெனக்கரைதருவானடரும்வெம்பிணியென்பா
னோவெனவிரங்கரமேகோக்கழுஞ்செய்யாமே
போவெனப்புகன்றமைமேபுலைப்பிணியாய்த்தென்பான். (௨௮)

உடம்பெழுமுடைநாற்றம்யோசனைவீசுதலா
லிடம்பயிமறுகிடத்துமெதிர்ப்படினெதிர்கண்டோர்
திடமபடவாயாமஞ்செயலெனநாசியுதைத்
தடம்படுகயமகனேயகலகலெனக்கழிவான. (௨௯)

இன்னணமுழிதருவோனியன்றமுறபவநலத்தாற்
கனைவினமதில்புலடைசூழ்காமருகாரோணத
தன்னருமுனிதீர்த்தத்துற்றனனொருநாளப்
பொன்னவிர்தடநகுடையும்புண்ணியர்பலருள்ளும். (௩0)

யாவரும்புகழ்மகதியாழ்முனிவரன்கண்டான்
மேவருமாபாவிமேவியதெனனேயெனத்
தாவருஞ்சினங்கொண்டுதைக்நதிவணடைநதனையா
ரோவரும்பழிபூண்டாயுளாயெனதொழுதெழுந்து. (௩௧)

ஆயதனுறபவமுமாற்றியதீவினையு
மேயவில்லொடுபுதல்வர்வீநததுமிலம்பாடு
பாயதும்பல்பிணிக்கோட்பட்டதுநோதகவாந
தீயதுமெடுத்தோதிததீனொவழுதனனால். (௩௨)

முனிவரனமுனியானுயமுயஙகிரககுமமபொருநதிய
புனிதமில்பாவியிபபுனலிடைகுடையெனமுன
றனியுவப்படைநதானுய்சசாறறியபடிகுடைநதா
னனியமைபுண்ணநகீரநனைதலுங்காய்நதனவே. (௩௩)

மெய்யுறுநோயமுழுதும்வீநதறுவியாத
பொய்யுறுபாதகமுமபோகியதாலுலுஞ்
செய்யுறுநிநதையிறுறசெறிபழிதீராத
தெய்யுறுமுனியிரங்கியிஃதுவறகுரைததனனே. (௩௪)

நெறியொழுகியாவரையுநிநதிததகீழமகனே
முறிவருமபபாவமுருங்சூதறகெளிதேயோ
செறிதருமித்தீர்த்தநதினநதொறுமபடிநதெழுநது
பறிபுளாசடையெமமாற்பரவுதியெனபபணிததான. (௩௫)

பெருமுனிசொறபடியேபிறங்குறுமுனிதீர்த்த
மொருமையன்புறவாடியொளளியகாரோணத்
தருமருநதனநநதமருட்குறிதொழுதேததிப
பொருவினினையுமபோறறும்புலனெறிகைக்கொண்டான். (௩௬)

கேத்திரஞ்சூழதருவான்கேத்திரதுள்ளாய
தீர்த்தங்கடோய்நதெழுவானசெறியுநமமடியவரை
யார்த்தியிறபணிநதெழுவானரகரவெனநடியயா
னேர்த்தபுண்ணியமபொரவியவின்னணம்பயின்றிடுவான், (௩௭)

முனிவரைவணங்கிடுவான்முதுகொடும்பாதியிவ
னினியமென்றெண்ணுமலருள்செயவேண்டுமென்பா
னினியனவரயமொழியாவர்க்குமெடுத்துரைப்பான்
றனியமைபத்திமையிற்றலைமையனாயினனே. (௩௮)
கனிதருமனத்தமுதகடேசமும்போய்ப்பணிவான்
பனிமலர்செறிதேவதீர்த்தமும்போய்ப்படிவா
னனியருள்பெறலின்றிநாயினுங்கடைப்பட்டுத்
தனியமைந்துழன்றதெலாஞ்சூழ்ந்துநெட்டுயிர்த்திடுவான் (௩௯)
முழுவலன்புடையோனுய்ப்பத்தியுண்மூழ்கிடுவான்
செழுவியகாரோணத்திருத்தலத்திவ்வாறு
பழுதறவமர்ந்துடலம்பாண்மையிற்கழித்துடனே
வழுவினங்கணத்தலைமைமாண்புபெற்றினிதமர்ந்தான். (௪௦)

வேறு.

பதியமையாதார்தங்கள்குலத்துற்பவமுறரு
ளுதியமைவேலும்வாளுமருட்டுநோக்கத்தாண்
மதியெதிர்கூம்பாத்தாமரைபோலும்வதனத்தா
ளதிநலமிக்காள்சுண்டிலையென்பதவணாமம். (௪௧)

ஆயவனப்புப்பொழிமழைநேருமைம்பாலா
யேசுதைக்கும்பத்துணைபோனறசுவர்க்கத்தா
ணேயமிகுத்தேயாரும்விரும்புநிதம்பத்தா
டேயமனைத்துஞ்செல்லுபுமீளுஞ்செயனெஞ்சாள். (௪௨)

மண்டிலைவெள்வேன்மைந்தர்கள்யாருமனமாழ்கிச்
சுண்டிலையென்னுநாமவணங்கேதொடொம்மைக
கண்டிலநெஞ்சிற்கொண்டிலையாருங்கடனீதோ
வுண்டிலையும்பாருங்கழிபோதிங்குமிழென்பார். (௪௩)

சொன்னமுடிப்பையவிழ்த்திடுவாரேதொருவாரோ
யன்னமுடிப்பையவிழ்த்திடுதற்காமறமுள்ளார்
முன்னமுகர்திடுமுத்தம்மீயுமுறையோரே
தன்னமுகர்திடுமுத்தம்மேற்பார்தாமாவார். (௪௪)

பல்லுக்கொவ்வாமுல்லையரும்பும்பனியார்தீஞ்
சொல்லுக்கொவ்வாதாரமுதும்பொற்சுடர்மேனி
யெல்லுக்கொவ்வாமின்னலைத்துமெழிலன்னாள்
புல்லுக்கொவ்வாதாலயிராணிபுணர்ப்பம்மா. (௪௫)

கோடலினுன்மனநேரெனயாழ்கைக்கொண்டேறப்
பாடலினுன்முழவாதியசேரும்படிபண்ணி
யாடலினுன்மதனாகமநூல்வழுவாகாது
கூடலினுன்மிகுபொன்பறிசெய்துங்குறையோவர், (௪௬

அன்னவளைக்கண்டானொருநாண்மிக்கதிமோகந்
தன்னமருண்டான்மாநகர்காவற்றொழில்பூண்டான்
மின்னகுவாளான்வீரரில்வீரன்விடர்கோமான்
பொன்னவிர்பூணன்பஞ்சசனப்பேர்பூண்டுள்ளான். (சஎ)

என்னோநாமினியெண்ணுவதென்றவளிற்புக்குத்
தன்னேரில்லாநித்திலமாலைதகச்சூட்டிப்
பொன்னேதேனேபூவாய்பாவாய்பொற்கொம்பே
மின்னேயென்னைக்காத்திடுகென்றான்மெலிகின்றான். (சஅ)

பஞ்சசனன்கொள்காமமுநல்கும்பரிசுங்கண்
டஞ்சனவொண்கட்சுண்டிலையென்பாளணைமேலாற்
கஞ்சமுகத்தின்மலர்ச்சியுமூரற்கவவுஞ்செய்
தெஞ்சலிலாமலின்பம்விளைத்தாளினிதோங்க. (சகூ)

எண்ணியபோகந்துய்த்தகமகிழ்தலிலிணையில்லா
னண்ணியநாடொறுமீதலைமேற்கொளுமதனாலே
நண்ணியபொன்மணிப்பூண்விளைபூமிநலஞ்சாரில்
புண்ணியமாதியொழிந்தமழக்கைப்பொருளேபோல். (ருo)

கடனனிவாங்கியுநல்கினன்மேலுங்கடன்வாங்கற்
கிடமிலையாதலினுள்ளவர்தம்மிலிராப்புக்கு
மடனுடையான்பொருள்வௌவியுமீந்தான்மற்றஃதுந்
திடனமையாமையினென்செயலென்றுதிகைத்தானால். (ருக)

செறிபெருவணிகர்குலத்திலுதித்தான்சீலத்தாற்
குறிசிவயோகியெனும்பெயர்பூண்டான்குணமிக்கா
னெறியுளிநம்மையருச்சனையாற்றிடுநியமத்தான்
முறிவில்சிறப்பினம்மடியாரைநாமெனமுனல்செய்வான். (ருஉ)

கதிரெழுமுன்னமெழுந்துசெய்நித்தியகடனாற்றிப
பிதிர்தலினங்குறியன்பொடுபூசைபெறச்செய்து
முதிர்தருநண்பகனம்மடியாரொடுமுற்றையுண்பா
னதிர்கடல்சூழுலகத்திலவன்பொருவார்யாரே. (ருங)

மற்றவனுடொறுமீட்டுவயாவும்வளங்கூர்நூல்
சொற்றநம்மாலயமாற்றுபணிக்குநதரிசோவக்
கற்றநம்மடியவர்தஞ்செலவிற்குக்கனிநதீவா
னற்றவர்யாவருமன்னையெனப்பொலியறமிக்கான். (ருச)

அனையன்மனைத்தலையோரிரவுற்றனனணியாடை
யனைகலனுதியவெளவுபுசுண்டிலைமனையுய்த்தான்
கனைகதிர்வந்தெழுகாலையுணர்ந்துங்கவலாதுய்ப்
புனைபுகழ்வண்சிவயோகிநம்பூசைபுரிந்தானே, (ருரு)

பஞ்சசனன்செயன்மன்னனறிந்துபரிந்துள்ள
மஞ்சவொறுத்துயிர்போக்கமுயன்றிடுமக்காலை
நெஞ்சமையுஞ்சிவயோகியம்மன்னவனேருற்றுத்
தஞ்சமிவன்செயலென்றுகவர்ந்தவர்தாம்வேறால், (ருரு)

அன்னார்வெள்ளிப்படினெண்ணியவாசெயலறமென்றான்
மன்னன்விடுத்தான்கள்வன்சுண்டிலைமனைபுக்கான்
மின்னனையாண்முனிதீர்த்தமொர்நாண்மேவித்தோய்ந்தாள்
பின்னர்வரும்பஞ்சசனனுமுழுகினன்பேணாதே. (ருஎ)

பயன்விளையாதிவராடவுமோங்கியபதிஞான
மபலறுமாறிருவர்க்குமுதித்திடமாண்பெய்தித்
தயனுளபொன்முதலாயவெலாந்தளிசோத்தா
ளியலுறவிருவருமீற்றினம்மடிநிழலெய்நதாரோ. (ருஅ)

பஞ்சசனன்சுண்டிலையிவர்முத்திபதிந்தாரோல்
வஞ்சமிலாச்சிவயோகியுமுத்திவளம்பெற்று
னெஞ்சலிலாதெனவேண்டுவதோவெல்லாமுதவு
மஞ்சமுலாவுமலர்த்திரண்முனிவராருந்தீர்த்தம். (ருகூ)

மலர்மகளுறியர்தம்பதமுந்தரவலதந்த
வலர்முனிதீர்த்தமெனப்பரனோதவகங்கொண்டாள்
புலர்தலிலாப்பளைமுனிவரர்தீர்த்தப்புகழ்சொறரும்
பலர்புகழ்காகதடப்புகழுஞ்சிலபகர்கிற்பாம். (சு0)

முனிவர்தீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கஉஇ - திருவிருத்தம் - அஉச.

## காகதீர்த்தப்படலம்.

வண்மைச்சயிலாதிமலர்ப்பதமாணபிறபோற்றித்
தண்மைத்தவத்தானுயர்ந்தோங்குனைற்குமாரன்
கண்மைத்திடநீன்மணிவீசலைக்காகதீர்த்தத்
துண்மைத்திறமேழாதெனவோதலுற்றுனுவந்தே. (க)

முத்திற்பொலிவெண்ணலைகயாள்கருமுற்றுமாமே
கத்திற்பொலிகண்டனைத்தாழ்ந்துகதித்தகாரோ
ணதைதிற்பொலி * நீரினுமோதெனநாடியொன்று
பத்திற்பொலியுண்ணலுவந்துபகரலுற்றான், (உ)

சிந்தாமணியுந்நிதியங்களுஞ்செவ்விதோங்கி
நந்தாவொருதேனுவுந்தன்னருணைட்டநோக்கச்
சந்தானமாதித்தருவைநதுநதலைழந்துமல்க
முந்தாரமுதமுணனோக்குபுமுன்னர்மேவ. (ந)

* நீர் - விசேடம,

பகர்தேவர்முப்பத்துமுக்கோடியர்பக்கமேவப்
புகர்மேவிரட்டித்திதிமைந்தர்புறங்கிடப்ப
நிகர்தீருமாதவராசிநிரம்பியோங்க
நகராவமுதிற்சிலரின்னிசைநூலிற்பாட. (௪)

அதிரூபவரம்பைதிலோத்தமையாடல்செய்ய
மதிநேர்வதனத்தயிராணிமருங்கிருப்பத்
துதிசேர்விருதாவளிமுன்புதுவன்றிநிற்ப
விதிசாலரியாதனமீதமர்வேள்விவேந்தன், (௫)

கலைமாமதியம்புரைசாந்தன்கடுப்பொன்றில்லான்
கலையாதசமாதியனுகங்கலந்ததிக்குக்
கலையாணமையேமதிக்கின்றகௌதமப்பேர்க்
கலைமாமுனிவன்மனையாளகலிகையென்பாள். (௬)

மழைநேர்குழலும்பிறைநேர்நுதன்மாண்பும்பொற்
குழைசேர்செவியும்புருவப்பெயர்க்கோடுவில்லு
முழையாவுமருட்டியகண்களுமொப்பின்மூக்குங்
கழையாமொழியும்பளிங்கொத்தகபோலச்சீரும். (௭)

செறிவண்டளவாநகையுந்துகிர்ச்செய்யவாயுங்
குறிவாண்முகமுங்கழைத்தோளுங்கொழுங்கழுத்து
மறியாழுறுதண்டின்முன்கையுமங்காந்தட்கையு
மறியாப்பவளக்கிளைபோல்விரல்வாய்ந்தசீரும். (௮)

கிளிமூக்கனையநகமுந்தனக்கிண்ணமாண்புங்
களியாவிடையுஞ்சுழியுந்தியுங்காமர் + ஆலபச்
சொளியாரிலையின்வயிறும்வயிற்றெண்மடிப்பு
நெளிபாம்புபைத்தபடம்போன்றநிதம்பச்சீரும். (௯)

கதலிக்கவான்றெண்டுவரால்கமடம்பொரூஉ ‡ முப்
பதமொய்த்தமஞ்சண்முளைநேர்விரல்பன்னகச்சீ
ரிதமுற்றயாவுந்தவருதுளத்தெண்ணியெண்ணி
விதனப்படுவானழல்சார்ந்தமெழுகுபோன்றான். (௧௦)

வேறு.

வரைபொடிபடுக்குந்தோலாவலிச்சதகோடிவேந்தன்
கரையறமதிமாழாக்குங்காலையிற்கழைகுழைத்து
விரைமலர்க்கணையனேகம்விடுத்தனன்மாரவேளும்,
திரைசெறிகடல்சூழ்வைப்பினிழிந்தனனுயர்வுதேறான். (௧௧)

பெற்றதைச்சிறிதுசெய்துபெருதண்டப்பெரிதுபண்ணு
மற்றமில்வலியான்மிக்கவாணவமலக்கோட்பட்டோன்
கற்றவர்புகழுமேன்மைக்கௌதமமுனிவன்வைகுங்
குற்றமிலிருக்கைப்பாங்கர்க்குறுகினனெடுமால்கொண்டே. (௧௨)

+ ஆல்-ஆலமரம், ‡ முப்பாதம்-முழங்கால்-கணைக்கால்-புறங்கால்.

தவமுனியிருக்கஙீங்கத்தக்கதோர்சூழ்ச்சியெண்ணிக்
கவன்மனத்தடைந்ததீயோன்காரியென்பெயருக்கேற்ப
வவமுறுங்காரியாகியடுத்துமுக்காற்கனைநதான்
புவனமொன்றிருடீர்போதுபோநதென்றுள்ளங்கொண்டு. (கரு)

முனிவரணியதியாற்றமுடுகுபுநதிப்பாற்சென்றான்
றனிமைகண்டுவச்சுருங்கள்வன்றன்னுருவெடுத்துமங்கை
யினிதுறவிருந்தசாலையெய்தினனெய்தலோடும்
புனிதமாமுனியேவந்தான்போர்தீலனென்றிருந்தாள். (கசு)

வளமுறவமளிமேவிமார்புறவிறுகப்புல்லி
யிளமுலைவருடிமுத்தமிட்டுவாயூறன்மாநதி
யுளநெகிழ்தரமருங்குலுறுகலைநெகிழ்த்தாங்கல்கு
விளகுறக்கரணமெல்லாமியற்றினனின்பநதுய்ததான். (கரு)

பொம்மல்வெம்முலையினாளும்புணர்ச்சியின்வேறுபாட்டா
லம்மநம்முனிவனல்லனயலனென்றுணர்நதுங்காதல்
விம்மநனிகழைத்தலாலேவிலக்குதறவிர்நதிருநதாள்
செம்மலிந்திரனுமுற்றத்திளைத்தபினச்சம்பூண்டான. (கசு)

கண்டிடின்முனிவன்சாபங்களவினுங்கொடிதாய்வநது
மண்டுமேயெனமருண்டுவாசலைகரநதுபோனான்
கொண்டலங்கூந்தற்கோதாய்குலமுனிநதிப்பாலெய்தி
ய்ண்டுநள்ளிருளேயாயதறிந்துளதென்னலுற்றான. (கஎ)

காகநள்ளிரவின்முக்காற்கரைவதற்கேதுவெனனென
ருகமுப்புரிநூலாளனுணர்தியாலாய்ந்தானுக
மேகவாகனனிவ்வாறோர்வினைசெய்துநமதுபனனி
போகம்வேட்டடைநதானென்றுதெரிநதனனபொங்கினனால். (கஅ)

விரைதரக்கடுகிவந்துமெல்லியலாளைநோக்க
வுரைதருமாதிநாணமுலைததிடவொதுங்கிநிற்கும
புரையுணர்நதமுனறுசீறிபொதுமகளானாய்போத
வுரைசெய்பேதைமையானற்றால் † உபலமாய்க்கிடத்தியென்றான். (கசு)

தடுப்பருஞ்சாபமேற்றுத்தாழ்குழலகல்லாய்வீழ்ந்தாள்
விடுப்பருஞ்சீடர்தாழ்ந்துவீடுரைத்தருடியென்னக்
கடுப்பரும்பிருகுசொல்லாற்கரியவனிராமனாவான்
றொடுப்பருமவன்கழற்காற்றுகள்படத்தொலையுமென்றான். (உ0)

கள்ளருநதிருவின்வானநாடொருங்காளும்பேதை
யுள்ளருமயூலாளபன்னியொருநிதம்பத்திற்பூண்ட
விள்ளரும்விழைவாலின்னேமெய்யடங்கலுமறநஃதே
தள்ளருமிரணைடஞ்ஞூறுசார்தரககடவனென்றான். (உக)

† உபலம - கல.

வீடருங்கொடியசாபம்விளைத்தபின்வெகுளிநீங்கி
வாடருஞ்செய்ன்மாறுக்கர்புரிபணிமகிழ்விற்செய்ய
நாடருநம்மைப்போற்றிநயங்கிளர்சமாதியுற்றான்
கூடருந்தவத்தான்மிகருக்குலாங்கௌதமப்பேரோனே. (௨௨)

இவ்விலையின்னதாகவிடுகொடுஞ்சாபமேற்ற
வவனுடம்படங்கயோனியாயிரஞ்செறிந்ததோர்ந்து
தவன்மனைவிழைந்தபாவந்தடித்திவ்வாறுயதென்றுள்
குவணிராணங்கொள்வன்குணிப்பருந்துயரத்தாழ்வன். (௨௩)

இமையவரொருங்குதாழ்பேறெய்தினேன்கெட்டேனென்னு
மமைபுலோமசைதெரிந்தாற்சிரிப்பளேயாவாவென்னுங்
கமைதவிரவுணரெல்லாங்கைகொட்டியிகழ்வாரொன்னுஞ்
சுமையுடம்பொழிவுமில்லையினியெவன்சூழ்ச்சியென்னும். (௨௪)

மருவொருகுறியுளாரும்வான்பெரும்புடவைகொண்டு
பெருகுறச்சூழ்ந்துசூழ்ந்துபெருந்திரோதானஞ்செய்வா
னொருவறவுடம்புமுற்றுமுளகுறிபல்லவெனனி
யிருமைமிகவுடையேன்யாதர்லெங்ஙனமறைத்தல்செய்வேன் (௨௫)

முடையடுமுவர்நீருறிமுழுமையுமசும்புசெய்து
மிடைகுறிபல்லதாங்கியரியணைமேவமாட்டே
னுடைதிரைப்பரவைஞாலத்தொளிப்பனென்றெழுந்தானப்போ
தடைதருகுரவன்போக்குத்தடுத்திஃதறையலுற்றான். (௨௬)

செறிபெருந்தவத்தினாற்குச்செய்ததீங்கெளிதுபோமோ
குறிபல்வுடம்பினுகக்கூறியதருளேயன்றோ
நெறியுறுதீர்த்தமெல்லார்நெடும்புவியடைந்தாழ்கி
யறிதரக்கங்கையாடியாங்கமொழியுமென்றான். (௨௭)

குருமொழிசென்னியேற்றுப்பணிந்தனன்விடையுங்கொண்டு
திருமலிபுடவிமேவித்தீர்த்தங்கள்பூலவுந்தோய்ந்து
பொருவருங்காசிமேவிப்புண்ணியக்கங்கையாடிப்
பெருகொளிநம்மைப்போற்றியிருந்தனன்பேணிப்பன்னாள். (௨௮)

இன்னணமிருக்கும்வேந்தனீராயிரமாண்டுசென்றுந்
தன்னமுமுனிவன்சாபநதகததுன்பொழியக்காணான்
பன்னருங்கவலைகூர்ந்துபண்ணுவதினியென்னென்று
முன்னமேயாங்குமேயகண்ணுவமுனியைக்கண்டான். (௨௯)

கண்ணுவமுனியைக்கண்டுகதுமெனவவன்றாள்போற்றி
நண்ணுவமானமில்லாய்நஞ்சமூதென்றுரைத்தே
னெண்ணுவதினியுன்னுறவிடும்மையநோய்க்கவதியில்லை
பண்ணுவதிதவென்றே * பார்பதிதீர்த்தமனைத்துந்தோய்ந்தேன். (௩0)

* பாரபதி-பூமியிறயதிரத.

இராயிரவருடங்கங்கையிரும்புனரேய்ந்திக்குள்ள
பராபரவிலிங்கம்போற்றிபயததிசெய்தமர்ந்தேனின்னும்
விராவியதீமைதீர்ந்துமேதகவடைந்தேனல்லேன்
புராதனமுனிவயானெனபுரிகுவதுரைத்தியென்றான். (௩௧)

வரைப்பகைமாற்றங்கேட்டமுனிவனவாய்முறுவல்பூப்பத்
தரைத்தலைத்தீர்த்தமெல்லாநதவாமலாடினன்யானென்றே
யுரைத்தனைபொய்ம்மைகாயாரோகணத்துறருய்கொல்லோ
விரைத்துபன்மலர்சாறீரததமேதகவொனறுணடாங்கே. (௩௨)

தூயபுண்டரீகன்றனென்சொற்படியாங்குமேவி
மேயபல்புனலுமாடிவிருபபிறகாரோணலிங்க
நாயனைப்பூசையாற்றிநயப்பநாலாம்பதசதி
லாயமெய்யொடும்புகுநதானனநததவசனுனன். (௩௩)

தெள்ளியபாடையாயதிராவிடம்வயங்குநதேயத்
தொளளியதரக்குயர்த்தோனுயர்முறைசெலுத்துநாட்டி
னள்ளியகுணுதவேலைக்கரைநகுபொன்னிதென்பால்
வள்ளியபுகழ்சால்காயாரோகணமருவுமெனறும். (௩௪)

அந்தமாத்தலத்திலென்றுமடைபவர்பிறவிவெநநோய்
சிநதவும்பேரானநதஞ்செறியவுநகற்பகாலத்
துந்தமூர்த்திகளெலாமவநதொடுங்கவுமுளைத்ததம்மா
சந்தமார்ஞானநதத்தற்பரவிலிங்கமொனறு. (௩௫)

நேயவவ்விலிங்கததிற்குநிருதியநதிசையின்முத்தி
யேயநறபுண்டரீகமுனியிலிஙகததினமுனனந
தூயநனமுனிவர்வாவிக்குததரதிசையிறறேனறு
நாயகத்தீர்த்தமொனறுநயநததின்மூன்றுபோதும். (௩௬)

விதிவழியாடிபபின்னர்விளங்குகாரோணலிங்க
மதியுறப்போறறலோடுவெண்சுதைக்கடேசமேல்பாற
பதிதருகாரோணப்பேரிலிங்கமும்பண்பிறபோற்றித
துதிமுறைபுரிதல்வேண்டுஞ்சொல்வதொன்றினலுங்கேட்டி. (௩௭)

கொடியுருவமைநதுபாவங்குயிற்றியதிறனுலாங்குங்
கொடியுருவமைநதேதீர்த்தங்குடைசிலநாளிறசெம்பொற்
கொடியெனவனையுதீர்த்தங்குலவருள்செயுமப்போதே
கொடியிடைபாகர்காட்சிகொடுத்தருளசெய்வரன்றே. (௩௮)

நலமலிதருமாறின்றேநடமதிகடிதினென்று
னலமலிகுவவுத்தோளாரெனையெனவெழுந்துதாழ்ந்து
புலமலிவிசுவநாதப்பெயர்புனைநகமையும்போற்றிக்
கலமலிகடல்சூழ்நாகைக்காரோணநகரம்புக்கான், (௩௯

ஆண்டுநல்லோர்கள்பல்லோரமைதருபுராணங்கைக்கொண்
டண்டுவந்தடைந்தோரெல்லாமிருவினைப்பிறவித்துன்ப
மாண்டுகெட்டொழியப்போக்கிமனத்திடைக்குறித்தயாவும்
பூண்டுமிக்குயர்வொன்றுபுகன்றிடக்கேட்டுவந்தான். (சo)

இன்னுமப்புராணஞ்சொல்வோர்பரமடமாதொன்பார்
மின்னுமொண்கலசக்கொங்கைவிழைபவர்கயவராவார்
பன்னுமற்றவருமெய்திற்பரனருள்செய்வானென்ன
வுன்னுநெஞ்செயறேர்ந்தானொன்றுளத்தொருநாணுக்கொண்டான். (சக)

மீட்டுமப்புராணஞ்சொல்வார்வெய்யபாதகரேயேனு
நாட்டுமித்தலத்தைச்சார்ந்துநலமலியொருதீர்த்தத்திற்
காட்டுமற்போடுமூழ்கிற்கரிசறுத்துயர்வாரொன்று
பூட்டுபஃறீர்த்தமேன்மைபுகல்வதுவிரும்பிக்கேட்டான். (ச௨)

ஒருகருந்தடங்கணம்மையுற்றவர்க்குவந்துசெய்யும்
பெருகருள்பெரிதென்கோசீர்பிறங்குகாரோணநாதர்
தருமருள்பெரிதென்கோவென்சாற்றுவதென்றுபல்லோ
ரருகமர்ந்துரைப்பக்கேட்டானளவிலாவுவகைபூத்தான். (ச௩)

வீதியிற்சரியாநிற்குமாடவர்மின்னுக்கான்ற
சோதியிற்பரமின்னார்தந்தோற்றரவெதிரேகண்டு
நீதியிற்புடவிநோக்கிநேர்செலாதொதுங்கிச்செல்ல
வோதியிற்பொலியின்றேரோயுத்தமனொன்றுவந்தான். (ச௪)

தலனமைவளனிவ்வாறுசார்தரக்கண்டுசெல்லும்
வலனுயிர்குடித்ததோன்றல்கண்ணுவன்வகுத்தவாறே
புலனமைகாகமாகிப்பொருக்கெனப்பரந்துசென்று
நலனமையனையதீர்த்தநாடுபுகூடினனே. (ச௫)

கண்ணுவன்சொன்னதீர்த்தமிதுவென்க்கருத்தினராய்ச்
தெண்ணுபுவியந்துமூழ்கியேனையதீர்த்தமெல்லா
மண்ணுபுதோய்ந்துபின்னரத்தலத்தெல்லைசூழ்ந்து
நண்ணுவமானமில்லாநங்குறியடுத்துத்தாழ்ந்து. (ச௬)

பொருவரும்புண்டரீகன்பொற்புறப்பதிட்டைசெய்து
மருவுமன்புறப்பூசித்தமாண்பமரிலிங்கமுன்போய்ப்.
பருவரலொழியுமாறுபரிந்தருள்செய்தியென்று
வெருவரலொழித்தல்செய்வான்வீழ்ந்துவீழ்ந்திறைஞ்சல்செய்து. (ச௭)

பரவருமறையென்றோதும்பாற்கடலகத்துத்தோன்று
முரவமையமுதமாமைம்பதங்களுமுள்ளித்தீர்த்த
வரமெனுந்தடத்துமேல்பான்மாமுனிநிறீஇயவந்தத்
சிவலிங்கத்தின்றென்பான்முதற்பிரகாரஞ்சேர்ந்து. (ச௮)

மனமொழியதீதமாயுமண்முதற்சிவமீறான
வினைமாதொகுதியாவுமிடமுறுவதாயுநானு
மனகமதாயுமின்னதிருவெள்ளத்தறகொண்டுங்
கனவெளியாயுமோரமுதாயமுங்கழிப்பதாயும (௪௯)

ஆதியோடந்தமின்றியனந்தநுண்டோயந்தந்தோயாச்
சோதியதாயுமொவ்வாசாயமபிரகாசமாயு
மோதியினைந்தறிந்தவுறவாதமுளதறுங்கா
நீதியதாயுஞ்சச்சிதானந்தநிலைமைத்தாயும. (௫௦)

சடவிஷிரணைநீந்தகூடசியதாயுமனபிற
கிட்டுவதாயுமொன்றுபரதென்கிள்கருமுண்மை
யொட்டுவிட்டிடாருககொன்றுமொழிதராவினபமாயு
மெட்டுமேவுருவதாயுமியைபரமபிரமமாயும. (௫௧)

உளதமைமயிதயததெணணியுறுபொறியைநதுமாயததுப
பளகமைகரணநானகுமொருவழிபபடரவைதது
தளாவறவிருநதான காகவுருககொணடைசலகோபன
புளகமுணடாநநதிரசசவரததுமுபபோதுமூழகி. (௫௨)

ஓஙகுமிசசிபக்கிமேவிச்சிலபகலுறையுஙகாலை
வீஙகுமயபுனலிறமேயநதவிமேசடததாறககருமைதீரநது
பாஙகுகொளசெமபொனவணணமபடைததுககாகமேனி
தாஙகுமறறதுதெரிநதசசதமகனுவகைபூநதான. (௫௩)

பொனனிறமபடைககததாகசததுணைமையைபபுநதிதேரா
மூனனிறமொழிசதெனபாபுகுறிறமுயஙகிறறெனபா
ரொருவிர செவேணுவிநதவுருககொடிஙகிருநதானெனபார
நனனிறபபுனலவிசசடநாஞ்சொலபபடுமோவெனபார. (௫௪)

கணடவரிநவணணங்களைகூறிமகிழநதுகொளள
வணடராதிபாகசூடிபரிடடமுபபோழநதேயநது
கணடிலிலசிறபபுபெறறதனமையாறகாகதீரதத
மெனடறுபிரேயதீரததமெனறேறுதியமபினறால. (௫௫)

பரவுநாஙகருணோதூநதுபபஙகுசெவியுததிரததில
விரவுமாகாடபிநலமுனனுருமேவசசெயது
கரவுதிரயோசிமுறறுஙகணகளாபபொலியசசெயதா
மரவுலகுலாயனைருதியாயிரஙகணனுனனா. (௫௬)

முனபுபோலொருமுப்பத்துமுககோடிககடவுளாளா
வனபுசாலருளிறேமபியவுணவாவசிநதுமாட்டி
யனபுசூரரசெய்தியாயிரஙகணனுவெனறு
நனபுலமையககூறிமறைநதனனகமடநதாய. (௫௭)

மன்னியகாகதீர்த்தமாணபுங்காரோணமென்று
பன்னியதலத்தின்சீரும்பங்குனியுத்திரத்தினை
மின்னியவொருநாட்காட்சிவிழைந்துநல்கியதுமோர்ந்து
முன்னியமத்தனாயேமுயங்கியத்தலத்தமர்ந்தான். (௫௮)

ஆயவக்காலைவேந்தனாயிரங்கண்ணனாகி
மேயதுதெரிந்துகாணபான்வியாழமுஞ்சுரராரேரும்
பாயபல்வளக்காரோணப்பதிவயினடைந்தார்முந்தித்
தூயவொண்குருவைத்தாழ்ந்தான்றொழுதாங்கினியசொற்றான். (௫௯)

வீடருமபழியும்வீட்டிமெய்யெலாநயனமாக
நாடருஞ்சிறப்புநல்குநலத்தவோவாதத்தீர்த்தம
பாடருந்தலமிம்மூன்றுமெனின்மிணைபகர்தற்குண்டோ
வாடருமிவற்றிறருளுளதெவைகதுளதாயுகசாலே. (௬௦)

என்றுமாத்தலமுன்னூறாறும்புகழ்ந்தினிதிருக்குங்காலை
யொன்றுபொன்னம்புணாமேலிட்டுடறநிம்பாகைமைமாற்ற
வென்றுமேமபடுமீசதேததோாகுறிநிரீஇவிளமுநதுபோற்றி
நன்றுநாாதானஞசேறனலமென நலலாருளனறே. (௬௧)

அதுபுரிநரனனறேயென்றுயிரங்கண்ணனாக
முதுபுமுபபழங்காரோணவிலிஙகதுககுமுளரித்திக்கிற்
கதுமெனவமபுவீழுமெலலைபிறகடறநீரநயச
சதுமறைபுகழுநதெய்வபபொனனிராகமநதின்பாங்கர். (௬௨)

விணைவலமயணைகொண்டுமிளிர்கருகதிரகநொச்சி
புணைமணிச்சிகரியாதியாவையுமபொலிபச்செயத
வணையநனியமதனுளாலமரரோகணாசமென்றோர்
வணைபெயரிலிங்கநாட்டிமறறதனருமுறைனுக. (௬௩)

முணையவச்சிரங்கைக்கொண்டுமுருநிலமகழ்ந்துஞாய்நா
மணையபாதாளகங்கையதிர்நதுமேலெழுமாசெயது
நிணையமற்றமராரோடுநிலவுமபபுனலினமூழ்கிக
அணையமெய்யீரமபோக்கிதூயவெண்ணீறுபூசி. (௬௪)

அந்தநறறீர்த்தங்கொண்டேயமரரோநதிரோசறகாட்டிச்
சந்தமெனமலர்முன்னுயதனைழயுபகரணங்கொண்டு
முந்தநறபூசையாற்றிமுனனினறுதுதியுஞ்செய்து
பந்தமிலபழங்காரோணம்பண்புறமீட்டுமேபோற்றி. (௬௫)

செறிபெருநதேவதீர்த்தத்தென்கரையினிநமேய
குறிகிளர்கடேசம்போறறிக்கோதிலாப்புண்டரீக
ணறிதரப்பதிட்டைசெய்காரோணமுமன்பிற்போற்றி
நெறியுறப்பல்காற்றாழ்ந்தாங்குதல்குறியாவேந்தன். (௬௬)

அரிதவனின்றுநீங்கியான்றபல்லமரரோடுந்
தெரிபெருங்குரவனோடுஞ்சேனையர்தானைமேவிப்
புரிகுழலிந்திராணிபொம்மல்வெம்முலையிற்றோய்ந்து
பரிகரிமுதலசூழ்ப்பரிந்தரசியற்றிவாழ்ந்தான். (௬௭)

ஆயவச்சிரகங்கைக்கணமைந்தருவித்தியிற்றோய்ந்து
தூயநல்லமரரோந்திரோசனைத்தொழுவார்யாரு
நேயமிக்கமையமைந்தாமனைவியாநிரம்பவாழ்ந்து
பாயபல்போகந்துய்த்தப்பரகதியடைவாரீற்றில. (௬௮)

பிரியநாயகிக்குச்செய்யும்பெரும்புகழ்க்காரோணத்திற்
றெரியவெவ்விடத்துமேயசிவலிங்கமூர்த்தியெல்லா
மரியகாரோணமூர்த்தியமைந்தபலகுளமுமேன்மைக்
குரியநற்றேவதீர்த்தமாகுமாமுறைமையணைவர்க்கே. (௬௯)

என்றனன்முக்கணமூர்த்தியிறைவியுமகிழ்ச்சிபூத்தா
ளன்றமைகாகதீர்த்தநலத்தியல்பறியச்சொற்று
மொன்றியதவத்தான்மிககாருவநாறுகொண்மேன்மைத்தாய
வென்றியஞ்சருவதீர்த்தப்பெருமையும்விளம்பலுற்றும். (௭௦)

காகதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௧௨ இ திருவிருத்தம் - ௮௧௪.

## சருவதீர்த்தப்படலம்.

மொழிபெருந்தவத்திறையர்சனற்குமாரமுனிவரன்புகழ்ச்சயிலாதி
பொழிமதுக்கமலச்சேயிதழ்சமழ்ப்பப்பொலிதருதிருவடிவணங்கி
வழிபுனறபெருகிறசருவதீர்த்தத்தின்மாணமியங்கூறெனவிரப்பக்
கழிமகிழ்நினைத்துத்திருமுகமலர்ந்துகாதரத்தொடங்கினன்மாதோ. (௧)

செற்றமில்புவனப்பரப்பெலாமுயிர்த்துஞ்சிறறிளங்கன்னியாயமரு
மற்றமிலுமையாளண்ணலையணைந்தியானறகாரோணத்தினின்று
முற்றநற்றீர்த்தச்சிறப்புநனைகறியவுணர்த்திடவேண்டுமென்றிரப்பக்
கற்றவர்புகழ்வதொன்றுளதென்றக்கண்ணுதல்செய்யவாய்மலர்வான். ()

ஓங்குகாரோணலிங்கமென்றெவரு முணைசெய்நங்குறிக்குமேற்றிசையி
றோங்குபேரருளின்மிளிர்கருந்தடங்கட்செல்வியென்றமர்தருநினக்குமுற்
பாங்குசேர்நிருதித்திசைவயினுளதுபல்லுயிர்களுமெளிதுய்ய
வாங்குநாமன்றேயளவில்பேரருளாலமைத்தவான்சருவதீர்த்தங்காண். ()

தலமொருமூன்றினுளபலதீர்த்தசாரங்களனைத்தையுந்திரட்டி
நலமுறநமதுசடையிடைப்புனலுநயமுறக்கூட்டியாங்கமைத்தே
மிலகுறுசருவதீர்த்தமென்றொருபேரிட்டனமன்பதைப்பரப்பின்
குலமுழுதின்றுங்கன்னியென்றிருக்குங்கோமளக்கோற்றொடிக்கையாய்.

தண்ணியதீர்த்தசாரமாய்ப்பொலியுஞ்சருவதீர்த்தத்திற்புண்டரீகன்
புண்ணியம்பயப்பமூழ்கிமெய்யோடும்பொலிதரமுத்தியெய்தியதா
லெண்ணியபுண்டரீகபுட்கரணியென்றொருபெயர்வழங்கிடுவார்
மண்ணியமணிகட்டைதந்தபூண்சுமந்துவளரிளவனமுலைக்கொம்பே. (௫)
இருந்தசதானஞ்செய்திடச்செயலொன்றில்லவர்மற்றதிற்படியிற் [றித்
பொருந்தவத்தானஞ்செயலினெண்மடங்குப்புண்ணியப்பயன்பெறலன்
திருந்தநம்முலகும்பெற்றுவாழ்ந்திடுவார்செவ்வரிகருவரிபரந்து
* மருந்தமுமமுதுமளாவிநந்தம்மைமருட்டுவாள்விழிமடமயிலே. (௬)
புதையிருட்படலமுழுவதுந்தபவம்போருகமுகைமுறுக்குடையத்
ததைகதிர்பரப்பிக்குணக்கெழும்பரிதிதனித்துலாத்திலடையமர்தருங்காற்
சிதைவரும்பாவமுழுவதுஞ்சிதைக்கத் திரைப்பெருங்கங்கைமுற்றீர்த்தஞ்
சுதைபுரைமொழியாய்சருவதீர்த்தத்திற்றுதைந்தினிதாடுதல்செயுமால். ()
கங்கைமுற்றீர்த்தங்கலந்தினிதாடுங்காமருதுலாமதிமுழுதுஞ்
சங்கையொன்றின்றிச்சருவதீர்த்தத்திற்றகக்குடைபவர்தனுமதியிற்
செங்கையினடிக்குமெம்மருளொளித்தற்சேர்வர்தீவினையெலாஞ்செகுப்பா
ரங்கையாமலகமெனப்பரசதியுமடைவராலடைநிகர்வயிற்றாய். (௮)
அன்றியுங்கங்கைத்திருப்பெருநதியினறுபதிற்றியிரவருட
மொன்றியவிதியிற்படிந்தனர்பெறும்பேறொருமதிச்சருவதீர்த்தத்தி
னன்றியிற்படிவார்பெறுகுவரொன்னவில்வதென்வேங்கையொள்வீயிற்
றுன்றியசுணங்குபூத்தருந்தெழுந்ததுணையிளவனமுலைக்கொடியே. (௯)
யாவருமெந்தமுயற்சியினானுமிணையிலாச்சருவதீர்த்தத்தின்
மேவருஞ்சிறப்பிற்படிதரல்வேண்டுமேவுறமுடிதராதெனிற்
பாவரும்பரிமுன்னூர்ந்துசென்றேனும்பண்புறப்படிதரல்வேண்டுந்
தாவருமறவுமுற்றுமுற்றெனிற்சாற்றுவாங்கேண்மடமயிலே. (௧௦)
உறைவிடமந்நீர்வரவழைத்தேனுமுவந்தினிதாடுதல்வேண்டுங்
கறைபடவறவுமுற்றுமுற்றெனிற்கணகமாதிகள்பலவீ
மறையவராம்படிசெயல்வேண்டுமற்றதுமுற்றாதெனிற் [றீம்.
குறைவிலப்புனறோய்க்கடைந்தவர்க்கவம்பிடும்பைதீர்த்தருநிதிசெயல்வேண்
அன்னதுமுற்றாதெனிலப்புனறோய்ந்தவாடைமேனியிற்படுமா
றென்னருமதிர்பார்த்தியங்கிடல்வேண்டுமிதுவுமற்றெனிலதனீர்
பன்னருஞ்சிறப்பிற்றோய்ந்ததாவுளத்துப்பாவனைபண்ணுதல்வேண்டுஞ்
சொன்னதுமுற்றதெனிலினியவர்க்குச் சொல்வதொன்றில்லையாலணங்
[கே. (௧௨)
எதிரிலாச்சருவதீர்த்தநன்காடியிழைப்பலபுனைந்தகன்னிகையைச் [னைத
செறிபெருங்குடத்திற் செருத்தலம்பசுவைச் செம்மையினளிவிளைநிலத்
யறிபிறவற்றைநம்மடியுணருமந்தணர்முதலியர்க்களிப்பின்
மறிவிலின்மூவலகைப்பாதகங்களுமொழியவாண்முதலெய்தியின்புறுவார். ()

---

* மருந்தம் - நஞ்சு.

புண்டரீகப்பேர்புனைந்தொளிர்மிக்கபுண்ணியச்சருவதீர்த்தத்தின்
றண்டவாக்கரையிற்பிதிரர்தம்பொருட்டுத்தருப்பணமாதிசெய்திடுவா
ரெண்டவாவளற்ருழ்பவராவண்சுவர்க்கத்தேற்றுவித்தவர்களேபுல்ல
கண்டமுமமுதுங்கமழ்ந்தகோற்றேனுங்கைத்திடக்கரையுமின்மொழியாய்.
மேபகார்த்திகைமார்கழிமதியிரண்டும்விளங்குவானவர்பெருநடத்துப்
பாயநீர்குடைநததருப்பணமோமம்பகர்செபந்தியானமாதிகளை
யாயவத்தீர்த்தக்கோட்டினன்காற்றியன்புறநம்மையுநதொழுவார்
தூயபேறளவாதடைகுவர்குழையிற்ருெய்ந்துமீள்வரிக்கயல்விழியாய். ()

வேறு.

மின்னியவாயசதீர்த்தமேடமதியிடபமதிவிடாதமூழ்கிப்
பன்னியநம்மையுநினையுங்காரோணத்தலம்புகுநதுபரவுவார்க்குத்
துன்னியபல்பாதகமுங்கவைத்தகொழுநதழல்வீழ்ந்ததுய்போலாகு [பே.
நன்னியமங்கொடுபுரிபுண்ணியங்களெலாமொருநகெய்துநகுபூங்கொம

மதிக்குமிழைபுனைகன்னிமதிமுழுதுமுனிதீர்த்தமருவியாடித்
துதிகருமொருகாரோணததளிபுகுநதுநமையுமொளிர்தூயோருள்ளம்
பதிக்குமிருதாணிணையுநனைமலர்திகள்கொணடுபரவுவோர்கக
விதிக்குமளபபரிதாயபேறெலாமுறுங்கயலின்மிளிருங்கணுய. (கஎ)

நிலாவணிநம்மருள்போலுஞ்சருவதீர்த்தத்தறமேநிரமபாநிற்குந
துலாமதியிறபடிநதாடலன்றியும்வண்மகரமதிதூயதாகிக் [கொ
குலாவுகுடமதியிவற்றிலவிடாதுதோய்நதெமைப்பரவுகொள்கையார்
ளிலாபமெடுதுரைப்பவராரானமபதமெலாங்கலபபுறறிருப்பாரனறே. ()

எண்ணியமநதிரங்கள்பலவற்றினுமைநதெழுத்தெனவுமெலைக்குமேலாக்
கண்ணியமாநதிகள்பலவற்றினும்வெண்டிரைசுருட்டுங்கங்கைபோலு
மண்ணியமாமணிநிகர்பனமுனிவருளுந்தவத்துயர்நத வசிட்டன்போலும்
புண்ணியமேம்படுபலமானிடருளுமநதணாபோலும்பொலம்பூங்கொம்
[பே. (ககூ)

சிறையுடையபுட்குலத்துட்டார்க்கியனேபோலுநலஞ்செறியுமாலுட்
கறைதபுவான்பொலிகாமதேனுவேபோலுமரக் ‡ ககனத்துள்ளுங்
குறைவறவிட்பொலிககனம்போலும்வரைகளுட்கயிலைக்குவடுபோலு
மறைபலவறறினுங்காயத்திரிபோலும்புருட்ருக்குண்மாயன்போலும். ()

பழிதபுபஃறேவருளுநமைப்போலும்பேருலகிற்பரவாநின்ற
மொழிகெழுமுபற்பலமூர்த்திகளுள்ளுங்காரோணமூர்த்திபோலு
மொழிவில்பலதலங்களுளுநதிப்பியமாநாலகக்காரோணம்போலு
மழிவில்பலபுனலுள்ளுஞ்சருவதீர்த்தஞ்சிறந்ததாயுங்காலே. (உக)

மதிமலியுங்காரோணத்தலம்வசித்தாரொத்தலத்தும்வசித்தோராவார்
கதிமலியுங்காரோணலிங்கங்கண்டேத்தினவர்கடல்சூழ்வைப்பிற்
றிதிமலியுமளவிலிங்கமுங்கண்டேத்தினராவார்செறியெண்ணில்லா
நதிமலியுஞ்சருவதீர்த்தம்படிநதோரெப்புனலுநனைந்தோராவார். (உஉ)

---

‡ ககனம—காடு.

தேவதீர்த்தங்காகதீர்த்தமுயர்முனிதீர்த்தஞ்செறியாநின்ற
பாவநாசம்ப்ரியுமுயர்சறுவதீர்த்தமிவைபண்புநாளு
மேவவுயர்படித்துறையாதிகள்கருங்கல்லிட்டிகைகள்விரவக்கொண்டு
பூவமையப்பணிபுரிவோர்பெறும்பேறுமலரோற்கும்புகலொணுதால், ()

உரைசெயுநாற்புனலகத்துந்தொள்ளிவிழாதெடுத்தெறிவோருவக்குமாறு
கரையகாந்தனம்புரிவோர்படித்துறையில் † ஆரான்முதலாங்காிசுதீர்ப்
புரைதவிரவிளக்கிடுவோர்பல்பெரும்பாதகமுமறப்போக்கிநாளும் [போர்
வரைவிலசுவர்க்காதிபுவனங்களெலாமனுபவித்துவாழ்வர்மாதோ. (உ௪)

இட்டிகையாதிகள்கொண்டுபணிபலசெய்யாவிடினுமின்பமேவ
வொட்டியசந்தனமாதியாவுமுளுற்றுவிடினுமுரைத்தநீரிற், கிட்டியவன்கு
லையிலனுசிதஞ்செய்யாரொனினுயாச்சிகெழுமப்பூண்பார், கட்டியகச்சினை
க்கிழித்துப்புடைதநெழுநதுநிறங்கவர்கொங்கைப்பூங்கொம்பே. (உ௫)

இந்தவளம்படைத்துயர்ந்தசறுவதீர்த்தத்திடைநன்கியையமூழ்கிச்
சநதமிகுதமிழ்க்கும்பமுனிவன்முதற்பல்லோர்நந்தமைப்பூசித்தே
யந்தமிலபலசிறபபுற்றாருட்காயாரோகணமேயளவிலாற்றற்
பந்தமறுத்துயர்முநதிபாலிக்குமெவ்வுயிர்க்கும்பவளவாயாய். (உ௬)

என்றுறுகல்கிழித்தெழுந்தவிழிப்பெருமானியம்புதலுமெண்ணிலாம
லொன்றுமகிழ்ச்சியிறறளைநகாள்சிறிதம்வருந்தாதெல்லாவுலகுமீன்று
ணன்றுபரனுமைக்குரைததசிவ்வளவேயென்றுரைத்தானந்திப்புத்தேள்
வென்றுமிளிர்சறுவதீர்தசம்பகாநதர்மகத்தீசம்விளம்புவாமால். (உ௭)

சறுவதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௧௪-இ-திருவிருத்தம்-௬உ௧.

## அகத்தீசப்படலம்.

விரைத்தகடுக்கைச்சடைமுடியாரவிமலவுமையாள்வினவவெடுத்
துரைததபடியேதலந்தீர்த்தப்பெருமையுரைத்தாயுறமகிழ்ந்தேன்
குரைத்தபுனல்சூழ்த்தலமான்மியமறறுளவுங்கூறுகெனும்
புரைத்தசனற்குமாரனுக்குப்புகல்வானந்திபுததேளே, (௧)

விண்ணம்பொலியுமிமயவரைவேற்கணுமையாள்கடிமணத்திற்
றண்ணம்பொலியுநடாநதிருச்கைச்சாமிதிருவாய்மொழிதலைக்கொண்
டெண்ணம்பொலியுந்தமிழ்முனிவனவனிசமன்செய்திடலெணணி
வண்ணம்பொலியும்பொதியவரைவதிவான்வதிமினியங்கிடுவான, (உ)

சீரார்சுவைச்செந்தமிழ்மணக்குஞ்செவ்வாய்முனிவன்வருபோழ்தே
காரார்கடல்சூழ்காரோணக்கரையில்பெருமானமியமனைத்து
மோரார்பலமாணுக்கருக்குமியம்பிவருவான்கண்டுதொழு
காரார்விருப்பமெழுவந்துகுருக்கேத்திரத்தைநண்ணினுன். (௩)

---

† ஆரால்-சேதகை.

ஆயகாலேவிந்தவரையடைந்துமகதியாழ்முனிவன்
பாயமேருவினைமதித்தல்பண்ணுதிகழ்ந்ததாதென்று
நேயமிகுமென்னுரையினையுரைத்ததெவ்வரும்வெருப்பவெனத்
தீயகலகஞ்செய்தகன்றான்சிலம்புசினந்ததுளங்கொதித்ததே. (௪)

அந்தவமையந்தனக்கெதிரோயடையும்பரிதிமுகநோக்கி
விந்தமெனையேசூழ்ந்திடுதிமேருவரையைச்சூழ்குவையே
னந்தநினதுபோக்கொழியுநானேயெழுந்துதடுத்திடுவேன்
முந்தவெனவுந்திமிராரிமுறுவல்புரிந்தீதுரைத்திடுவான். (௫)

திசைதேர்வதலுககறிகுறியாய்த்தேவர்பலர்க்குமாலயமாய்
வசைதீர்பொன்னாய்மாதேவனவனுக்கொள்ளுஞ்சராசனமா
யசையாநிலையிறபொலிதருவெறபதைச்சூழாதுநினைச்சூழ
நசையாமரியாலடையயனைநரியாலடையபபெறுமாயின. (௬)

பொங்குசுவையாரமுதுண்பார்புறகையுணவும்பொருந்துவரோ
தங்குபெரும்பாற்கடலாடுந்த[illegible]ரசிறுமானகுளபயடிநீ
மூங்குதிறமுமுணர்வர்கொலே[illegible]ழுமால்வரையினபெருமையெறு
இங்குமொழிந்தாயினிமொழியேலெனறனசெறிகச்சளப்பவகவன. (௭)

மேருவரையிககிகழ்ந்ததெனவீணைமுனிவன்சொலக்கேட்டோ
மாருமதுபொய்யெனநோயளுசாதிகழ்ந்தான்மாததாண்டன்
சேருநடைவைதகைந்தின்னேதிகைககுமாறுபுரிவலெனப்
பாரும்விசும்புநடுநெங்கப்பறம்பாமவிந்தமுயர்ந்ததால. (௮)

சிறிபகல்வியாளர்மனச்செருக்குபபோலுமறனியற்றார்
முறியவெழுதீவினைபோலுமொய்த்ததிருவம்பலபடைதது
மறியவுலோபமகலாதார்பழியேபோலுமவிரோகோள்கண்
மறியவெழுநதுபுடையூர்ந்துவாளுறடைததொருவிந்தம். (௯)

விந்தமெழுந்திவ்வாறுவானடைவதனைப்பவெயயோன்முறு
சந்தமலியுங்கோளியக்கநதவிர்நததனுலுலகநெறி
நநதவுணர்நதுவானாடர்நளினமலர்த்துவாளோடு
மூந்தவுயருமொருகுருக்கேத்திநத்தினடைந்தார்முனிவனைதி. (௧0)

அடைநதபல்ருமுனிவனடியடுத்துவணங்கமுகமனுரைத்
தடைநதமனததினெல்லீருமொருங்கிங்கடைந்தகருமமெவன்
மிடைந்ததெவனுக்குக்கென்றான்மீட்டும்பணிந்துவானாடா
தடைந்தபொறியாயுலககெறிதவறச்சார்ந்ததொனறுளதால். (௧௧)

மேருவரையினோடிகலிவிந்தமெழுந்துகோளனைத்துஞ்
சாருநடைவைதனைத்ததுசாறறவடைந்தோமென்றிறுத்தா
ரோருந்தமிழ்மாமுனிவரனெய்யொழிந்தகாலேச்சட்டொவருந்
தேரும்படிமேலெழுதிறமேசெத்தென்றமுறுவலித்தான். (௧௨)

எல்லாவமரரொடும்விந்தமேவுமிடத்தையணுகுதலும்
வல்லாவொருவன்வல்லுநன்முன்குறுகும்விதம்போல்வளர்குறுகிய
பொல்லாநடுக்கத்தொடுநிற்பப்புகலுங்காயாரோகணத்து
நல்லாவுலகைக்கும்பெருமானைநாடியுளத்திற்குறிக்கொண்டு. (௧௩)

ஆயபொதியாசலத்தினைநாமடைந்துபுடவிசமன்செய்து
மேயகயிலையுறவிவ்வழிமீளுமளவும்யாதலத்து
நேயமருவவிருத்தியெனநிகரிலொருகைவரைத்தலைத்
தேயவிருத்தியுலகநெறியெல்லாநடக்கும்படிசெய்தான். (௧௪)

ஒழியாவேலைகனிமருவியுறுவாளுடர்தோத்திரங்கண்
மொழியாமுனிவன்விடைகொண்டுமுந்தித்தத்தமிடம்புகுந்தார்
பழியாப்பலமாணுக்கரொடும்பரவுமெங்கடமிழ்முனிவன்
வழியாதரித்துநடந்துபுகழ்வளர்காரோணத்தலமடைந்தான். (௧௫)

அந்தத்தலத்துவளமுழுதுமமையநோக்கிநனிமகிழ்ந்து
முந்தப்பிரதக்கணஞ்செய்துதேவதீர்த்தமுனிதீர்த்தஞ்
சந்தத்துயர்வாயசதீர்த்தஞ்சருவதீர்த்[illegible]ற்றன்பு
நந்தப்படிந்துநீறணிந்துநவில்கண்மணிமாலிகைபூண்டு. (௧௬)

ஆராவன்பினருள்கொழிக்குமமுதகடேசம்போய்ப்பரவிப்
பாராதரிக்குமமரரோநதிரோசம்புகுந்துபணிந்தெழுந்து
தேராவுணாவோர்க்கினிக்குமுனிதிருக்காரோணஞ்சென்றிறைஞ்சிப்
பேராவாய்மைத்தமிழ்முனிவன்பெருங்காரோணத்தளிபுகுந்தான். (௧௭)

உள்ளங்குளிரக்கைதலைமேலுற்றுக்குவியக்கண்ணருவி
வெள்ளம்பொழியப்பரவசமாய்மேனிமுழுதுமயிர்சிலிர்ப்பக்
கள்ளங்கருதாசெறிகிருமுற்கசிந்துபணிந்துபணிந்தெழுந்து
வள்ளம்பொருமாமுலைபாகப்பெருமான்முன்னமகிழ்ந்தடைந்தான், (௧௮)

தருக்காநின்றதிறனொழித்துச்சார்ந்தாருளத்தையழன்மெழுகி
னுருக்காநின்றபெருங்கருணையொளியையீட்டுமானந்தம்
பெருக்காவினித்துத்தெவிட்டெடுப்பப்பிறங்காநின்றகோற்றேனைத்
திருக்காரோணத்தாரமுதைத்திகழ்கண்களிப்பக்கண்டனனே. (௧௯)

கண்டானயனுமரியுமினுங்காணாப்பெரியோனருட்குறியைக்
கொண்டானளவாப்பேருவகைகுடந்தம்பட்டுநேர்நின்று
விண்டான்வேறொன்றெண்ணுவதுமேலுமேலுமமுதள்ளி
யுண்டான்பொருவத்துதிமொழியலுற்றான்மொழியக்கற்றானே. (௨௦)

வேறு.

வெள்ளலைநீர்மண்முழுதும்விரியிலத்துட்கவிழாது
புள்ளலைமாமுடியடங்கப்பொருத்தியவல்லவனை
கள்ளலைதேமலர்க்கொன்றையானைக்காரோண
வள்ளலையன்புறவெண்ணுமனமென்னமனமே
ரமதேவன்றனையெண்ணுமனமென்னமனமே. (௨௧)

பூவானைப்பாகுசெய்துபுரங்கொலவேவியமா
லேவானையெண்ணுவாரிதயத்தினினாறுக்
தாவானைச்சிவராசதானிவளர்திரும
மரவானைநயநதேத்தாவாயென்னவாயே
வானவர்தேவனையேதத்தாவாயெனனவாயே. (உஉ)

பகையானையதள்போர்த்தபண்ணவனைப்புரங்கொ
ணகையானைத்திருவளையிறுடோடுமுமைக்குந்
திகையானைக்கருநடங்கட்செல்வியொருபாகத்
தகையானைவணங்காததலையென்னதலையே
சங்கரனைவணங்காததலையென்னதலையே. (உந)

நடிப்பவனம்பலத்திவர்நதுலங்கருதாவொருமான்
பிடிப்பவன்யாவருமகிழப்பிறையினொடுகங்கை
முடிபபவன்கேத்திராசமுதல்வனுலகனைத்து
நொடிப்பவன்வெண்ணீறணியாநுதலென்னநுதலே
நுண்ணியன்வெண்ணீறணியாநுதலென்னநுதலே. (உச)

அண்டத்தானவற்றினுக்குமப்பாலானவனிநத
முண்டத்தான்றிருநெடுமானமுதுகெலும்பிறகொண்ட
தண்டத்தான்வானோடர்தங்களுயிர்காதத
கண்டத்தானுருநோக்காக்கண்ணென்னகண்ணே
காரோணனுருநோககாக்கணணெனனகண்ணே. (உரு)

தவமருவுயிர்க்கருளுந்தத்துவனையுருவ
நவமுருவைநதொழிலுநடத்திவருவானை
யவமிலாதெனறுமினிராதிபுராணதனச்
சிவபிரான்சீர்கேளாச்செவியென்னசெவியே
தேவர்பிரான்சீர்கேளாச்செவியென்னசெவியே. (உசு)

திங்கள்வார்சடையபெருநதேவேச்வுமையாள்
பங்களாவுறநயந்தபண்ணவனெண்ணில்லா
வங்கள்வார்மலர்த்தடஞ்சூழாதிபுராணத்து
நங்களுயகவெனறுநாவென்னநாவே
நமச்சிவாயாவென்றுநாவென்னநாவே. (உஎ)

பிறைக்கண்டமுடிக்கணிந்தபேராளன்கொடிய
துறைக்கண்டகளைவதைத்துத்தன்றுணைத்தாடொழுவான்
மறைக்கண்டவாவுநாவாழ்விக்குங்கருணைக்
கறைக்கண்டன்பணிபுரியாக்கையென்னகையே
காரோணன்பணிபுரியாக்கையென்னகையே. (உஅ)

நன்னல்குறித்திரவுபகலுற்கர்ணங்களுமொத்
தென்னல்பிறிதிலையாகமுயலுநர்க்கேயின்பம்
பன்னல்பிறாகிலையாகப்பரவருள்செய்கருணை
யண்ணலசினகர்ஞ்சூழாவடியென்னவடியே
யாதிபுராணனைச்சூழாவடியென்னவடியே. (உக)

இருநான்குமுனனான்குமீரெட்டுங்கடந்தா
னுருநான்குமருநானகும்பயமொனறுமமைந்தான்
திருநானகுபதமுமெனுநதெயவரீராதி
யொருநானகுநதோயாதவுடமபெனனவுடம்பே
யொளிகிளாகணமணிபூணுவுடமபெனனவுடம்பே. (௩0)

அற்றமறுதெம்மைவழியடிமைகொடுபுரபபாள
கற்றவர்களபுகழ்நதேத்தவுங்கருநதடஙகணமமை
யுறறமறையொருநானகுமுவநதுபுகழநதேத்தநப
பெற்றபதஙகருதாதாபிறபபெனனபிறப்பே
பிறக்குமவள்சீர்பேசாபிறப்பென்னபிறப்பே. (௩க)

வேறு.

எனறுதுதிததேத்தி, நனறுவலஞ்சூழநது
அன்றுமகிழ்பூததான, குனறுபிலமவீழ்ததான். (௩உ)

அம்மைதிருமுனனர்ச், செமமையுறச்சாாநது
வெமமைகொடுதுதிபபான, முமமைததமிழகுரவன், (௩௩)

வேறு.

ஆயகருநதடங்கணமமைதிருபபாதம
பாயபிறவிபபரவைகடபபதறகு
நேயமலியுநெடுநகலமேபோலும
ஆன்றகருநதடஙகணமமைதிருபபாத
மேனறபிறவியிருங்காடுமரயபபதறகுக்
கானறசுடாவைககனிசசியேபோலும
அனபாாகருநதடஙகணமமைதிருபபாதம்
வனபாாபிறவிததுணஙகறனமாய்த்திடுதற்
கினபாருதயவிரவியேபோலும. (௩௪)

அளிக்குங்கருநதடங்கணம்மைதிருநாமம்
விளிக்குஙகருமலமாம்வீடாதநோயக்குத
தெளிக்குமவளாயிறசெறியதகமபோலும
அரியகருநதடஙகணமமைதிருநாமங்

கரியமலமாங்கடியபுறம்பிற்குச்
சரியவடர்க்குஞ்சதகோடிபோலும்
ஆண்டகருந்தடங்கணம்மைதிருநாமம்
பூண்டகருமலமாம்பொல்லரவுரவிற்கு
நீண்டசிறைபினிலாங்கலுழன்போலும். (௯௫)

வேறு.

இம்மைப்பயன்முழுதுமீயுங்கருந்தடங்கணம்மைதாளே
யம்மைப்பயனுமொருங்களிக்குங்காரோணத்தம்மைதாளே
செம்மைப்பதமுத்திநல்குந்திருநாகையம்மைதாளே
மும்மைப்பொருளுணர்ச்சிமுறநின்புநல்குநவிலம்மைதாளே. (௯௬)

வேறு.

என்றுநெஞ்சநெக்குருகிடக்கண்கணீரிறைத்திடத்துதிசெய்து
வென்றுமேமபடுசெநதமிழ்முனிவரனவிடைகொடுவெளிவந்து
நன்றுசால்கருந்தடங்கண்ணிமேவியநற்றளிவடமேற்கி
லொன்றுமாலயஞ்சூழ்தருபெருமதிற்குத்தரதிசைக்கண்ணே. (௯௭)

வேறு.

தேடருஞ்சறுவதீர்த்தத்தீசானதிசைவயிற்சிறந்ததேயாகி
வீடருஞ்சிறப்பின்மேயதுநாளும்விளககஞ்சார்நித்தியகங்கை
நாடருநதல்ததோடமைநதவததீர்த்தநண்ணுபுகுறுமுனிபடிந்து
கோடருங்காயாரோகணவிலிங்கங்குலவுகாலந்தொறுங்கண்டே, (௯௮)

அதுதனைப்பூசிததருந்தவம்புரிவானதற்குதவகன்றிசையணித்தீற்
கதுமெனவடைந்துதன்பெயர்விளங்ககாட்டுமோரிலிஙகந்தாபித்து
மதுமலர்கொண்டுபூசிததமாண்புசாலகததியமுனிவன்
சதுமுகனுமும்புரிவதறகரியதவஞ்செய்வானபின்னுமீதியற்றும். (௯௯)

அருமையிற்றன்பேர்புனைந்துதாணிறுவுமருளிலிங்கததினையாட்ட
வொருமையிற்பலருங்குடைநதினிதுய்யவுன்னியாவயினொருதீர்த்தம்
பெருமையிற்றொட்டுததன்சடப்புனலும்பெய்துறப்படிநதெடுத்தாட்டித்
திருமயிற்சாயலபாகனைப்பூசைசெய்யசருந்தவம்புரிகாலே. (௱0)

வேறு.

நாடுதிறல்வாளவுணர்நமுசிமுதலானோர்
கோடுசிலைவாள்பலகைகூர்சமுதுகையா
நீடிபுவனங்களினொருப்பெழவிழிப்பார்
கூடுபலசேனையொடுகோளமர்குறித்தார். (௱௧)

பாயமுகிலும்பரவையுங்குலைகுலைந்து
சாயரணியார்த்தனர்தடஞ்சிலைவளைத்தார்
மாயமிகுவெஞ்சொலெனவாசவனளிக்கு
நேயமலிமாநகாவளைநதடணினைநதார். (௱௨)

காவலரையோட்டியுயர்கற்பகமுறித்தார்
பாவலர்சேர்தேனுவையும்பற்றினர்பிணித்தார்
மாவலர்கதுப்பின்மடமாதரையலைத்தா
ரேவலரிவ்வாறலையியற்றியடர்காலை. (௪௩)

வானவரதிர்ந்துருமுவட்கவளியார்த்தார்
தானவரடங்கவலிசாய்ந்துமுனைதேய்ந்து
போனவர்களாகவடுபோர்புரிதுமென்று
வானவர்களாயமர்விளைத்தனரடர்ந்தே. (௪௪)

கோடுசிலைவாங்கிநெடுநாண்கொளுவிநேரே
யாடுகணைபூட்டினரளப்பிலவிடுத்தார்
காடுவடிவாளுருவிவெட்டினர்நடுங்கச்
சேடுபடுதண்டுகொடுமோதினர்சினந்தே. (௪௫)

வெட்டினருரப்பினர்வெடித்தனர்பிடித்துக்
கட்டினரிறுக்கினர்சுதித்தனர்வயத்தோள்
கொட்டினர்மிதித்தனர்குதித்தனர்கொல்வாமென்
றொட்டினர்செருக்கினருருக்கினரிலேகர். (௪௬)

வாளொடுமிழந்தனர்பிடித்தகைவயப்பொற்
றேரொடுமிழந்தனர்துரோணமிகன்மேய
கோளொடுமிழந்தனர்குலாவும்வலிமான
நாளொடுமிழந்தனர்கணைக்குதிதிமைந்தர். (௪௭)

அற்றனமுடித்தலைகளாடினகவந்த
மூற்றனவிரத்தமிகவோடினபராந்து
செற்றனபிணக்குவைசிதைந்தனபெரும்போ
ரிற்றனர்தயித்தியரிகற்றிறமடங்கி. (௪௮)

கரிபலசிதைந்தனகடுத்துவருவேகப்
பரிபலசிதைந்தனபரப்பிநெடுபொற்றேர்க்
கிரிபலசிதைந்தனகிடைத்தவுணரொன்று
மரிபலசிதைந்தனபறந்தலையிளம்மா. (௪௯)

வானவரெதிர்ந்துவடிவாளிகடொடுத்துத்
தானவருடைந்திடவியற்றுசமர்கண்டு
கானவழலென்னவெரிகண்ணினரெதிர்ந்தா
ரானதிறல்காண்டுமெனவாங்கவுணர்தலைவர். (௫௦)

வேறு.

சிலைவாங்குபுகாணேற்றினர்திதிமைந்தருட்டலைவ
ருலைவாங்கியசுடுதீக்கணையென்றல்லனவுய்த்தா
ரலைவாங்கியகடலேழுமுள்ளச்சுற்றிடவார்த்தார்
நிலைவாங்கினரிமையோரெனநினைவுற்றனர்பலரும். (௫௧)

உலையிற்பொலிகனலிற்சினமுற்றூர்விடுபகழி
தலையிற்சிலமுகத்திற்சிலதாளிற்சிலதிண்டோண்
மலையிற்சிலதுடையிற்சிலமார்பிற்சிலவாக
நிலையிற்றளர்தரத்தைத்திடவெடிதோய்ந்தனரமரர். (௫௨)

சாய்ந்தார்சிலர்மெலிந்தார்சிலர்தளர்ந்தார்சிலர்வெருவி
யோய்ந்தார்சிலர்களைத்தார்சிலருளைத்தார்சிலரொளித்தே
மாய்ந்தார்சிலர்பெயர்ந்தார்சிலர்மயர்ந்தார்சிலர்கிடக்கை
யேய்ந்தார்சிலர்தவித்தார்சிலரினையாவலியிமையார். (௫௩)

தேரிற்புகும்பரியிற்புகுஞ்செங்கட்களிற்றென்னுங்
காரிற்புகும்பாரப்பாரிருகண்ணிறப்புக்குங்கடலுஞ்சூழ்
பாரிற்புகும்பிலத்திற்புகும்பறம்பிற்புகும்பலவோ
ரூரிற்புகுங்கொடுந்தானவருய்யக்குறுகடும்பகழி. (௫௪)

இவ்வாறமரர்மெலிபொழுதிமையோர்படையுடைய
வெவ்வாயவடவையிற்சீறுபுவிழியாயிரமுடையான்
றெவ்வானவர்முடிதேயத்திடுந்திறனமாக்களித்தேறி
யொவ்வாவொருசதகோடிகொண்டுருமேறெனவார்த்தான். (௫௫)

கொடுங்கார்முகம்புருவத்தொடுகுனித்தானமுழக்கெழுப்பி
யடுங்காருமிழுருமேறெனவடல்வாளிகள்சொரிந்தான
கடுங்காரவுணர்கண்மார்பகங்கலக்கிப்புறப்படுவ
படுங்காரினுமனையார்பொழிபகழிக்குலநூறி. (௫௬)

கோலாற்சிலருயிர்மாய்த்தனன்கூற்றத்தினுங்கொடிய
வேலாற்சிலருயிர்மாய்த்தனன்மிளிர்வாண்முதற்படையின்
பாலாற்சிலருயிர்மாய்த்தனனயிராவதப்பகடின
காலாற்சிலருயிர்மாய்த்தனன்கணணாயிரமுடையான். (௫௭)

பழுதாச்செயல்புரிந்தோமெனப்பதைத்தார்சிலர்கையாற்
றொழுதார்சிலர்வீழ்ந்தார்சிலர்சோர்ந்தார்சிலர்துயர்மிக்
கழுதார்சிலரொழிந்தார்சிலரழிந்தார்சிலரார்த்துக
கழுதார்பறந்தலைநீத்துயிர்காத்தார்சிலரவுணர். (௫௮)

விறன்மிக்கவரிவ்வாறுறவெருவிட்டமைகாணூ
முறமிக்கநமுசியெனப்பெயர்வாகைத்திறலவுணன்
றிறன்மிக்கவெங்கணைமாமழைசேரப்பொழிந்தார்த்தா
னறன்மிக்கவிந்திரனமாற்றினனுறுபல்கணைதூவி. (௫௯)

காற்றினபடைகளின்படைகளலஞ்சுறுகொடிய
கூற்றினபடைமுதலாயினதொடுத்தான்கொலையவுண
னேற்றும்படையெல்லாமொருங்கிறத்தக்கணவாகி
மாற்றும்படைதொடுத்தான்பெருவயிரப்படையுடையான். (௬௦)

அடுவேலெடுத்தெறிந்தார்த்தனனவுணன்சராஞ்சக்
கொடுவேலத்துவரல்காணுபுகுலிசத்தினைவிட்டான்
படுவேலுடனவ்வுருவியும்பருகிப்பெருங்குலிசம்
வடுவேல்விழியயிராணிமணாளன்கையுற்றன்றே. (சுக)

வேறு.

காய்தொழிலமுசிமாயத்தயித்தியர்கலங்கியோடி
யாய்வலிமிக்ககாலப்பிரபனுக்கறியக்கூறப்
பாய்கனையனங்காலப்படையொடுமவனெழுந்தே
வாய்வசிவயிரவொள்வேன்மன்னனைவளைத்தானன்றே. (சுஉ)

ஒருசிலைகுனியக்கோட்டியுடற்றுபல்கணைகள்பூட்டிப்
பொருகடைக்காலமாரிபொழிவதிற்பொழிந்தானாக
வெருவரவிடுத்தவாளிக்குலமெலாம்வீயமாற்றி
மருவுடன்முழுதுந்தைப்பவாட்டமுற்றிளைத்தானன்றே. (சுங)

விழிமலர்மேனிமுற்றுமெய்யெனவெய்யவாளி
கழிதரத்தைப்பவாற்றுங்கருமமொன்றில்லாவேந்தன்
பொழிதிரைக்கடலினுப்பட்புயல்பலகமலம்பூத்துப்
பழிதபக்கிடந்தாலென்னக்கண்வளர்பவனையுள்வான். (சுச)

பெருந்திறல்படைத்தகாலப்பிரபனுலினைத்தேனுண்ட
மருந்தினுலிருந்தேனின்னேவந்தமராடிவென்று
திருந்தவானவருக்குற்றசெல்லலைக்களையவேண்டுங்
கருந்துழாய்த்தொடையாயென்றுகருத்துறவெண்ணினானே. (சுரு)

எண்ணியபொழுதேமாயோனெழுந்துதார்க்கியன்மேலேறி
யண்ணியபடைகளோடுமமர்க்களங்குறுகியார்த்துக்
கண்ணியதிகிரியேவிக்கருதலனுயிரைமாய்த்து
நண்ணியபடையுங்கொன்றுவானவர்நடுக்கந்தீர்த்தான். (சுசு)

எஞ்சியவவுணரோடியிற்றமையுரைப்பக்கூற்று
மஞ்சியகாலவேகனடுபடையொடுமெழுந்து
துஞ்சியவவுணர்க்கண்டுதுடிதுடித்தலரின்மேய
வஞ்சியமார்பினனேர்வந்துபோர்புரிவாயென்றான். (சுஎ)

அடுசமர்புரியெனுமுன்னமழன்றுகைத்திகிரிவிட்டான்
கொடுவலிக்காலவேகன்குறுநகைவாயிற்றோற்றி
நெடுவலித்திகிரிதன்னைநில்லெனநிகழ்த்தலோடும்
படுமணுத்தகைக்கப்பட்டபாம்பெனலாயிற்றன்றே. (சுஅ)

நில்லெனவுரைத்தலோடுந்தகையுண்டுநேமிநின்ற
தொல்லெனவினிநாஞ்செய்வதொன்றுமின்றென்னவெண்ணி
யில்லெனவிருண்டகண்டத்தண்ணலைத்தியானஞ்செய்தான்
கல்லெனப்பொலிதிண்டோளிற்கருந்துழாய்கமழப்பூண்டோன். (சுகூ)

காலனைவென்றாற்போலக்காலவேகனையும்வென்று
சீலவிண்ணவரைக்காக்கத்திருவுளஞ்செய்வேண்டு
மாலநன்னிழலின்மேயவண்ணலேகாமற்காய்ந்த
பாலநேத்திரத்தாயென்றுபரவுபுதியானஞ்செய்தான். (எ0)

மாயவனிவ்வாறெண்ணவனிதையோர்பாகத்தெம்மா
னாயவக்களத்துத்தோன்றியங்கையிற்சூலமேவித்
தீயவெங்காலவேகற்செகுத்தவன்படையுமாய்த்துத்
தூயவெண்கயிலையுற்றான்சுரரெலாந்தொழுதுவாழ்த்த. (எக)

இறந்தவரொழியமற்றுமெஞ்சியவவுணரெல்லாம்
புறந்தலையகன்றுசென்றுபரவைபுக்கொளித்துக்கொண்டு
நிறந்தகவிருளிற்றோன்றிநிரம்பவூறிழைத்துமேன்மேன்
மறந்தலையெடுப்பச்செய்தார்வலாரியாதியர்துன்புற்றார். (எஉ)

என்செய்வாமிதற்கென்றெண்ணியெழுகடற்புனலுமுண்ண
மின்செய்வார்சடிலத்தண்ணன்மெய்யருணிரம்பப்பெற்ற
தென்செய்மாதவத்தனாயசெந்தமிழ்முனியேவல்லோன்
முன்செய்வானிஃதென்றெண்ணியாவருமுடிவுசெய்தார். (எங)

அந்தமார்முனிவனைக்காரோணத்தமலன்பூசை
சந்தமாமலர்கொண்டாற்றுந்தவம்புரிநதமாவதோர்ந்து
முந்தவானவர்யாருமொய்த்துவந்தவனைத்தாழ்ந்து
நந்தவாதரவுபொங்கநயந்திதுநவிலலுற்றார். (எச)

அருட்பெருங்கடலேபொல்லாவவுணர்வாரிதியொளித்துக்
கருட்பொழுதெழுவாரூறுகண்ணறப்புரியாநிற்பார்
மருட்படுமவரைக்கொல்லும்வகையுணர்ந்திலமாலென்று
தெருட்பெருவானோர்கூறச்செந்தமிழ்முனிவன்சொலலும். (எரு)

பகன்மறைந்திருளிற்றோன்றிப்பயிலநீக்கூறுசெய்யு
மிகல்வலியவுணர்தோற்றமெய்திடப்புரிவாமின்னுந
தகலுறயாதுவேண்டுஞ்சாற்றுமினென்றானன்னோ
ரகல்களிப்பினராயீதேபோதுமென்றஞ்சலித்தார். (எசு)

வந்தவானவரோடும்வயங்குகாரோணமேய
சந்தமார்முலையோர்பாகத்தம்பிரான்றாள்கள்போற்றி
நந்தவாதரவுபொங்கநல்லருணிரம்பப்பெற்றுப்
பந்தவாளவுணர்மேயபடுகடற்கரையுற்றானே. (எஎ)

மேயகும்பசனைக்கண்டுவெருவரலடைந்துகார்கோ
ளாயசெந்துகிர்முத்தாதியடியுறையாகவைத்துப்
பாய்பல்கரமுநீட்டிப்பணிதருதன்மைமானுந்
ஆயபன்மணிகளோடுந்திரையதந்தோயுந்தோற்றம். (எஅ)

கூறுமுனிவரனீர்முற்றுங்குடிப்பதற்கென்றுநேர்ந்து
கறுவுடையவுணர்வாரிகைவிட்டுப்போவதொக்கு
முறுபெருவயிறுவீங்கவுவர்ப்புனல்வாய்வைத்துண்டு
மறுவறுவிசும்பினேகுமழைக்குலமுழுதமம்மா. (எக)

மறிதிரைக்கடலினுவாய்வல்விரைந்தோடுங்காட்சி
குறியவிம்முனிநீர்முற்றுங்குடித்திடுமதற்குமுன்னே
செறிபலசரக்கினோடுஞ்சிதைதராதொதுங்குவாமென்
றறிதரக்கரைச்சார்பெண்ணியவாய்விரைந்தோடன்மாலும். (அ0)

அடர்கின்றபவளக்காட்டோடெழுமலையாணவத்தின்
படர்வென்றமுனிவன்பாதபதுமத்தின்வீழுநதோற்றங்
கடலொன்றுவெள்ளமுற்றுங்கணத்திலுண்டமையும்விஞ்சை
மடவின்றுகற்பாவெண்ணிவடவைவந்திறைஞ்சல்போலும். (அக)

முன்னைநாண்மாலைப்போதின்முழுவலையனைத்தும்பூத்த
புன்னைமேல்விரித்துக்காயப்போகட்டநுளையரெல்லாம்
பின்னைநாள்வெயிலுந்தோயபெறன்மதித்தெடுத்திடாமை
யென்னைகாயிதுகைக்கோடலென்றிகழ்ந்திருத்தன்மாலும். (அஉ)

உறுதுயரொருங்குபின்னருறுவதுசற்றுந்தேருச்
சிறுமதியாளர்துள்ளுஞ்செயலெனச்சிறுமீனெல்லாம்
வெறுவியதுள்ளாநின்றமேல்வரலனைத்துந்தேறப்
பெறுபெருமதியார்போலவியங்குவபெருமீனெல்லாம். (அங)

கொடிமுதற்பறவையெல்லாங்கொழுங்கயலாதிவௌவிச்
செடிபடுகுடம்பைதோறும்விரைதரச்செல்லுங்காட்சி
வடிவறியாதவாரிவறத்தலோர்ந்தேன்றமட்டுங்
குடிகொளுமிடததுணுக்கள்கூட்டிவைத்திடுதல்போலும். (அச)

இன்னணநிகழுங்காலையெங்கள்காரோணநாதர்
பொன்னடியிதயத்தெண்ணிப்புண்ணியமுனிகையேற்று
ளுன்னருங்கடனீர்முற்றுமோருழுந்தளவைத்தாகி
யன்னவன்கரத்துநாப்பணமர்ந்ததியாவரும்வியப்ப. (அரு)

முண்டகமலருண்மேயமுத்தெனவகங்கைமேய
வண்டகைத்திவலையொன்றைவாயினுட்பெய்தான்பெய்யக்
கண்டவரதிசயித்தார்காயாரோகணப்பிரானூர்
தண்டவாவருள்பெற்றூர்க்குஞ்சாற்றிதோர்பாரமாமோ. (அசு)

பரவைநீர்வறத்தலோடும்பாதகவுணரெல்லாம
விரவுபேரிருடீர்காலைவெளிப்படுகள்வர்போல
அரவிலராய்வெளிப்பட்டோடுதற்குள்ளங்கொண்டார்
நரவிலாவமரர்கோமான்கைக்குலிசத்தாற்கொன்றான். (அஎ)

புன்வறங்கூர்கடற்குப்புதுப்புனல்விடுப்பான்போல
மனநெகாவவுணர்செந்நீர்பாய்த்தினான்வானவேந்த
னகவானாடர்யாருமருந்தமிழ்முனியைப்போற்றி
முனைகர்செய்தீங்குதீர்ந்ததோமுனைவநின்னருளாலென்றார். (௮௮)

தானவரொன்னுந்தாவநதவாதுறத்தித்தலாலே
வானவரொன்னும்பாதவம்புலர்நதிடுதலெண்ணி
யீனமில்கருணையாயபெருமழையிரங்கிப்பெய்தக்
கானகந்தழையச்செய்தாய்கைம்மாறொன்றிதற்குண்டாங்கொல். (௮௯)

என்றுபன்முனிவர்கும்பமுனிவனையேத்துங்காலைக்
கன்றுநின்றுவந்தவேநதன்முனிவனைக்கசிநதுதாழ்ந்து
தொன்றுபோலுறவுட்கொண்டதோயத்தைவிடுகவெனறு
னறமைதரவிடுததானாததுபுணரிமாதோ. (௯0)

முனிவிடைபெற்றுவானோர்முழங்குதம்முலகம்புக்கார்
கனிமனத்துறுவனபோநதுகாயாரோகணமுனாக
வனிதையோர்பாகத்தண்ணல்வைப்பெலாஞ்செனறுபோற்றி
யனியமிலாதமேன்மையகததீசமிறைஞ்சுங்காலை. (௯௧)

அந்தமாவிலிங்கநின்றுமற்புதன்றோன்றிவேட்ட
சந்தமார்வரங்கணல்கத்தவாதபேருவபயிற்பெற்று
மூநதமாமலயநண்ணிமுனிவாதங்குழாங்கள்சூழப
பநதமோவுறவமர்நதுபாரினைச்சமனசெய்தானால். (௯௨)

நித்தியகங்கைதன்னோடகத்தியநீருமூழ்கிச்
சத்தியவகத்தீசன்பொற்றாளிணைதொழுதுவைந்த
கத்தியதுதியுஞ்சொல்வாகருதியபோகந்துய்த்து
மெத்தியசிவலோகத்தேவீற்றினிதிருபபாரொன்றும். (௯௩)

கலையுணர்ஞானம்வேட்டோர்கசிந்தனரடைந்துதென்பான்
மலைமுனிபதிட்டைசெய்தவகததீசவள்ளல்பாதந்
தலையுறப்பணிந்துபோற்றிற்றாழ்விலாதடைவாரொன்று
முலைவிறாற்கவியும்பாடும்வலிமையுமுறுவரன்றே. (௯௪)

அகத்தியன்பூசைசெய்தவகததீசந்தனக்குண்டாய
மிகத்துவம்யாதுசொற்றுமாமலராளிவநது
தகத்திகழ்நடுத்தலேசஞ்சமைத்தரும்பூசையாற்றி
யிகத்தவில்பேறுபெற்றசரிதமுமெடுத்துச்சொல்வாம். (௯௫)

அகத்தீசப்படலம் முற்றிற்று.

படலம் ௧௫-ம் - திருவிருத்தம் - ௯0௧௯.

# நடுத்தலேசப்படலம்.

பந்தமறத்துயர்சனற்குமாரமுனிபல்கலையு
நந்தவுணர்சயிலாதிபதநதொழுதுநம்பெருமான்
சந்தமுறவமருநடுத்தலேசங்காரோணத்து
வந்ததிறனுரைத்தியெனமனமகிழ்ந்துகூறுவான். (க)

முன்னமொருகற்பத்தின்முழுவதுமாக்குதல்கருதி
யன்னமுகைப்பவன்முயன்றுமாகாமேமனம்வருந்தி
யென்னபுரிகுவமினியென்றெண்ணியெழுந்தனனவடப்பைம்
பன்னமிசைவிழிவளரும்பச்சைமாறனையடுத்தான். (உ)

அடுத்தமலரவன்வணங்கியண்ணலேபடைப்பதனுக்
கெடுத்தபலதிறன்முயன்றுமெய்திலனென்செய்வலென
வுடுத்தபொலந்துகிலானுமுமாபதியார்திருவருளான்
மடுத்ததிஃதெனத்தெளிநதம்மறையவனுக்குணர்த்துவான். (ங)

தூயமலர்மிசையமருநதோன்றல்கேளெம்பெருமா
னேயமிகுசத்திகணனணிவித்திமுதலோரைவ
ராயவருணிவிர்த்திகளையடையாதகாரணத்தாற்
பாயபடைப்புறமுயன்றும்பலிதகிலதோரொட்டுணையும். (ச)

அண்ணலவன்சத்திகளேயாக்கன்முதலைநதொழிலும்
பண்ணல்பிறிதிலையுணர்திபகாதருமச்சத்தியறி
லெண்ணலெலவொருதரும்புமிருமபடைபபாதிகளியற்று
மொண்ணலத்தினொருபசுமுன்னுனுற்றியதோர்ந்திலைகொல்லோ. (ரு)

உன்னைமகனாப்பெறுவேனொருகான்மறறொருகானீ
யென்னைமகனாப்பெறுவையிருவருமற்றவனுடம்பின்
முன்னையிருபாலுதித்தோமொழிநதவிவையத்தனையு
மன்னையனையானவன்செய்யாடலெனவுணர்மைநத. (சு)

வேறுதவஞ்செய்வதினும்வெய்யபொறிசெகுத்தைந்தாக்
கூறுபொறியளநதெண்ணிக்குழகனருட் ிப்பூசை
மாறுதபப்புரிநவமேவாய்த்தபெருந்தவமாகு
மூறுபலவுறப்பினுனுமுத்தமாங்கம்பொருவ. (எ)

பேறுபலவற்றினுளும்பெறற்கரியபெரும்பேறு
மாறுதவிர்சிவபெருமான்மகத்துவஞ்சாலருட்பேறே
யூறுதவிரப்பேறொருனுத்துணைநீயுற்றனையேற்
றேறுபெருமபடைபபொன்றோசெய்கையெலாஞ்செய்குவையால, (அ)

ஆதலினச்சிவபெருமானடிக்கமலமருச்சித்துக்
காதலினமற்றவனருளைக்கோடியெனவுரைத்தா
னோதலின்மிக்குவப்புற்றொனெண்பூசைபுரிதானம்
வீதலின்மறறெதுவென்றுன்விண்டுமனத்துணர்ந்துரைப்பான். (கூ)

எண்ணரியதலங்களுளுமேற்றமாம்பெரியதலங்
கண்ணரியகுடந்தைக்காயாரோகணத்தலமே
நண்ணரியவநுசார்ந்தநன்றுசிவக்குறிநிறுவிப்
பண்ணரியபூசைபுரிபனவபோவெனவிடுத்தான். (க0)

பச்சைமுகிலெடுத்துரைத்தபடிகாயாரோகணத்து
விச்சைதெரிமுனிவரொடுமேவியினிர்புனலுன்கு
மிச்சைநிரம்புறமுழுகியாதிபுராணனையிறைஞ்சி
யச்சையருள்கருந்தடங்கண்ணம்மைமலர்ப்பதம்பணிந்து. (கக)

மேயசுதைக்குடத்துதித்தவித்தகனையொருமுனியா
லாயகாரோணனைமேவமரரோநிடுநேசனைநற
றூயவகத்தீசனையனபுள்ளுருகச்சென்றுதொழு
தேயமலரவன்மீட்டுமெயதனுணகாரோணம். (கஉ)

ஆதிபுராணப்பெருமாற்கவாசியாசையினருள்சா
னீதியமைநகர்நடுவினிலவுதனியொனறமைத்துப்
பாதிமதிபுனைசடிலப்பரன்குறிதாபிததாங்கட்
போதிகவாத்தீர்த்தமொனறுதனைபெயரினுற்புரிந்து. (கங)

களிகினரப்புனலகத்திறகாலமூன்றினுமுழுகி
யளிகிளர்பூசனைபுரிதர்காயபாதிரஞ்சாந்த
மொளிகிளர்பன்மலராதியுபகரணமுறக்கொண்டு
தெளிகிளராவாகனமுறசெய்துபூசனைபுரிவான். (கச)

கண்ணுடுமருமணியைக்காரோணதருமபொருளை
விணணுடுமுழுதய்யநஞ்சுண்டவிளஙகமுதைப
பெண்ணுடுமொருபாகபபெருநதகையைத்தினந்தோறு
முண்ணுடுமன்புருகப்போறறுதனுமொருவுகிலான. (கரு)

பொழிமதுத்தாமரைமேயபுங்கவன்செய்தவநோககிப்
பழிதபுவானவராதிபற்பலருமதிசயித்துச்
செழிமறையோனசிவபூசைசெய்வதுபோலெவர்செய்வா
ரழிவில்கருத்தியாதோவென்றுழியகமிகமகிழ்ந்தார். (கசா)

இந்தவிதம்பூசைபுரிந்திருகருநாள்களிலொருநா
ளந்தமிலான்காட்சிகொடுததருளுவதென்றவனருள்யாஞ்
சந்தமுறப்பெறுவதுமென்றென்றுள்ளநதகநினைந்து
முந்தநினைந்துகீளுருகிமுளரிமேலவனிருந்தான். (கள)

அப்போதுகருணைபுரிந்தவ்விலிஙகத்திடைநின்று
மெப்போதுமொருதன்மையாளுயவெம்பெருமான்
செப்போதுமுலைபாகத்தெய்வநாயகன்றேன்றி
முப்போதும்பூசிக்குமுண்டகத்தோன்முனனின்றுன். (கஅ)

கண்டமலரவன்விளைந்துகைகள்குவித்தனனெழுந்து
தண்டமெனக்கூற்றினுயிர்குடித்ததாண்மிசைவிழுந்து
கொண்டவுவப்பினனாகிக்குறித்தொருமுக்காற்சூழ்ந்து
விண்டமொழிநாக்குளறமுன்னின்றுதுதிவிளம்பும். (க௯)

விண்ணனிலந்தீயிரும்புவெங்கதிரோனெண்கிரணங்
கண்ணருக்கனீருவர்ப்புமலர்மணங்காய்கதிர்சுக்கை
வண்ணமணியொளிநாரந்தண்மையழல்வதிவெம்மை
பண்ணமையுமிசைபோன்றபரம்பரநிற்பணிகின்றேன், (உ0)

ஒன்றாகிப்பலவாகியுருவாகியருவாகி
நன்றாகித்தீதாகிநான்மறைச்சென்னியுந்தீண்டாத்
தொன்றாகிப்பூதிதாகிச்சுடராகியிருளாகி
யின்றாகிநாளையுமாமிறைவநினையிறைஞ்சிடுவேன். (உக)

வானாகிவளியாகிவயங்கழனீர்மண்ணாகி
யூனாகியுயிராகியுயிர்க்குயிராய்நிறைந்தபெரு
மானாகிரவிசோமெதியாகிப்பதியாகித்
தானாகிநின்றபெருந்தலைவநினைச்சார்தருவேன், (உஉ)

பாலாகிச்சுவையாகிப்பாதங்களொடுபயனு
நாலாகியுருவமிருநாலாயொன்பதுமாகி
மாலாகிநானாகிமற்றெவையுமாயெவைக்கு
மேலாகிநின்றாய்நின்மென்மலர்த்தாளிணைதொழுவேன். (உ௩)

உடையாய்நின்னடிபோற்றியொள்ளியமூவிலைச்சூலப்
படையாய்நின்னடிபோற்றிபச்சிளவெண்மதிமிளிர்செஞ்
சடையாய்நின்னடிபோற்றிசாந்தமடையாதமனத்
தடையாய்நின்னடிபோற்றியண்ணாநின்னடிபோற்றி. (உ௪)

என்றுதுதிபுரிபவனுக்கெம்பிரானருள்சுரந்து
நின்றுனக்குவேண்டும்வரநவிறியெனவாய்மலரத்
துன்றுமுவகையின்மீட்டுந்தொழுதெழுந்துகைகள்குவித்
தொன்றுவிதமெதிருநின்றோதியிவைவேண்டுவான். (உ௫)

தேனூறுமலர்க்கொன்றைச்சிவனேநின்திருக்காட்சி
மேனூறுமறையுரைக்கும்பெரும்பேறுவேறில்லை
யானூறுநின்னடிக்கேயன்புகனிதரல்வேண்டு
மூனூறுநசையனைத்துமொழிஞானமுறல்வேண்டும். (உ௬)

தனைமுதல்யானையுஞ்செயநின்சத்திநிதரல்வேண்டும்
புனைதவிர்ந்நகரநடுப்பொலிதலினற்சிற்றடியேன்
கனையுமுளனடுப்பொலியுங்காரணத்தாலினையதலம்
வினைசெய்நடுத்தலேசமெனுமொருபெயர்மேவுதல்வேண்டும். (உ௭)

தெரியவமைபுனல்பிரமதீர்த்தமெனவொருபெயர்பெற்
றரியபயன்குடைவாருக்கமையவளித்திடல்வேண்டு
முரியநினைத்தருசிப்பாருறுபோகம்பலதுய்த்துத்
துரியநிலைகடந்தின்பந்துய்க்கும்வீடுறல்வேண்டும். (உஅ)

இந்தவரமளித்தியெனவிரந்தனனான்முகனையான்
பந்தமறப்பரம்பரன்சாம்பவதீக்கையினிதாற்றி
யந்தமிலாமுப்பொருளுமறியுஞானமுமருளி
யெந்தவரங்களுந்தந்தோமென்றருளியுருச்கரந்தான். (உகூ)

அன்றுமுதலத்தலமுமப்புனலுமாராருளே
யொன்றுநடுத்தலேசமெனவுயர்பிரமதீர்த்தமென
நன்றுபெயர்புனைந்தனநன்ஞானமருளியதிறத்தாற்
கன்றுதவின்ஞானதலமென்றுமொருபெயராகவைவார். (௩0)

பிரமதீர்த்தம்படிந்துபிரமனூற்றுபித்த
பரமநாயகற்பணிவார்பரமநாயகற்பிழைத்த
சரமமார்வினையொன்றுநதவிர்தரயாவையுமொழிவார்
கிரமமாமுத்தியின்பங்கிடைத்துவாழ்ந்துவர்மெய்யே. (௩க)

விடைகொடுதன்னுலகடைந்துமேயபடைப்பினிதியற்றி
நடைகெழுநான்முகனிருந்தானடுத்தலேசம்புகனரும்
புடைகதைக்கைக்கூற்றுவன்முன்புரிந்தபாதகமொழிவான்
றடையறவந்தருச்சித்தகாதையினிச்சாற்றுவாம். (௩உ)

நடுத்தலேசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கக-இ-திருவிருத்தம்-௪0௬அ.

## இயமன்பூசித்தபடலம்.

மருவியசனற்குமரமாமுனிவரன்மலமா
சொருவியசயிலாதியொண்மலர்த்தாள்போற்றி
வெருவியநமன்புரிந்தபாவமென்வினைத்ததெவன்
பெருவியப்புறவதனைப்பேசெனப்பேசிடுவர்ன். (க)

இளமுனிமார்க்கண்டற்ககவையெய்திடுமீரொட்
டளவைவினைத்தஞெமென்னையுங்கவலுற்றுத்
தளாதிரவெவனொன்றம்மழமுனிதான்வினவ
வுளம்வெருவுறநமன்வந்துறமெனவுளைத்தழுதார். (உ)

பரசிவனுளனன்னன்பாதபங்கயமுள்ள
வரமலர்பூலவுள்ளவண்புனலுளதெங்கும்
விரவதிர்வொடுமுள்ளம்வெருவலினெனவிளம்பிக்
கரவறுகளிப்போடுங்கைதொழுதெழுந்தன்னல் (௩)

ஒருபரசிவக்குறியையுன்னிடமனமுண்டு
பொருவருமரியதுதிபுரிதரவாயுண்டு
மருவருச்சனைபுரியவளவியகையுண்டு
திருவுருநோக்கிடுவான்சிறப்புறுவிழியுண்டு. (௪)

மற்றவன்புகழ்கேட்கவார்தருசெவியுண்டா
லற்றமதறப்பழகவவனடியவருண்டு
சொற்றபத்திமைபுரிந்துதொழுதிடத்தலையுண்டு
கொற்றமென்பாலன்றிகொடுநமறகெவனென்பான். (௫)

பண்ணவனடிப்பத்திபசுமரத்தறையாணி
வண்ணமென்றிடவுளத்துமருவிடக்காசிமுத
லண்ணலந்தலமனைத்துமடைந்தடைந்துறப்போற்றிக்
கண்ணகன்கடலூரைகுறுகினன்காதலொடும். (௬)

தலையமைகடலூரிற்றற்பரசிவலிங்க
மலைவறபபூசைபுரிநதன்புறவமர்காலைக்
கொலையமைபிணர்கக்கோட்டுக்கோட்டுவெமபகடேர்ந்து
மலைகருமலைபோலவந்தனனகூற்றுவனே. (௭)

கூற்றுவனவரல்கண்டுங்கொணடகொள்கையிற்சிதையா
தூறறுவதருச்சனையேயனறிமறறெனறுமிலான்
மாற்றுயதிலையாகவநதெனைததனனுலகத்
தேற்றுவதறிவாமென்றிருநதனன்மார்க்கண்டன். (௮)

கண்டகண்மிகப்புலிங்கஙகானறிடக்கடுங்கோபங்
கொண்டவனுயுருமிறகுளிறுபுகொதித்துறபபி
யெண்டகரூனவநதெண்ணலைசிறுபிளளாய
வண்டமர்குழல்பாகறபோறறுபுவதிகினறாய். (௯)

அரியயன்முதலாயவமரர்முற்பல்லோரும்
விரிதருமெனதாணைகடந்திலர்மெய்ம்மையிது
புரிதருபூசையைக்கண்டஞ்சுபுபோதல்லோ
தெரிவிராதரவம்மோவெனறன்னின்சினமற்வி (௧0)

பரசிவனடிப்பூசைபண்ணிடுபெருநோனபி
னூரவமைநெறியினன்யானுனக்கெளியவனல்லேன்
புரவமையாதபிறர்போலெனைநினையற்க
திரமுறவநதவழிச்செல்லெனமுனியுரைத்தான். (௧௧)

என்னுடைவலிசிறிதுமெண்ணலைசிறுபிள்ளா
யுன்னுடையெழுத்தொழிந்ததுணொனநமன்சொற்றான்
முன்னுடைத்தலையெழுத்தேமுன்னினையுளத்தமைத்த
மன்னுடையர்தெழுத்துமதித்திலைபோதுமென்றான். (௧௨)

ஓவருமாபாசமுள்ளதென்றன்மறலி
யேவருமாபாசமிரிப்பதறக்கடவானைத்
தாவருமாபாசஞ்சாடெனச்சார்ந்தவெனக்
காவருமாபாசமாமெனமுனியுரைத்தான். (கங)

தண்டமொன்றுளதஃதெங்காத்திடுவேனெனவே
தண்டவன்றோளிபமனசாற்றினன்முனிவரைக்கோ
தண்டமுனானடியேசார்பெனச்சார்ந்தபுரி
தண்டமுனைனினதுவசித்தண்டமென்செயுமென்றான். (கச)

சூலமொன்றுளதெடுத்ததனைப்பனின்னிறமென்று
ஞாலமுண்டவனிருக்கையமர்தருதிரிசூலங்
காலமொன்றமுனைந்ததம்வாயப்பெய்துகறிக்குமது
போலவொன்றிலையெனறுனபுன்னகைமழுமுனிவன. (கரு)

மூளைதத்திலனமொழிப்போரிலெனச்சினந்தலைகொண்டு
வளைத்தவனமருபெருமைப்பாசத்தினைமறலூந்த
விளைத்ததுதனசமூத்தின்மணியொலிவிடைக்கழுத்திற்
றளைத்தபொனமணியொலியுஞ்சாருமெனறனன்முனிவன். (கசு)

வம்மெனவந்தினைநீமாய்வதின்னேசரதங்
கொமமெனவுணர்கெனறுனுயிர்கொடுப்பவனுயிரைத்
தமமெனுமொருநீயோதகவலவெனுநானே
விம்மெனுமுனநெரியுமெனமழமுனியுரைத்தான். (கஎ)

என்றலுமுலகமெலாமிரிந்தலைதரமுழங்கி
யொனறலில்பெருஞ்சினங்கொண்டுறுபூல்விழித்தோற்றிக்
கனறலில்புகையுயிர்த்துக்கரும்பகட்டினைநீங்கி
யனறலினுறுகுறருனருளமையாமடங்கல். (கஅ)

கமனுறுகுதலோடுநமனெனக்கருதாவுத்
தமனுளம்பதைபதைத்துத்தாளைக்கணிபொரழிய
வெமனுமியலதிலையெனறிலிங்கத்தைத்தழுவினனுங்
குமனெருமுதல்வெளியேகுதிகொளுமபடிப்பழைப்பான். (ககூ)

திரிபுரமுழுதெரித்தசிறுநகைப்பரவோலங்
கரிகிறலறக்கீண்டுகவர்தன்வரவோலை
மரிமகனுடலழித்தவழல்விழியரவோலங்
கிரியுரவொடுதிருமால்கெழுவொருசரவோலம். (உ0)

சங்கரனைக்கபயந்தற்பரனைக்கபயம்
பொங்கரவாபரணப்பூரணனைக்கபயஞ்
செங்கரவழலேந்துஞ்சிற்பரனைக்கபய
மிங்கரவத்தொடுகூற்றெய்தினனினக்கபயம். (உக)

என்முறையிகொலத்தெரிவிழிகமறைய
முனகன்வெங்கொடும்பாசமுனியுடன்மிசைவீச
வனகனும்வெளித்தோன்றியடியெடுத்துதைத்திடலுங்
கனவனாயெனவீழ்ந்தான்கடுஞ்சினக்கூற்றவனே. (உஉ)

அஞ்சுதலிலனுகிப்பூசனையினிதாற்று
மஞ்சனைமுசகோககதித்தியமுறவழுங்கி
யெஞ்சியகூற்றவனையெழுப்பிகம்மடியாரைத்
தஞ்சமென்றடையென்றுசாற்றுபுவிடுத்தனனே. (உ௩)

பூசனைபுரிகாலைப்போற்றுதல்செய்யாது
பாசம்வன்புறவீசிபபடர்புரியாதகத்தாற்
காய்சினவலியிழந்துகவலையுண்மிகத்துளைந்து
தோய்சலதிப்புடவித்தலம்பலதொழுனினைந்தான். (உ௪)

ஆனந்தவனமாகியலகில்பஃறலஞ்சென்று
தானந்தமில்லாதசயம்புவைப்பூசித்து
மூனந்தற்கொழியானையொருசரும்பகட்டேர்தி
கானந்தப்பெருகுபுனல்யமுனையங்கரையுற்றான். (உ௫)

வளிதடவிறும்பாடுமகதிக்கில்யாழ்முனிவ
னொளிகிளராங்கெதிரவுவந்தவனடிதாழ்ந்து
களிகிளர்செருக்கின்முனநிகழ்ந்தவெலாங்கரைந்து
தெளிதலமொன்றறியச்செபபுதியெனக்கென்றான். (உ௬)

வேறு.

புன்னையங்கானல்சூழும்பொருனைகடறீரத்தி
னன்னையோர்பாகத்தெம்மானமர்தருதலமொன்றுண்டாற்
றன்னையேநிகர்வதெனாவுந்தணவருஞ்சிறப்பினோங்கும்
பொன்னையேபொருவயாரும்பொதிதருதிருக்காரோணம். (உ௭)

கேத்திரம்பலவற்றிற்றும்விசேடமாங்கிளர்ச்சியாலே
கேத்திரராசமென்றுங்கேத்திரவரமேயென்றுங்
சேத்திரத்தியல்புணர்ந்தவிழுமையருரைப்பரந்தக்
கேத்திரமருவியுள்ளபுனலெல்லாங்கெழுமவாடி. (உ௮)

கருந்தடங்கண்ணியோடுகருணைசால்காரோணத்தா
ரிருந்தகற்றளிமுன்போற்றியேனையதளிகளெல்லாம்
பொருந்துறப்போற்றிக்கஞ்சப்பூவினன்பூசைசெய்த
பெருந்தகைகடுத்தலேசமெனும்பெருந்தளியைச்சார்ந்து. (உ௯)

அந்தணனமைத்ததீர்த்தத்தாடியங்கடுத்தலேசச்
சுந்தரன்பாதம்போற்றித்தொழூஉப்பலபணியுஞ்செய்யி
னைந்தவல்வினையுந்தீருமெய்துவைவலிபோவென்றான்
சுந்தயிக்குய்ந்தேனென்றுதாழ்ந்தனன்விடைகொண்டானல். (௩0)

ஒளிவளர்சடையோயுனக்கொருவொன்றேயுவமனிலாத்தனிமுதலே
தெளிவளரமுதேஞான்றுகட்கரும்பேசெறிக்கத்தித்திக்குந்தேனே
யளிவளர்கனியேயானந்தப்பிழம்பேயற்புதம்விளைக்குமாரமுதே
தளிவளர்மறைசூழ்ந்தேத்துகாரோணத்தலத்தமர்சிவக்கொழுந்தே. (௧௬)

என்றுநற்றுதிசெய்தெண்ணிலாவுயிருமீன்றினிதளித்திடுமிறைவி
யன்றுதவில்லாவொருகருந்தடங்கண்ணம்மையைக்கண்டுளங்களித்து
நன்றுறத்துதித்துமற்றுமாவரனையகந்தமர்வானையும்போற்றி
வென்றுமிக்கொளிருஞ்சக்கரப்படைமால்விடைகொடுவந்தனன்வெளியே.

அருடருமமுதகடேசமும்போற்றியமரரேந்திரேசமும்பணிந்து
மருடபுமுனிகாரோணமுந்தொழுதுவயங்ககத்திசமுமேத்தி
யிருண்மணிமிடற்றானினிதுவீற்றிருக்குமெழினடுத்தலேசத்திற்புகுந்து
தெருண்மமிபிரமதீர்த்தத்தின்மூழ்கிச்சேவித்துப்பெருமகிழ்சிறந்தான். ()

காடுகாரோணநாயகன்றன்பானடுத்தலேச்சுரன்வயிற்றிசையிற்
கூடுமச்சுதபுட்கரணியென்றுரைக்கக்குலவியவமுதபுட்கரணி
பாடுறுமுவலகம்படிந்தம்யவமைத்துப்பண்புறமற்றதின்மூழ்கி
நீடுவெண்ணீறுகண்டிகைபுனைந்தினின்மலவைந்தெழுத்தெண்ணி. (௧௯)

அன்னபுட்கரணிக்கலங்கழற்றிசையினவிர்நடுத்தலேசத்தின்றென்பா
னன்னார்வடையொனறியற்றுபுவிலமுநாதனென்றுரைத்திடும்பெயரின்
மன்னவோரிலிங்கந்தாபித்துநறியமஞ்சனமாதிகள்கொண்டு
பின்னமொன்றில்லாவன்புமேற்பொங்கபிறங்குநற்பூசனைபுரிவான். (௨௦)

தானினிதமைந்தவமுதபுட்கரணிதன்னின்முக்காலமும்படிந்து
தேனினிதுயிர்க்குமலர்முதற்பலவுந்தெவ்வியத்தடத்துமஞ்சனமே
நானினிவேறுகவர்தலென்னறுநயமுறககயர்ந்துபூசிப்பான்
மானினியமருந்தளிவிளக்கெனமணிகடந்திமைக்குமார்புடையான். ()

செக்காஞ்சடையானருட்குறிப்பதிட்கட்சிறந்தகாரோணத்திருற்றிச்
சக்கரப்படையான்பூசனைபுரிவானறவாதருளபெறுவனவ்வருளை
மிக்கராமாமிரும்பிணுக்கொளுவெருவுபுதானவர்கரந்தா
ரக்கரவுணர்நறுமிகமனங்களித்தாரமரர்முன்னுயபல்லோரும். (௨௨)

குறிவனிருகைமலருந்தன்றலைமேற்குழுவன்விண்டுநாயகனை
யாடுவதுஞ்சாமஞ்சிவிர்த்திடையாடியரகரகரவெனமுழங்கிப்
பாடுவன்பல்காற்றுமுந்துதாழ்ந்தெழுவன்பரனருள்பெறுவதென்றென்று
வாடுவன்மகிழ்வனெனசொலக்கடமையவன்செய்யுமனபிமேயே. (௨௩)

எனைவிடையூருஞ்செய்தியக்குலைக்கனைசெய்தெய்குலைதிரிபுரங்குலைய
நனைமலர்கழல்செய்தொருபுறத்தமைப்பைபாலவகைச்சத்திகடம்மும்
புனையிசைமுமலையார்சந்நிதானங்ளோபொற்பிழந்துயங்குதனன்றே
யினைமுழுதொழிக்குமதின்போதத்தின்மேவியபரசிவக்கொழுந்தே. (௨௪)

கண்மலர்சாத்தக்காண்மலரணிந்தாய்கடையனேனரப்புபவித
மென்மலர்நிறத்திற்புனைந்தனைமெய்த்தோலினையதாக்கஞ்சுகஞ்செய்தாய்
திண்மலர்வெரிகன்பொருகரங்கொண்டாய்சிரிழந்தயங்குதனன்றே
விண்மலர்சூழ்விண்டுநாதத்தமேவியபரசிவக்கொழுந்தே. (உரு)

அருட்பெருங்கடலேநின்னடியடைந்தேனண்ணலேநின்னடியடைந்தேன்
மருட்பகைதுமித்தவனைக்குநாப்புரக்கும்வள்ளலேநின்னடியடைந்தேன்
றெருட்டிடையவிண்டுநாதத்திற்செம்மையோய்நின்னடியடைந்தே
னிருட்கடுமிடற்றாய்நின்னடியடைந்தேனென்றுதோத்திரம்பலபுரிந்தான்.

ஆதியுளமுருகியின்னணம்புரிபச்சுந்தரநாயகனிடப
மதிவிசாகநதினவ்விலிங்கத்தினின்றுமாண்புறவெளிவந்து
பதிபெருவனப்புக்கரசனியாரும்படிவரங்கொடுத்தனமின்னும்
விதியுறவேண்டும்வரமெவனுரைத்திவிரிதுழாய்க்கண்ணியவென்றான். ( )

என்றலும்வணங்கியிவ்விலிங்கத்திலென்றநீபொலிதரல்வேண்டு
நன்றமைதரநானமைத்ததீர்த்தத்தினைமுறைத்தோய்ந்தநிற்றொழுவார்
பொன்றலில்வினையும்போக்குதல்வேண்டும் போகமும்பொருந்திடல்வே
ண்டு, மன்றநானவசித்ததேத்தினெஞ்ஞான்றும் வசிக்கவும்வேண்டுமென்
[திரந்தான். (உஅ)

மாயவன்மொழிந்தபடியெலாமுதவிமறைந்தனனவ்விலிங்கத்துத்
தூயவனையனருளியவரத்தாற்சுந்தரராசனென்றொருபேர்
மேயவனாங்முனையிதசிறந்துவிளங்கினன்திருநெடுமானன்
காயவனழைக்கக்கண்டுவண்கமலையகமகிழ்ந்துறைதரப்பூதியினளால். (உக)

அண்ணலெம்பெருமானபூசனைக்காற்றற் கமைத்ததீர்த்தத்திற்குமேல்பா
லண்ணலம்பொலியமுனைபுதானமாநறுமாதவம்புரிந்தவத்தேத்தே [ல்
யொண்ணலமபொலியவாலயமமைத்திட்டொளிர்திருமகள்சிறைக்கணுழ
ன், கண்ணலவிடுவச்சேனதியருங்கலபமேவுவன்சவுந்தரமால். (௩0)

அனையனைதொழுவோர்வைகுந்தமடைவாரமுகியவிண்டுநாதனைத்தாழ்
வினையினொலலபபோகமுமடைவார்மேதகுமுத்தியும்பெறுவார்
நனைமலர்க்கடுக்கைவிண்டுநாதச்சீர்நவின்றனநலமெலாம்பொருந்துன்
கனையருணாகநாதனொன்றுரைக்குங்கண்ணுதலார்வரவுரைப்பாம். (௩க)

விண்டுநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கஅ இ-திருவிருத்தம்-ககஉ0.

## நாகநாதப்படலம்.

பொழியருணைத்திப்புத்தேள்பொன்னடிக்கமலம்போற்றி
மழிவருந்தவத்தான்மிக்கோனாகியசனற்குமாரன்
பழிதபுநாககாதர்மான்மியம்பகர்தியென்னக்
கழிமகிழ்சிறப்பவன்றான்கட்டுரைத்திடலுற்றான். (க)

பூதலத்தமர்கின்றூர்வாய்ப்புகழொடும்பொன்றூடாய
மீதலத்தமர்கின்றூர்வாய்ப்புகழுமிக்கணியாப்பூண்டு
பாதலத்தமர்வோரெல்லாப்பரப்பிற்குமரசுசெய்வோன்
மாதலத்திசைவருதுய்க்கும்வாஞ்சையனுகிவாழ்வான். (௨)

குணமலிமனைவியோடுங்கூடிவாழ்கின்றநாளிற்
பணமலிசேட்டனென்பான்பற்பனூரென்புழுந்து
மணமலிகுதலைச்செவ்வாய்மகவுதோன்றுமையாலே
கணமலிதுயருஞ்சூழ்கிக்கவன்றிதுகலையனுற்றான் (௩)

கொடையுயர்முகமனின்றேற்கொழுமலர்நாற்றமின்றே
லடைகிசைமதியமின்றேலருந்தவர்க்கருளையின்றேன்
மிடைகலைஞானமின்றேல்விளக்குறுமறமின்றேற்
கடைபடுதிறமேபோலுமில்லறம் * காலின்றென்னில். (௪)

பண்ணிலாப்பாடல்போலும்பற்றிலாநட்புப்போலும்
வெண்ணிலாச்சடனம்போலும்பெயரிலாவாழ்க்கைபோலு
முண்ணிலாநெய்யிலாமலூட்டுமின்னமசில்போலுங்
கண்ணிலாவதனம்போலுங்கான்முளையில்லாவில்லம். (௫)

என்றுளத்தமையவெண்ணியிருங்கடற்புடவிமேவி
நன்றுநம்பரனைப்போற்றிநந்தனனடைவேனென்று
குன்றுதலில்லாத்துயருணங்கெழுமனைவியோடு
மொன்றுபஃறலையனுயவுரகன்மணியிசைவந்தானுல். (௬)

வந்தபாப்பரசன்றுபவசிட்டமாமுனிவற்கண்டு
நந்தநான்மகவுவேண்டிநண்ணினனஃதுமேவுஞ்
சந்தமாதவமீதென்றுசாற்றுகியென்றுதாழ்ந்தா
னந்தமாதவனுமுள்ளத்தாயந்தினிதுரைகசலுற்றான். (௭)

பரம்பரனிலிங்கபூசையன்னலேசிறந்ததோன்பா
கிரம்புமமகவுநல்குநினைத்தவையனைத்துமேவும்
வரம்பறுமறுமைப்பேறுவாய்ப்பதுமேலாமுத்தி
யுரம்படப்பெறுதுமந்தப்பூசையாலுரகவேந்தே. (௮)

ஆயிரங்கமலமேனியொருங்குபூத்திடக்கனிப்பார்
பராவொருகமலமேவிப்பண்புறவாழ்வாருந்தி
விராவொருகமலம்பூப்பவிளங்குவார்சுடிலமோலி
யராவணிபவனிலிங்கத்தன்கொருகமலமிட்டார். (௯)

ஆதலாலிலிங்கபூசையனைத்தையுங்கொடுக்கவல்ல
நீதலான்மறைகள்வேறுண்டென்றெடுத்தியம்பாவென்றுங்
காதலாலதனையின்னேகடைப்பிடித்தாற்றிலுள்ள
கோதலாற்கவலாயென்னவோதிவாமுற்றுமென்றான். (௧௦)

---

* கால் - சந்ததி.

முன்புநாளினைந்தவாறேமொழிந்தனன்பன்னூற்கேள்வி
வன்புசான்முனிவனென்றுமகிழ்ந்தனனாகர்க்கோமா
னன்புமேவிலிங்கபூசையாற்றுதற்கிடமீதேயென்
றின்புகூர்கும்பகோணத்திருநகரெய்தினானே. (கக)

பொருவருங்கும்பகோணப்பொன்னகர்மரீஇக்கீழ்க்கோட்டத்
தொருவருமன்பிற்புக்காளுளிர்சிவக்குறியைக்கண்டான்
வெருவருங்களிப்பிற்றாழ்ந்துமேதகுதீர்த்தமூழ்கி
மருவருமலர்முற்கொண்டுமாண்புறப்பூசைசெய்தான். (கஉ)

ஈசனைமடந்தைபாகத்திறைவனையன்பர்மாட்டே
நேசனையொளிர்கீழ்க்கோட்டவிமலனையளக்கவொண்ணாத்
தேசனைச்சிவபிரானைச்சிற்சபையாடுவானைப்
பூசனையிந்தவாறுபுரிந்தனன்சின்னாட்சேடன். (கங)

மலவிருடிமித்துநாளும்வழுத்திடுவாரையாளு
நிலவணிசடிலப்பெம்மானெறியினேத்திடுதனக்குப்
பலமெளிதருளிச்செய்யாப்பான்மையைநினைந்துவேறு
நலமுறல்கருதிச்சேடன்சண்பகாரணியஞ்சார்ந்தான. (கச)

சண்பகவனத்தைமேவித்தற்பரவிலிங்கங்கண்டு
கண்பகமருவுவாங்கோர்தீர்த்தத்தினயந்துமூழ்கி
யெண்பகமலர்களாதியாவுநன்கமையக்கொண்டு
பண்பகந்தரித்தாயென்றுபரவினன்பூசித்தானால். (கடு)

சத்தனையளவாமேன்மைச்சண்பகாடவியளுதி
முத்தனையென்றுமூவாமுதல்வனைக்குன்றக்கொங்கை
யத்தனைமூன்றுபத்தோடாறற்குமப்பாலானைச்
சுத்தனையிடையறாதுதொழுதுபூசித்தானங்கே. (கசு)

பூசையிவ்வாறுசெய்யும்புழையெயிற்றரவவேந்த
னசையுள்ளூணர்ந்துமெண்மையருள்செய்யாத்திறமுணர்ந்தா
னிசையோர்பாகத்தெம்மானருள்விரைந்தெய்தலெண்ணிப்
பாசையோவாதகாசிசூழ்பாம்புரமணுகினானே. (கஎ)

காலெலாங்கமலக்குப்பைகளமெலாமுயர்ந்தநெற்போர்
மேலெலாங்கமஞ்சூற்கொண்டல்வெளியெலாங்கருப்பங்காடு
சாலெலாம்பவளமுத்தந்தடமெலாம்பொழிபான்மேதி
பாலெலாஞ்செம்பொனாயபாம்புரக்கோயில்புக்கான். (கஅ)

எண்ணியவனைத்துநல்குமிலிங்கமொன்றங்குக்கண்டு
புண்ணியதீர்த்தமாடிப்பொலிமலராதிகொண்டு
கண்ணியவன்புபொங்கக்கசிந்துபூசித்தான்பின்னு
மெண்ணியவாறோராதியாவருமதிசயித்தார். (ககூ)

புள்ளலைமலர்நீர்வாவிப்பாம்புரம்பொருந்திவாழும்
வள்ளலையருச்சித்தேத்தும்வாளராக்குலத்துவேந்தன்
விள்ளலையமையாவாங்கும்விரைந்தருளாமையெண்ணித்
கள்ளலைமலர்ப்புன்னாகக்காரோணங்கருதிவந்தான். (உ0)

எறிதிரைக்கடனாவாய்நின்றிழியும் * புன்னாகமெங்கும்
வெறிமணங்கமழநாளும்வீசுபுன்னாகமெங்கும்
செறிமணியெனும்பேர்பூண்டுதிருவம் ‡ புன்னாகமெங்கு
மறிவுமிக்குறலாலண்ணலருள் o வம்புன்னாகமெங்கும். (உக)

ஆரணவோதையெங்குமலங்கலங்கோதையெங்கும்
பூரணகும்பமெங்கும்பொன்மணித்தம்பமெங்கும்
காரணமாடமெங்குங்காமருகூடமெங்கு
மேரணமன்றமெங்குமிலங்குசெய்குன்றமெங்கும். (உஉ)

இன்னபலவளமுநோக்கிக்கேத்திரராசமென்னு
நன்னகரிதுபோலெங்குநாங்கண்டதில்லையென்று
பன்னகவேந்தனுள்ளத்தளக்கொண்டுமகிழ்ச்சிபம்ப
முன்னருந்தேவதீர்த்தமுதலியவனைத்துந்தோய்ந்து. (உங)

இழிதொழிலொருப்பாடுற்றவெளிமையுமோர்பொருளாவெண்ணி
வழிவழியடிமைகொண்டுவாழ்விக்குங்கருணைச்செல்வி
பழிதபுகருந்தடங்கட்பாவையோர்பாகத்தெம்மான்
செழிபெருங்கோயில்புக்குத்திருந்துநெஞ்சுருகப்போற்றி. (உச)

தூயவான்சுதைக்கடேசந்துகளில்பச்சிமகாரோண
மாயதோரீந்திரேசமகத்தீசநடுத்தலேசம்
பாயசீரவிண்டுவீசம்பராய்ததொழுதொருகாரோண
மேயமேற்றிசையினுள்ளசறுவதீர்த்தத்தின்மேல்பான. (உரு)

சிற்பநூல்விதிவழாதுசிறந்துமாலயமொன்றாற்றிப்
பொற்பவோரிலிங்கந்தாபிதததற்குத்தன்பெயர்புனைந்து
கற்பநீறணிவான்சொற்றவிதிகடைப்பிடித்துப்பூசை
யற்பமேவாதுசெய்தானாயிரமபணங்கொள்சேடன். (உகு)

காலையிற்குடந்தைமேயகடவுளைக்கருதுமுச்சி
வேலையிற்சண்பகக்காட்டண்ணலைவிருப்புங்கூரு
மாலையிற்பாம்புரத்துவள்ளலையத்தயாமஞ்
சோலையிறபொலிகாரோணச்சோதியைப்பூசைசெய்வான். (உஎ)

பூசையிவ்வாறுசெய்துவருமொருபுயங்கவேந்தற்
கீசையபங்குடையவெம்மானின்னருள்செய்தானாக
வோசைகொளனையான்பன்னியுதரத்துக்கருப்பமுற்று
ளாசைகொளரையான்செய்தானாருளொன்றுசேடன். (உஅ)

---

* புன்னாகம - சிறுனை. ‡ புன்னாகம்-புல்லியமலை, o வம்புன்னாகம் வம்புஉன்ஆகம் - எனப்பிரித்து - மணத்தைக்கருது மணமெனக்கொள்க.

சொற்றநாற்றலத்துங்காலைதொடங்கியோர்நாற்காலத்து
மற்றமில்பூசையாற்றியன்பதிகரிப்பத்தாழ்ந்து
செற்றமில்விடையும்பெற்றுத்திகழ்மனைக்கிழத்தியோடுங்
கற்றவர்புகழுஞ்சேடன்கருதுதன்னிருக்கைபுக்கான். (உக)

திங்களங்கொருபான்செல்லத்திருமகடனையுயிர்த்தாங்
கங்களவில்லாமாமையமைதருமொருபெண்பெற்றுண்
மங்களம்பொலியுந்தேவியதுகண்டுமகிழ்ச்சிபூத்தாள்
கங்களாயிரத்தானெல்லாக்கடும்புமிக்குவந்தமாதோ. (ஙo)

மூலையொருமூன்றுமார்பின்முகிழ்த்ததுகண்டுதேவி
யலைபெருந்துயரத்தாழ்ந்தாளதுசொலக்கேட்டசேடன்
மலைவருமமுதமுண்டோர்நஞ்சுண்டுமொழிந்தென்னத்
தொலைவருங்கவலையாயதொடுகடற்கிடங்கின்வீழ்ந்தான். (ஙக)

இருவருநெஞ்சமாழ்ந்தின்னணங்கவலுங்காலைப்
பொருவருங்காரோணத்தெம்புண்ணியரருளினாலே
பருவரும்பயிர்ப்பால்வீழும்பசுமழைத்தாரைபோல
வெருவருமனையார்தேறவிளைந்ததாகாயவாக்கு. (ஙஉ)

மூலையொருமூன்றுதாங்குமுற்றிழைதனைச்சின்னாளி
லலைகடற்கரைக்காரோணத்தண்ணலாரொருபான்மேய
கலையுணர்வரியமேன்மைக்கருந்தடங்கண்ணிபாத
நிலையுறப்பூசைசெய்துநேர்தொழுதிறைஞ்சச்செய்தால். (ஙஙு)

அனையமாதேவிசெய்யுமாரருணிரம்பப்பெற்றுத்
தனைநிகர்பெருமைவாய்ந்தசருவபுட்கரணிப்பாங்கர்ப்
புனையிழையுலவுங்காலைப்புரவலனொருவன்றோன்று
நினைதருமவற்காண்போதேநிறத்திஞென்றழுந்தாநிற்கும். (ஙச)

பின்னர்மற்றவனேவந்துபிறங்குறமணப்பானென்று
நன்னலம்பயப்பக்கூறநாகர்கோன்மனைவியோடும்
பன்னருமகிழ்ச்சியுற்றுன்பவளமென்கொடியோதெய்வப்
பொன்னவிர்கொம்போவென்னவளர்ந்தனள்புதல்வியம்மா. (ஙரு)

பிறையெனவளராநின்றபெண்ணணங்கரசைநோக்கி
இறைமகிழ்பூத்தசேடனிகழ்ந்தமையனைத்துங்கூறி
[illegible]மபணிபுரியத்தக்கமுற்றிழைமடவாரோடுங்
கறையிலப்புதல்விதன்னைக்காரோணங்கரத்துய்த்தான். (ஙசு)

முன்னுகாரோணத்தூற்றமும்மூலையொருத்தியாங்கு
மன்னுபஃறீர்த்தமெல்லாமாண்புறத்தோய்ந்துதோய்ந்து
பன்னுகாரோணநாதர்பைம்பொருலடம்புதந்து
மன்னுவான்கருந்தடங்கண்மாதேவிமுன்னருற்றாள். (ஙஎ)

நறுவிரைத்தயிலமாதிரயக்கும்யாவையுங்கொண்டாட்டி
மறுவில்சுத்தோதநாதிமாண்புசால்பலவுமூட்டித்
தெறுகதிரவனனானதீபங்கள்பலவுங்காட்டி
யுறுமகிழ்சிறப்பப்போற்றியுருகுபுபராசனுற்றான். (௩௮)

கருமுகில்விளர்க்குமாறுகறுத்துநெய்த்தெதிர்ந்தார்நெஞ்ச
மருவிருளனைத்தும்வாரிவாய்ப்பெயுங்கூந்தல்போற்றி
யொருகருங்கடலினுப்பனுதயஞ்செய்கதிரோன்மானப்
பருமணித்தகடுமுன்னுப்பதிபலபணியும்போற்றி. (௩௯)

மூலகாரணனுமெந்தைமுடிப்பிறையடியிற்றாழ
ஞாலமின்பமையச்சற்றேசுளிக்குநன்னெற்றிபோற்றி
யாலமுண்டவன்றன்கையாலமைதரப்புனைதல்செய்த
கோலமுண்டமையும்பொட்டுங்குலவிலம்பகமும்போற்றி. (௪௦)

வரிசிலைமதனைச்செற்றார்மனமிருந்தாடாநிற்கு
மெரிமணியும்பொனூசலெனப்பொலிகாதுபோற்றி
விரிகதிர்மதிபோல்வேணிமிசைக்கொளப்பதிக்கோதென்று
பரிவுறவுரைத்துமேவும்புழைமிளிர்தோடுபோற்றி. (௪௧)

ஒருவரைகுழையக்கோட்டியுரகநாண்பொருந்தக்கூட்டிக்
கருநிறப்பகழிபூட்டிக்கடும்புரமவியமாட்டிப்
பெருவலிதோற்றிநின்றபிரான்முடிகோட்டுமாறு
பொருவறக்கோட்டாநிற்கும்பொருசிலைப்புருவம்போற்றி. (௪௨)

குழைகிழிதரநடந்துகுமிழ்மிசைமறிந்துதொண்டர்
பிழைசிறுமையுநோக்காதுபிறழ்கருந்தடங்கண்போற்றி
மழைபொருகளத்தாரீட்டுமையலங்காரம்போற்றி
விழைகண்ணன்பெயருக்கேற்பமிக்கமர்கருணைபோற்றி, (௪௩)

விழியனியொன்றோடொன்றுசமர்செயாவிதநள்ளிட்ட
பழியில்சண்பகவரும்பினபடியெனுநாசிபோற்றி
செழிமுகப்பதுமந்தோன்றுநதியளொளிமுத்தமென்னக்
கொழிவனப்பொழுகக்கோத்தக்குலவுவெண்டரளம்போற்றி. (௪௪)

பரம்பரனழகுபார்க்கப்பதித்தகண்ணாடிபோலு
நிரம்பியவனப்புவாய்ந்துநிலவியகபோலம்போற்றி
வரம்பெறுபவளத்துண்டமாண்புசாலதரம்போற்றி
திரம்பெறவதற்குநாப்பட்செறியுமூன்றிரேகைபோற்றி. (௪௫)

நிலவுவண்கபோலமென்னுநீர்நிலைநாப்பட்பூத்த
குலவுசெங்கழுநீரென்னக்கோலமார்செவ்வாய்போற்றி
கலவுமம்மலருட்பூத்தகாமருதளவம்போல
வுலவுபேரழகுவாய்ப்புற்றொளிகிளர்வெண்பல்போற்றி. (௪௬)

செங்கழுநீருட்கொண்டசிறுநிலாக்கிரணமென்னச்
சங்கரன்மனமுருக்குந்தகையவெண்முறுவல்போற்றி
யங்கதினறுந்தேனென்னவமைதருமின்சொல்போற்றி
பங்கமொன்றேனுமின்றிப்பண்புசால்சுபுகம்போற்றி. (௪௭)

இருவிழியென்னும்பொன்னுமிரசிதம்புனைமெய்மின்னு
மருவிநீங்காமலென்றும்வாழ்பசுங்கமலமாகிய
பொருவிலாணிதயவாவிபூத்திடுபூவுமாகி
யொருவுருவனப்புவாய்ப்புற்றெளிர்தருவதனம்போற்றி. (௪௮)

பதுமனன்னிதியமென்னப்பகர்திருமுகத்தின்கீழாற்
புதுமைகொடெய்வச்சங்கநிதியமும்பொருந்தியாங்குக்
கதுவெழிறகண்டம்போற்றிகணவனஞ்சருந்திறுலுஞ்
சதுமுகன்முனோர்வீந்தாலுந்தழையுமங்கலநாண்போற்றி. (௪௯)

மூலையெனுங்குன்றமேலான்முளைத்தெழுபசுவேயென்னக்
கலையொருபுறத்திற்போர்த்துக்கவினபொழிதருதோள்போற்றி
தலையமையனையகுன்றஞ்சார்ந்துதித்தனவேயென்ன
விலையில்பன்மணிகால்யாத்துமிளிர்தொடியாதிபோற்றி. (௫0)

சிவபிரன்றேடநீஇவெள்வளையொலிசிறப்பச்செய்யு
மவமில்யாழ்த்தண்டமேயென்றறைதருமுன்கைபோற்றி
குவலயமாதிகாணுங்குறியிலாக்கஃதமைத்த
நவவளைகடகஞ்செம்பொனயர்தருடகங்கள்போற்றி. (௫௧)

நரம்பெலும்புரோமந்தோன்றுகலங்கிளர்புறங்கைபோற்றி
நிரம்புவமேயங்காநதளெனநிலவகங்கைபோற்றி
பரம்புநீர்க்களிறுவட்கும்பலவிரல்போற்றிகிள்ளை
வரம்பெய்மூக்குகிர்கள்போற்றிமாமணியாழிபோற்றி. (௫௨)

ஒருமலைகுழைத்தவீரனுரங்குழைதருதனந்துவிம்மு
மிருமுலைபோற்றிமேலிட்டெழில்செயுஞ்சுணங்குபோற்றி
பொருமலிற்புணர்வார்போற்றிபுணர்மணிக்கோவைபோறறி
யருமைசாலுண்மைஞானமாகியவருட்பால்போறறி. (௫௩)

புவனங்களனைத்துஞ்வைகபெயூறுத்தசிற்றுதரம்போற்றி
தவலின்றிமூவரைத்தநதமைதெரித்தாங்குமூன்று
கூறுமொன்றுமடிப்புப்போற்றிநாரத்திற்சுழியும்வட்கத்
திவள்கின்றவுந்திபோற்றிசெழுமயிரொழுங்குபோற்றி. (௫௪)

அறிவதற்கரியதாயவண்ணறனுண்மைபோல
வறிவதற்கரியதாகியமைநதறண்மருங்குல்போற்றி
செறிமணிக்கடலிற்றோற்றஞ்செய்யிளங்கதிர்சமழ்கச்
செறிதருசெம்பட்டோடுதிகழுமொட்டியாணம்போற்றி. (௫௫)

சாயலந்தோகைக்கச்சஞ்சற்றுங்கொள்ளாதபாம்பாய்
மேயபேரல்குல்போற்றிமேகலையாதிபோற்றி
யாயமென்பிடியின்கையுமரம்பையுமிணையொவ்வாமற்
றூயநற்கரபம்போன்றுதளும்பெழிற்குறங்குபோற்றி. (ருசு)

அலவனொள்வராலியாமையஞ்சியமுத்தாள்போற்றி
நலனுயர்சிறுதராசினயம்படுபரடுபோற்றி
பலவரிசனமுளைத்தபடியெனும்விரல்கள்போற்றி
கலவுவெண்மதிபத்தாகக்கடைந்தனநகங்கள்போற்றி. (ருஎ)

நல்லவருளம்போனாயேனுள்ளமுநயந்துநீங்காப்
பல்லவமருட்டாநின்றபங்கயப்பாதம்போற்றி
சொல்லருமறைகளென்னச்சூழ்ந்தபொற்சிலம்புதண்டை
வில்லமைபாதசாலம்விரலணியாதிபோற்றி. (ருஅ)

மயிலிளஞ்சாயல்போற்றிமானதவாவியூடு
பயிலிளவன்னமென்னும்படியியங்கியக்கம்போற்றி
வெயில்விரிகோடைநாளில்வெதும்பியபயிர்தழைக்கக்
குயின்முகிலெனப்பசந்தகோமளமேனிபோற்றி. (ருகூ)

பொருள்பெறக்கருதுவார்தம்புந்தியிற்சிவந்தாய்கல்வி
யருள்பெறச்சிந்திப்பார்தமகத்துறவிளர்த்தாய்தெவ்வ
ரிருடபமுயலுவார்தமிதயத்துக்கறுத்தாய்மூல
மருட்புங்காரோணத்துவயங்குமாதேவிபோற்றி. (சுo)

பரையாதிசத்தியாகிப்படைப்பாதிபுரிவாய்போற்றி
தரையாதியனைத்துமாகித்தவலறநிறைந்தாய்போற்றி
யுரையாதிமறைகட்கெட்டாவொருபெருமுதல்விபோற்றி
கரையாதிபுராணர்பாகக்காரோணவிமலைபோற்றி. (சுக)

பிறைமுடியவன்றாயானாய்ப்பின்பிறந்தவளுமானாய்
முறைமையின்மகளுமானாய்முயங்கிடுமனையுமானாய்
மறைமுதலனைத்துந்தேறுவளங்கெழுசெல்விபோற்றி
கறைத்தபுதிருக்காரோணக்கருந்தடங்கண்ணாய்போற்றி. (சுஉ)

என்றுரைத்துருகிக்கண்ணீரிழிதரத்தாழ்ந்துதாழ்ந்து
சென்றுதன்னிருக்கைமேவிச்சிந்தையிற்குறித்திருப்பா
ளொன்றுபன்னாளிவ்வாறேபூசனையுஞற்றுவாள்பா
னன்றுபேரருள்சுரந்தாணங்குலதெய்வமானாள். (சுங)

அவாமுதலறுத்துளார்க்கேயமைதருந்தடங்கணம்மை
தவாவருளொருங்குபெற்றுள்சறுவபுட்கரணிப்பாங்க
ருவாமதியுடுக்கணத்தோடுலாவியகாட்சிபோலோர்
இவாவிருளையர்தம்மோடுமுலாவினள்சேடன்செல்வி. (சுச)

படுகடனவெட்டோன்றும்பரிதிதன்குலத்துதித்தோன்
வடுவறுகலைகளெல்லாமயக்கறத்தெளிந்தவல்லா
னுடுபதிக்குடையினானுமுட்குறும்வனப்பின்மிக்கான்
றொடுகழற்காலான்சாலிசுகனெனுநாமவேந்தன். (௬௫)

மேயகாரோணம்புக்குவிண்ணவர்தீர்த்தமாடிப்
பாயகாரோணநாதன்பங்கயப்பாதம்போற்றி
நேயமார்துணைவரோடுநிலவியசருவதீர்த்தத்
தாயவநன்கரையைநாடியடைந்தனனங்குகண்டான். (௬௬)

காண்டலுமுலையோர்மூன்றுட்கரந்ததுநடுவணுள்ள
தாண்டகையிளையன்மண்மேலாயகந்தருவன்கொல்லோ
மூண்டவிற்காமன்கொல்லோமுதிரொழிற்குமரன்கொல்லோ
வீண்டடைந்தவன்யாரொன்றுவேந்திழைதிகைத்துநின்றாள். (௬௭)

முலையொன்றுமறையக்கண்டமுற்றிழைமடவார்யாருந்
தலையொனறுபெருமைவாய்ந்ததடாதகைபோன்றாளின்ன
ணிலையொன்றுமறியேமென்றுநெடிதிறும்பூதுமேவிக்
கலையொன்றுமுதல்விபூசைப்பயனுளங்கருதிநின்றார். (௬௮)

தந்தீதியாகாயவாணிசாற்றியபடியனைத்து
முந்தைநாளுரைத்தவாறுமுலையொன்றுமறைந்தவாறு
நிந்தையில்வனப்புவாய்ந்தபுரவலனிற்குமாறுஞ்
சிந்தையினுணர்ந்தாணாணஞ்செறிதரநங்கைநின்றாள். (௬௯)

மருவலருடலம்போழ்ந்தவார்குடர்மாலைசூடி
வெருவரக்கொழுவோடுருள்விடக்குவாய்குதட்டிப்பின்னர்
பெருகுநெய்த்தோருமாந்திப்பெரும்பசியடங்குறாமே
யிருகடைவாயுநக்குமெரிதவழிலைவேல்வேந்தும். (௭௦)

விதிகடைக்கூட்டலாலேமிளிர்தருபொலங்கொம்பொன்று
மதியமொன்றுறமூன்றாங்கிமழைமுகில்பின்னொன்றேந்திப்
பொதிசுவையமுதகும்பம்பொலிதரவிரண்டுகொண்டு
துதிசெயநின்றதென்னநிற்குந்தோகையைக்கண்ணுற்றான். (௭௧)

காதலங்கடலுண்டாக்குங்காரிகைபாதந்தோய
வாதலங்கமையுமாநோன்பாற்றியதரலவேந்தன்
பாதலங்கொல்லோமேலாப்பகர்தலங்கொல்லோவிந்தப்
பூதலங்கொல்லோவென்றுப்புந்தியுளையங்கொண்டான். (௭௨)

அணிமலர்வாடிற்றில்லைகண்ணிமையாடிற்றில்லை
மணிமுகமதியகத்துவருவெயர்கூடிற்றில்லை
துணிவிலிவ்வேதுவாலித்தவமகளல்லளென்று
கணிபுனைதடந்தோளண்ணல்கருத்துறத்தெளிந்தானன்றே. (௭௩)

இறையவன்முகத்துநாட்டமிரண்டனுளொன்றுவெப்ப
நிறைதரச்செயுமற்றொன்றுதட்புமேநிகழ்த்தாநிற்கு
மறைவிழியிரண்டுங்கூடியன்னவையியற்றுமென்று
குறையறுகாதல்பொங்கக்குறிப்பறிந்தனன்கோமானே. (எச)

இறையிவைமதிக்குங்காலையெழுந்தவெங்காமவேட்கைப்
பொறையுடையவளாயீங்குப்புகுந்தமைதந்தைக்கோத
நறைமலர்க்குழலாரோடுநாகர்கோன்மகண்மறைந்தாண்
மறைத்துமதிமாழாந்துமன்னனுமிருக்கைபுக்கான். (எரு)

துங்கமிருந்தவொருசாலீசுகனென்பவனங்குலத்துதித்தான்
சங்கநிகருங்களத்தொருபெண்டநந்தகாமந்தலைக்கொண்டா
னங்கமுழுதும்வெப்படைவானதுகாணேனென்றகல்வான்போற்
பங்கமருவுமேல்கடற்போய்ப்படிந்தான்பரியேழுடைத்தேரோன். (எசு)

பரந்தகாமத்தழற்கடலுட்படிந்துவருந்திவாழ்வதினுஞ்
சுரந்தகொடுநீர்ப்பெருங்கடலுட்டோய்ந்துவாழ்தலமையுமென
நிரந்தசுடுவெந்தழலெழுப்பிநோமுழுகிக்காட்டல்பொருஉங்
கரந்தவெதுப்பினினன்செவ்வானெழுப்பிக்கடுகப்புகுந்ததே. (எஎ)

கொழுநர்பிரிவோராறுளதுகுறித்தபோதுமனங்கலங்கும்
வழுவில்குலமங்கையர்மனமும்வண்டாமரைப்பூக்களுமொத்த
பழுதிலவர்தங்குழலவிழ்ந்துபடியிற்படிந்துகிடப்பதெனக்
கழுதுமுழங்குமிருட்டிரண்மண்கருமபொன்னிறமென்றிடத்தோய்ந்த. ()

பட்டநிறைபுள்ளொலியடங்கப்பள்ளிக்கணக்கர்வாயடங்கத்
தொட்டதொழிலிற்குறைகிடப்பதொக்கபறவைகுடம்பைபுக
விட்டமருவுபிணைதழுவியெல்லாவிலங்குஞ்சேக்கைபுகப்
பெட்டமதவேடணந்தாருட்பிறங்கிப்புகவல்லிறுத்தன்றே. (எகூ)

செந்தாமரைகண்முகமலரத்தேரிற்றோன்றுஞ்செங்கதிரை
நந்தாமேலைக்கடலுரகநடுங்கப்பிடித்துவிழுங்குதலு
மந்தாரணியினுயிரனைத்துமந்தகாரப்புனல்படிந்த
சந்தாபக்கார்கோட்குளித்தாஞ்சாலீசுகனென்றிடுமிறைவன். (அ௦)

கூகைகளிப்பக்கொடிகவலக்கூட்டங்குலைதலாற்சிறிது
மோகைதுளும்பாகேமிப்புளுணவுகருதியுழிதரமிக்
காகையமைந்தவிருளிரியலாங்காங்கெடுத்தார்பல்விளக்கம்
வாகையனையனுவளகத்தமளிசேர்ந்துளமாழாந்துழைப்பான். (அக)

சறுவதீர்த்தத்தடங்கரையிற்சார்ந்தகாலையிளநிலவின்
முறுவல்பூத்தபொற்கொம்புமுன்னின்றொளித்ததெங்கென்னு
மறுவில்காட்சியுற்றுடனேமறைந்துபோயகாரணத்தாற்
பெறுவதொன்றிலொருமின்னற்கொடியோவென்றுபேசுமால். (அஉ)

பொன்னங்கொடிபோலெதிர்நின்றுபோனுனாம்பாற்றுணைக்கறலென்
னுன்னம்பரந்துபுவனமெலாமூற்றியதுவேறிலையென்று
மன்னம்பொருவுநடையார்மெய்யமைந்தவொளிகண்டுளங்கூசி
யென்னங்குலத்தமுதன்மறைந்ததியல்பாய்மறைந்ததிலையென்னும். (௮௩)

முத்தம்பொருவுமுறுவலெனுமுறுவல்பொருவுமுத்தமெனும்
வித்தம்பொருவுமேனியெனுமேனிபொருவும்வித்தமெனு
மத்தம்பொருவுங்காந்தளெனுங்காந்தள்பொருவுமத்தமென்றன்
சித்தம்பொருவுமருங்குலெனுமருங்குல்பொருஉமென்சித்தமெனும். (௮௪)

கூற்றமிரண்டுண்டெனில்விழிக்குக்கூறலாகுமுவமையெனு
மாற்றமுணரோமானுலும்வடித்ததேனினினிக்குமெனு
நாற்றங்கமழுந்திருமேனிநலத்தையாவர்புகழ்வரெனு
மேற்றமெனக்குமுண்டாகுமினியோர்காற்கண்ணுறினென்னும். (௮௫)

ஒழியாவமுதகடமிரண்டுமுற்றூவுய்யலாமென்னுங்
கழியாவெப்பமிரண்டாயகதலிவருடக்கழியுமெனும்
பழியாவெனதுவிறன்மடங்கல்பாரிற்றெருமாறலென்னு
மழியாவாசைநோய்க்குமருந்தகிலபுவனத்தினுமிலையால். (௮௬)

என்றுபிதற்றும்பொழுதாழியினையுமோதைசெவிமடுத்தான்
கன்றுகனன்றேய்சலாகையிருகாதுட்புகுத்தாலெவனொன்பா
னன்றுமுனிவன்குடிக்கவிறலழிந்தாயமரர்கலக்குதலால்
வென்றுமினிரும்பொருளனைத்துமிழந்தும்வீணேயிரைகின்றாய். (௮௭)

நின்னையமைத்தோரொங்கள்குலநிருபரதுவும்போதாது
பின்னையளவாப்புனிதமுறப்பெருவானதியைமண்ணிழித்துக்
கொன்னைமருவக்கலப்பித்தார்கூறுமிவையுட்குறியாயா
யென்னைவருத்தியென்பெறுவாயென்றுபெருவாரியைமுனிந்தான். (௮௮)

ஆயபொழுதுசந்தனக்காட்டணைந்துபொதியாசலநின்று
மேயகுளிர்வாவியினறும்பூவினைதோய்ந்தெழுந்துகள்ளுண்டு
சாயவருவார்திறமெல்லனதடஞ்சாளரம்புகுலவியது
பாயவிளங்காலதுகண்டுபதைத்தானின்னபகருவான். (௮௯)

கொல்லவெழுவெம்புலிபோன்றகொடியமந்தமாருதமே
நல்லதமிழினுடன்பிறந்தாய்நகண்ணுட்டஞ்சற்றுமிலாய்
சொல்லவினியவழுதிகுநீடுந்தோற்றமுடையதானும்
வல்லவிடங்கொள்ளரதொழிதலுண்டோநின்னைவழங்கலெவன். (௯0)

உற்றபொதியவரையென்னுமொருபாம்புயிர்த்தவெவ்வுயிர்ப்பிற்
செற்றமந்தமாருதமேசெறிந்தசாந்தமுனிவர்குழாம்
பற்றவமர்ந்துமருவிடத்துப்பயின்றுஞ்சார்தஞ்சிறிதுமிலாய்
பொற்றாருநீர்க்கிடந்தநீலுங்கிடையுளிரம்பொருந்தாதே. (௯௧)

இந்தவண்ணஞ்சிறுகாலோடெதிர்ந்துசினந்துபிணங்குங்காற்
சந்தநறியதேமாவின்றழையிற்குயிலோர்காற்கூவ
வந்தமுழக்கங்குயின்முழக்கினரசர்கோனஞ்செவிவெதுப்ப
வெந்தவிரும்புபுண்ணுழைந்தவிதம்போற்கனன்றுவிளம்புவான். (௧௨)

பூவிற்பொலியுந்திருமேனிபொன்னிற்பொலிவாண்மொழிக்குடைந்த
மாவிற்கரந்தகருங்குயிலேவாளாவின்றுவாய்திறப்பாய்
நாவிற்சிறந்தவல்லாமுதலொருமாத்திரைநாட்டாதுனைச்சொல்
பாவிற்கியையக்களகண்டமென்றார்கொடுமையார்த்தன்றே. (௧௩)

இனையவிதமாங்குயிலைவெறுத்தினையுங்காலைநல்லாரு
ளனையதடத்துளரக்காம்பலரும்பரனைத்துமுறுக்குடைய
நினையவரியவின்மீனுநிரம்புமகிழ்ச்சிதலைக்கொள்ளத்
துனையவொருபுள்ளுணன்முயலத்தூயமதியந்தோன்றியதால். (௧௪)

தூயதேவதீர்த்தத்துத்தொக்கபலவொண்மலர்நாப்ப
ணாயவிண்ணோர்வாயூறவருளினெழுந்தசுதைக்கடம்போற்
பாயநெடியவானத்திற்பரந்துசெறிதாரகைநாப்பண்
மேயசகோரம்வாயூறவெழுந்ததொருவெண்டிங்களே. (௧௫)

ஊழிமுதல்வன்வெள்ளியநீறொருங்குபரந்தகாட்சியெனத்
தாழியமைந்தபால்பொங்கிவழியாநின்றதன்மையென
வாழியுதித்தவெண்டிங்கட்கிரணம்பரந்துவழிந்தனவா
லாழியரசனதுகண்டானழன்றுபுகலத்தொடங்கினான், (௧௬)

நல்லாவுதித்தபாற்கடலுணயக்குமமுதத்தொடுபிறந்தாய்
சொல்லாநின்றவமரர்வயிற்றெழுந்தபசியுந்தொலைத்திடுவாய்
பொல்லாவிருளின்பொம்மலறப்பொலியுங்கிரணம்வீசிடுவா
யெல்லாநயமுமுடையாய்மற்றென்னைவருத்தலெவன்றிங்காள். (௧௭)

கஞ்சமனைத்துங்குவித்திடுவாய்கழுநீரனைத்தும்விரித்திடுவாய்
நஞ்சநிகர்ப்பாய்தணந்தாருக்கமுதனையப்பாய்மணந்தார்க்குத்
தஞ்சமனையவருட்சிலைவெறுப்பாயசிலைச்சார்குவாய்
மஞ்சநிவினமையினன்றோவளர்வாய்தேய்வாயாயினாய். (௧௮)

மறைமுற்றுணர்ந்துசிருட்டிபுரிமராளமுயன்றுங்காணரிய
நிறைவிற்பொலியுமுடியமர்வாயகிலத்தினுயர்ந்தோர்ச்சார்ந்தவருங்
குறைவிற்படுமோர்தொழிலியற்றார்குறியொப்புரவாற்றுவருணர்ந்தும்.
கறையிற்றவிராவிஃதியற்றல்கடனோமடனோவாமதியே. (௧௯)

என்றுமதிலையமுனிதருகாலெழுந்துகருப்புச்சிலைகோட்டித்
துன்றுசுருப்புநாண்பூட்டித்தோலாக்குணத்தினொலிகாட்டி
யன்றுமலர்கள்பலகூட்டியனங்கனியுய்த்திடுவதுகண்
டின்றுசெயலின்றிவன்செயலுக்கென்றுவெதும்பியிவையிசைப்பான். ()

வேறு.

ஒலிகடலுலகின்கண்ணேயொள்ளறிவுடையார்தம்மின்
வலியர்மேற்செல்லுங்காற்றுமாவதுமனத்தினெண்ணி
மெலியர்மேற்செல்லார்முக்கண்விமலன்மேற்செல்லாதென்பாற்
பொலிதரப்புகுந்தாய்வேணின்வீரந்தான்புகலற்பாற்றே. (௧௦௧)

கழைகுழைந்தளிநாண்பூட்டிக்கணையெனச்சிலபூக்கூட்டி
விழைசெருப்புரிவாய்வெற்பும்வெரீஇடும்வலியான்மிக்க
குழைசிலைவாங்கிப்பல்லகொடுங்கணைதொடுக்கவல்லே
னுழையருவமைந்தாயீதுநோக்கியோறுவறிவேனோ. (௧௦௨)

இருந்தவமுஞற்றியின்றவிருமுதுகுரவர்மாட்டும்
பொருந்தவெம்பகழிதூண்டிப்புல்லியகாமமேற்றும்
பெருந்தகைநினக்கியாஞர்பேரமர்புரிவார்தம்முட்
டிருந்தநன்கெதிருறுருஞ்சீர்மையிற்சிறந்தாரன்றே. (௧௦௩)

ஒருகவியெய்யுங்காலத்தொளித்துநின்றெய்தானுந்தை
வருபழிநோக்காய்நீயுமறைந்துநின்றென்னையெய்வாய்
பொருதொழில்வனமாவெய்யும்புன்றொழிற்கிராதன்போன்று
யிருநிலத்துனையுந்தேவனென்மருஞ்சிறந்துளாரோ. (௧௦௪)

என்றுவெய்துயிர்க்குங்காலையிலங்குநங்குலத்துதித்தான்
கன்றுதலொழிப்பேனென்றுகடுகவந்தெழுவான்போல
வொன்றுபல்விளக்கமெல்லாமொளியிழந்தகலக்கீழைக்
குன்றினின்றுதயஞ்செய்தான்குலவெழுபரித்தேரானே. (௧௦௫)

பரசிவந்தோன்றலோடும்படுமலவிருள்கெட்டாங்கு
வரமிகுபரிதிதோன்றமாய்ந்ததாலிருளின்பொம்மல்
விரவுபுன்றெய்வமெல்லாம்வீறுதேய்ந்தொளித்தன்மானக்
கரவறப்பயில்வீபத்தாதியசுடர்கழிந்தவன்றே. (௧௦௬)

அருமறையொலியெழுந்தவந்தணரிருக்கையெங்குங்
கருவிலங்கொலியெழுந்ததருச்செறிககனமெங்கு
மொருவில்புள்ளொலியெழுந்தவோடைநீர்வாவியெங்கும்
பெருகுசங்கொலியெழுந்தபிரானமர்தளிகளெங்கும். (௧௦௭)

அரவின்வாய்வீடுபெற்றவண்ணலம்பரிதிபோல
விரவின்வாய்வீடுபெற்றவிலங்கிலையலங்கல்வேலான்
பரவின்வாய்தேவதீர்த்தம்புகுந்தினிதாடியாரும்
பரவின்வாய்திருக்காரோணப்பெருந்தளிபண்பிற்புக்கான். (௧௦௮)

கருந்தடங்கண்ணியோ[illegible]லந்தினிதமரநின்ற
பெருந்தகைபாதம்போற்றிப்பேணுபுநின்றுஞகத்
திருந்துமுன்னிற்கின்றனைத்தெய்வநாயகனேர்நோக்கி
வருந்தனஞ்சவுந்தரப்பேர்மாலிடஞ்சேறியென்றான. (௧௦௯

தனையடைந்தவனாயாருந்தாழ்தரவுயர்ந்தாநின்ற
தனைநிகர்கருணைமூர்த்திசாற்றியதுணர்ந்துகஞ்சா
தனைபுணாமார்பனுயசவுந்தரமாலைச்சார்ந்தான்
றனையரும்புகழ்சால்சாலீசுகனெனுந்தனையாளவேந்தன். (கக0)

மந்தாம்பொருவுதோளான்மாமணிக்கோயின்மேவிச்
சுந்தரராசமாலைத்தொழுதெதிர்நிற்றலோடு
மந்தரநாடருணவமுதமுன்னளித்ததெய்வக்
சுந்தரமேனிமாலக்காவலன்முன்னாதோன்றி. (ககக)

புரவலவஞ்சேலாதிபுராணாகருவடபாலுள்ள
தானுடைக்காரிகாப்புதோங்கியதருமருபத்
திரமருவியதலாகருரோசதநிற்றிகழ்வதென்று
மாவகாட்டெளிதுசெல்லறகாயதோரபிலமொன்றம்மா. (கக௨)

ஆயவப்பிலத்தூடேகினாவகாட்டடைவையாங்கு
மேயபனகுகாவேந்தனமேதகுமுகமனசெய்து
தாயதன்மகளைமனறநுனைநதுசெய்தளிப்பனென்றான்
மாயனைவணங்கியாங்குவிடைகொணடானவளாறகோமான். (கக௩)

உறறுயிலமாநதமூர்த்தியருளியவாறேசென்று
மறிமழுகநாகைகாரோணவளளலார்வடதிசைகட்
செறியனாகருரோசதெலைசிவணிபபிலததுட்புக்கான
குறிகெழுநாகாநாடுகுறுகினனரசர்கோமான. (கக௪)

இடனிலையினனநாகவிறைமூலையொனறுகாணு
டவனிவெனனகண்டாடநதையைவணங்கியைய
சிவனமாகாரோணததுத்திசழ்பெருஞ்சறுவதீரத்தத்
தவனிவெனனதடதேறனைடைநதனெனருவனறங்கே. (கக௫)

அனனவநகாணடலோடுமணிமுலையொனறுகாடுனை
ஙினனதுகினபாறகூறவெய்திடுனெனனலோடும்
புனனகவேநதனுளளம்பணபுறமிகமகிழ்நது
நனனலததவனேநிறகுநாயகனுவனெனறான். (கக௬)

அநநனனகரத்துள்ளாரவைவருமறியக்கூறிச்
சநதநனமணியாறபொன்னுறறகவுலங்காரஞ்செய்து
கநதமெனறெடையன்மார்பக்காவலன்வரவுநோக்கி
நநதவிழுவகைபூப்பவிருநதனனுகர்வேநதன். (கக௭)

ஆயவபபொழுதுசாலீசுகனவனெதிரேசென்[illegible]
டாயவொறபிவனேயந்தப்பார்த்திபனைத்தோந்தியகு
மேயநீயாவனவந்தகருமமென்னிளம்புகென்று
னேயமாராவவேந்தனாபதிகிழ்த்தலுற்றான். (கக௮)

ஏற்றமாரொருமார்த்தாண்டனியலமைபெருங்குலத்திற்
றோற்றமேவினன்யான்சாலீசுகனெனுநாமமுள்ளே
னூற்றமின்பாங்கரொன்றுகருதிவந்தடைந்தேனென்றான்
மாற்றமொன்றுரையான்சேடன்மகிழ்ச்சியிற்றிளைப்புற்றானே. (௧௧௯)

ஒருமுலைமறையக்காட்சியுதவினானிவனேகொல்லென்
றருமகடன்னைநோக்கவனையளுமினையனேநின்
மருமகனெனச்சொல்லாதுசொறறிடமகிழ்ச்சிகூர்ந்த
பொருவருநாகர்கோமான்யாவையும்பொருந்தக்கூட்டி. (௧௨0)

மணமகன்றனக்கெண்ணில்லாமணிப்பணியெடுத்துச்சூட்டிப்
பணவரவல்குன்மாதர்பவளவாய்வாழ்த்துமல்கத்
தூணவருமியமுழங்கத்தவாதமங்கலங்கூத்தாடக்
குணமுயர்மகளையந்தக்கொற்றவற்குதவினானே. (௧௨௧)

மேவருமகிழ்ச்சிபொங்கவேநெடுங்கண்ணாளோடு
பூவருமுவளகத்துப்புகுந்துசந்தாபந்திரத்
தாவரும்புகழ்சால்வேந்தனல்குலந்தடத்துண்மூழ்கித்
தேவருநறுமுறுக்கச்செறிந்தபேரின்பந்துய்த்தான். (௧௨௨)

தன்னரசுரிமையெல்லாமருமகன்றனக்கேயாக்கிப்
பன்னகவேந்தன்வல்லேபாதலநின்றுபோந்து
மன்னலநனிவிராயமருத்துவிருதியைச்சார்ந்து
தொன்னலமமைந்தமுக்கட்சோதியையாங்குப்போற்றி. (௧௨௩)

முந்துதான்பதிட்டைசெய்தவிலிங்கத்தின்முன்புமேவி
நந்துபேரன்பிறபோற்றிநாடுமவ்விலிங்கமேல்பா
லூர்ந்துமோர்தீர்த்தந்தொட்டுமற்றதினுவந்துமூழ்கி
* வந்துதேருணவாக்கொள்வோன்வைகலும்பூசிப்பானால். (௧௨௪)

குடந்தையேயாதியாகக்குறிக்கொளுந்தலங்களுன்றுந்
தடந்தைதாமரைமுன்னாயதண்மலராதிகொண்டு
விடந்தவாளெயிற்றுநாகர்வேந்தனோர்காலநான்கு
மடந்தையோர்பாகத்தானைப்பூசனைவழாதுசெய்வான். (௧௨௫)

குடமதியபரபக்ஷசதுர்த்தசிகூடுநாளி
னடநவில்பரனைப்பூசைசெய்தற்குநயந்தான்போல
மடனிருகதிரோன்மேலைவார்கடற்புனல்படிந்தான்
விடமமொயிற்றுநாகர்வேந்தனுநன்னீர்தோய்ந்தான். (௧௨௬)

நிலவியமுதல்யாமத்துநிறைமலராதிகொண்டு
கலவியவன்பர்நெஞ்சங்கழன்றிடாக்கருணைவாழ்வை
யுலவியநயற்கணாளையொருபுறங்கொண்டகோவைக்
குலவியகுடந்தைக்கீழைக்கோட்டத்திற்பூசித்தானே. (௧௨௭)

---

* வந்து - காற்று.

அடுத்தவோரிரண்டாம்யாமத்தமையுபகரணங்கொண்டு
மடுத்தபேரன்புபொங்கமலவிருளறுக்குந்தெவ்வைக்
கெடுத்தவைம்பொறியார்வாழ்வைக்கேடிலாமுதலைவிண்ணங்
கடுத்தபல்வளஞ்சால்சண்பகவனத்திறபூசித்தானே. (கஉஅ)

உறவருமூன்றாம்யாமத்துபகரணங்கைக்கொண்டு
மறவருமன்பினெங்கண்மாசிலாமணியைப்பாசந்
தெறவருமுதலைமேலாஞ்சின்மயபபொருளைவானத்
தறவரும்புகழ்திருப்பாம்புரத்திடையருச்சித்தானே. (கஉகூ)

எண்ணியநாலாம்யாமத்திலையபலபொருளுங்கொண்டு
தண்ணியநேயம்பொங்கச்சார்ந்தவர்தமைவாழ்விக்கும்
புண்ணியமுதலைமேலாம்பூரணப்பொருளையாருங்
கண்ணியவரங்கனல்குங்காரோணத்தருச்சித்தானே,, (கஙo)

பூசையிவ்வாறுசெய்யும்புண்ணியச்சேடன்காண
வாசைகொளவாயெம்பெம்மானவ்விலிங்கத்தினின்று
மோசைகொள்கருவியைந்துமுயர்ந்துவானகத்தியமப
லிசையுமொருபான்மேவவிடபவாகனனாய்த்தோன்றி. (கஙக)

கந்தருநாப்பண்மேவக்கயிலைமால்வரையோடெய்து
மந்தமில்காட்சியீதென்றமரர்பூமாரிதூர்ப்பப்
பந்தமின்முனிவர்பெய்கட்பனிபுனலவற்றையீர்ப்ப
வந்தமிலடியர்மறமேறரகரகரவெனவார்ப்ப. (கஙஉ)

நந்திமுற்கணங்களெல்லாநகுகரந்தலைமேறகூப்பி
முந்திநின்றிறைஞ்சலசெய்யமுடியிசைப்பிறைவிளங்க
வந்தியர்புகழ்நதுதிற்பயாமறையனேதகுமவாழ்த்தத்
தந்தியாழ்வல்லோர்பாடத்தவப்பெருங்காட்சிதந்தான். (கஙங)

காட்சிதந்தருளலோடுங்கட்செவிநாகர்கோமான்
மீட்சியினேயம்பொங்கவிரைநதெழுந்துவநதுசூழ்ந்து
மாட்சிபிறபணிநதெழுந்துவள்ளறனெதிரோநின்று
ஞாட்சியிற்சிறநதவம்மான்வேண்டுவவறைதியென்றான் (கஙச)

கன்றுமான்மழுக்கையாய்நின்காட்சியின்விசேடமாய
தொன்றுமினறேனும்வேட்கையுனக்குவலலையாவென்னி
லென்றுமிந்நகரமென்பேரினிதுறப்பூணல்வேண்டு
நன்றுபஃறிருவுநாட்குநாளுயர்ந்திடவும்வேண்டும். (கஙரு)

இந்தமாவிலிங்கநீங்காதென்றுநீபொலிதல்வேண்டுஞ்
சந்தவிவ்விலிங்கத்தோடுதீர்த்தமுமென்பேர்தாங்கிப்
பந்தமதொழித்தலோடுவேண்டுவபயத்தல்வேண்டு
மந்தமில்புனல்யாரொன்றீங்கணைந்தாழிகலத்தல்வேண்டும். கஙசா)

இத்துணைவரங்களன்றியின்னுமொன்றிரப்பதுண்டான்
முத்துணைமுறுவல்பாகவுடம்பொடுமுயங்கும்வாழ்வி
லத்துணையாசையில்லையடியனேற்கென்றுமானந்
தத்துணையாகநின்பொற்றாட்கலப்புறுத்தல்வேண்டும். (கருஎ)

இவையருளென்றுதாழவிமையவர்மயனைக்கொண்டு
சிவையொருபாகத்தம்மான்றிருநகர்பெரிதாக்கண்டு
குவைமணிசெம்பொனாதிப்பொருளெலாங்குவியச்செய்து
நவையறயாருநாகநகரெனப்புகல்கவென்று. (கருஅ)

கண்மலர்ப்பொழில்சூழ்நாகைக்காரோணநகர்க்குமேல்பா
லெண்மலரளவைகூறினிரண்டியோசனையினின்றும்
விண்மலர்நதியுநாணவிளங்கொருகுடிஞைதோற்றித்
தண்மலர்திருக்காவேரிக்காதியிற்சமைத்தவாற்றால். (கருகூ)

விருத்தகாவேரியென்றுவிளங்கவோர்நாமஞ்சாற்றித்
திருத்தவாதியிற்சுருக்கிவரவரவிரியச்செய்து
மருத்தபூம்பொழில்சூழாரூர்தடுதென்றிசைவழியியக்கிப்
பொருத்தமாம்புணரிமேவிப்புனிதஞ்செய்திடச்செய்தானே. (கசo)

மற்றவையனைத்துநல்கிமறைந்தனனிறைந்தசோதி
பற்றறுநாகவேந்தன்பரனடிகலந்துவாழ்ந்தான்
கொற்றவிண்ணவர்களெல்லாங்குவிமலர்மாரிதூர்த்தா
ரற்றமிலனையதானமடுத்தவாக்கனைத்துநல்கும். (கசக)

பன்னகவேந்தன்பெற்றபண்புசால்பேறுநோக்கி
நன்னர்வாசுகியடைந்துநாகதீர்த்தத்தின்மூழ்கிப்
பொன்னவிரதற்குக்கீழ்பாற்சிவலிங்கநிறுவிப்போற்றித
தன்னமர்நாமஞ்சூட்டிச்சாலோகமெய்திவாழ்ந்தான். (கசஉ)

கறையணச்சங்கபாலனத்தடங்கலந்துமூழ்கி
நிறையுமத்தடத்துமேல்பாற்சிவலிங்கநிறுவிப்போற்றி
முறைமையிற்றன்பேர்நாட்டிவாசுகிமுயன்றுபெற்ற
மறைதவில்பேறுபெற்றுவாய்ந்தினிதிருந்தான்மன்றே. (கசங)

குளிகனென்பவனுமந்நீர்க்குறுகுபுவிதியினாடி
யளிகிளரனையதீர்த்தத்தமைவடகரையின்கண்ணே
தெளிதரத்தன்பேராலோர்சிவக்குறிநிறுவிப்போற்றி
யிளிவறச்சங்கபாலன்பெற்றபேறெய்திவாழ்ந்தான். (கசச)

இன்னுமத்தீர்த்தமூழ்கியிருஞ்சிவக்குறிபூசித்து
மன்னும்வண்சிவசாலோகமுதலியமருவிவாழ்ந்த
பன்னுபன்னகங்கள்பல்லபாரினும்விசும்பின்கண்ணுந
தன்னுபல்லோர்கண்மூழ்கித்துயரொழிந்தின்புற்றாரால். (கசரு)

நாகமாநகரநண்ணிநாகதீர்த்தத்தின்மூழ்கி
நாகநாதனைக்கண்டேத்துநல்லவராணூர்மண்மே
லாகவாய்விடஞ்செய்தன்பநண்ணிடார்சிறிதுமென்று
நாகநாட்டவர்கொண்டாடநலம்பொலிந்தமர்வரன்றே. (௬௬)

பணியரசிறைஞ்சநாலாம்பகமினிதருளிச்செய்த
மணிமருள்கண்டநாகநாதர்தமவரவுசொற்றாம்
கணிதமிலருளான்மிக்குக்கலந்தவாகனிபஞ்செய்யு
மணிவிளர்கார்முகேசர்வரவினியறைவாமன்றே. (௬௭)

நாகநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௧௧ இ - திருவிருத்தம் - ௧௨௬௭.

## கார்முகேசப்படலம்.

சாதுநந்திதாடொழாக், கோதிலாகுமாரனரு
மோதுகார்முகேசன்சீ, ரோதுகெனவோதுவான். (௧)

மிக்கமாதவச்சம, தக்கினிப்பெயரினன்
றக்ககாதன்மனைவிசொல, லிக்கவாவிரேணுகை. (௨)

இருவருமிருவர்க்கும், பிருகுவார்த்தைபேணிய
கருகுமேனிமாயவ, னுருகுமைந்தனாயினன். (௩)

பரசிராமனென்றபோ, லரசுமாறுமேவுநா
ளரசுகாதவீரியன், வரசுமாககமாற்றினன். (௪)

கற்புமேவிரேணுகை, பொற்புநேர்தெரிந்துகொண
டற்புநெஞ்சமைத்தனன், மறபுமேயமன்னவன். (௫)

அனையடன்னைநோககுமோர், வினையமுள்ளத்தெண்ணுபு
நனையுநீர்கொளுந்தடத், தினையுநெஞ்சனெய்தினன். (௬)

கூடுசாயைகொள்ளுநீ, ருடுதேர்னறவநினைறன்
பாடுசால்பெரும்பழி, வீடுதீரகதவெய்யனே. (௭)

அன்னசாயைநோககினு, ளின்னசாயைமேனியா
னென்னசாயலானெனுத, தன்னமுளாததுளளினள். (௮)

வந்ததிங்குநாடியே, பந்தமேதுமில்லவன்
மூந்தநீயிவளுயிர், சிந்தமாட்டுகெனறனன். (௯)

தந்தைசொறறலைக்கொடு, சிந்தைவந்துநேர்ந்தது
முந்தநாழ்முறையெனச், சிந்தைநொந்துசெயதனன். (௧௦)

வனிதைமாயமாய்த்தனு, மினியசெய்திலானெனுக
கனிசினத்துமன்னவன, முனிவனுவிபோககினன. (௧௧)

பெற்றதூயரிருவரு, மிற்றதன்மையெண்ணிநா
ளற்றமன்னன்மேற்பெருஞ், செற்றமேவினான்மகன். (௧௨)

விரசுபாவம்வீக்கவு, முரசுகண்படார்முன்றி
லரசெலாமழிக்கவும், பரசிராமனெண்ணினான். (௧௩)

நாணமேருப்பூட்டுதிண், டோணமாதிமேவுகா
ரோணவூரையுற்றன, னுணமேவகத்தினான். (௧௪)

பாவநாசம்பண்ணிடுந், தேவதீர்த்தந்தோய்ந்துபச்
சோவமோர்புறத்துமுக், கோவனோர்குறுகினான். (௧௫)

முனியுடம்புதன்னுடம், பினிதினேற்றுமண்ணருள்
கனிவிற்போற்றிக்கைதொழாத், தனியவன்றனக்கரோ. (௧௬)

நிருதியாசையிற்புகா, வொருவிருத்தகாவிரி
யருகினோர்சிவக்குறி, பெருகுமன்பிற்றுபித்தான். (௧௭)

அருகுநாற்சதுரத்தி, னொருதடமுண்டாக்குபு
மருமலர்முன்னாயகொண், டுருகியன்பிற்பூசிப்பான். (௧௮)

மழுவிராமனின்னணம், பழுதில்பூசைபண்ணுநாள்
வழுவில்கார்முகமொன்று, தொழுமர்நீருட்டோன்றிற்றே. (௧௯)

ஈதுதோன்றலண்ணற, னுதுபேரருளெனாக்
கோதுதீர்குணங்கெழு, சாதுவாளனெண்ணுழி. (௨௦)

அலிங்கமைந்ததென்களப், புலிங்கவாரழனுதற்
கலிங்கவாசையானுமவ், விலிங்கநின்றுதோன்றினான். (௨௧)

கண்டிராமன்கைதொழாத், தண்டபோற்றனைவிழா
மண்டுமோகையின்னெழாத், தொண்டுபூண்டுநின்றனன். (௨௨)

உற்றகாதலன்னையச், செற்றபாதகந்தவிர்த்
தற்றமேதுமில்லதோர், கொற்றமுங்கொடுத்தனன். (௨௩)

தோன்றுகார்முகம்மெடுத், தான்றுமன்னரார்குயி
ரோன்றுமாய்த்தியென்றுகண், மூன்றுளான்மறைந்தனன். (௨௪)

சொற்றவாறுகார்முகம், பெற்றகையனாயவன்
கொற்றமன்னரார்குயிர், முற்றமாய்த்துவாழ்ந்தனன். (௨௫)

மருவுகார்முகப்பெயர்ப், பொருவிலாததீர்த்தமும்
பெருஞ்சிவலிங்கமு, மொருவுறுமனுற்றன. (௨௬)

யர்த்தமேன்மைக்கார்முகத், தீர்த்தநதோய்ந்தெழுபவர்
பார்த்திகங்கிறும்புகா, வார்த்தபாதகங்களே. (௨௭)

அரியகார்முகேசன்றன், பிரியமாகப்போற்றுவார்
கரியமாலுமெய்தரும், பெரியபேறுபெறுவரே. (உஅ)

வந்தகார்முகேசர்சீர், நந்தநாமுரைத்தனஞ்
சுந்தரவிடங்கர்சீ, ருந்தகத்தெரித்துமால். (உகூ)

கார்முகேசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உ0 இ-திருவிருத்தம்-கஉகக.

## சுந்தரவிடங்கப்படலம்.

அந்திவெண்பிறைமிலைச்சியபெருமானருளினுகமமுழுதுணர்ந்த
நந்தியெம்பிரான்றிருவடிவணங்கிநலங்கெழுஞ் சனற்குமாரமாமுனிவன்
சுந்திதென்னையிலுயர்ந்தகாரோணக்கடிநகர்ப்பெருஞ்சுந்தரவிடங்கர்
புந்திசெய்யுநன்மான்மியமுணரப்புகலுவாயெனப்புகலுவதானன். (க)

ஆதியாகியசிருட்டியின்மாயோனழகிதாவொருமகப்பெறவேண்டிப்
பாதிமாமதிசூடியபரமன்பண்புசான்றமூர்த்தங்களுட்கரிசு
காதிநன்மகவளித்திடுசோமாக்கந்தமூர்த்தத்தையமரர்கம்மியனாற்
சோதிமேவுறப்புரிந்துபூசித்துச்சுந்தரந்திகழ்காமனைப்பெற்றான். (உ)

அன்னகாலையினவுணர்கள்பல்லோரமரர்நாட்டினைவளைந்தமராடப் [பு
பொன்னகர்க்கிறைவச்சிரமேந்திப்பொருதும்வெனறிலன்பாற்கடலடைந்
பன்னகத்திடைத்துயில்பவற்குணர்ந்தப்பைந்துழாய்த்தொடையனையனு
மெண்ணி, நன்னரந்தருமூர்த்தியைக்கொடுத்தன்னகரிற்பூசனைபுரியென
[விடுத்தான்.

அந்தமூர்த்தியைத்தன்னகரிருத்தியான்றபூசனைபுரிந்துபல்லவுணர் [மாக்
கிந்தவென்றனன்வலனெனுமவுணன்செயிர்த்தெழுந்தனன் றிகழுமச்சோ
கந்தநம்பிரான்றிருவருள்பெற்றுக்கதிர்க்குலத்திகன்முசுகுந்தற்கொண்டு
முந்தவென்றனன்மகிழ்ந்தம்மூர்த்தியையம்முசுகுநதன்கொளக்கொடுத்த
[னன்மகவான்.

மேயமூர்த்தியைமிகுபெருஞ்சிறப்பின் விமானத்தேற்றுபுமுசுகுந்தனென்
பான்,பாயவைவகையியங்களும் பிடிப்பாரொலாங்களிசிறநடக்கொடுவ
ந், நேயபல்வளப்பெருந்திருவாரூரினையிலாலயஞ்செய்துதாபித்து
நேயமிக்குறப்பூசனைபுரிந்துதிகழிலாதபேரின்பத்திற்றிளைத்தான். (ஙு)

அமைத்ததாகியசிருட்டியின்மிறையாருமுதற்றுவத்திரண்மலங்களைப்
பமைத்ததாகியவதிவொழிக்குமுயிர்கள்பலவுநன்கெடுத்தாளுதற்பொருட்ட
மமைத்தாகியகருணையின்மலர்மேல்வைகுவான்முதல்யாவையும்படைத்தா
னெடுத்தாகியவச்சிருட்டியினுமிலகமுன்புபோற்றென்றியமாயோன். ()

பொறியொடுங்கலப்புற்றுவாழ்நாளிற்புதல்வனின்மையைமனத்துறக் குறித்து, நெறிதரும்பிறங்கடையிலாவாழ்க்கைகீசவாழ்க்கையிலிழிந்ததெ ன்றிழித்துக், குறிகொணன்மகப்பெறுவதுகருதிக்கடுமொதவம்புரிந்துப ன்முனிவர், செறிதரும்பெருமைமிசத்தடைந்தான்செய்யதாமரைத்திருமங் கோடும். (எ)

அந்தமாவனத்தொருசிவகோசமன்புமேவுறப்பிரதிட்டைசெய்து
சந்தமாமலராதிகள்கொண்டுதவாமலாயிரமாண்டுபூசிக்க
நந்தமாரருட்கடலுளமிரங்கிநாடுமாயவன்விழியெதிர்சோமாக்
கந்தமூர்த்தத்திறகாட்சிதந்தருளக்கண்டுமாயவனொருங்கடிபணிந்தான்.()

பணிந்தமாயனைப்பரம்பரனோக்கிப் பார்ந்துபூரய்நறும்படலைமாரபுடையா ய், துணிந்தநின்கருத்தெவனுரையென்னத்தூயமான்மறுவதும்பணிநதெ ழுந்து, தணிந்தயோகியருளத்தொளியாயசம்புவேநினதருளினூற்புலவ ரணிந்தசெல்வமிக்குடையவனேனுயினுங்குறையொன்றுளதைய. (கூ)

அருளிலாப்பெருந்தவமுநின்னடிக்கணன்பிலாப்பெரும்பூசையும்போ லாம், † பொருளிலாமனைவாழ்க்கையெனநேருதிப்புனத்துழாயணிநாரண னிரப்பத், தெருளிலாமனத்தடைதராப்பெருமானனைதாகெனத்திருவுள ஞ்செய்தான், வெருள்லாமனத்துவப்படைந்தனனமால்விமலநாயகிசிறி துகண்சிவந்தாள். (க0)

முனைவலத்துயர்சக்கரப்படையாய்முக்கண்மூர்த்தியைவணங்கினையன்றி யெனைமதித்திலைவணங்கிலையதனாலெயதுமைமநதன் மறறவனெரிவிழியாற் கனைகடற்புவியிழிப்பரிருகிக்கழிகவென்றுரையாடுமன்றந்தா ணனைமலர்ப்பசுங்கடுக்கையானோடுகவின்றசொற்செவிப்புகுதலுநடுங்கி.()

யாதுசெய்குவதினியிதற்கந்தோவெழின்மகப்பயந்திகழ்ந்திடுவதினு மோதுமற்றஃதிலாதிருப்பதுவேயோகமுத்தமமாகுமாயிடினு மீதுசெய்தருள்பெறுவனென்றுள்ளதெணணிலச்சுவைள்மனைக்கடவிஎ். மாதுபாகன்முன்காட்டிதநதளித்தவஸ்வைமாருருத்தருகெனப்புகன்று

சொற்றவாறமைப்பெனனவெருற்றுதூயவிச்சுவகன்மனோரிடத்துக் கற்றகேள்வியர்சிலரொடுமமர்ந்துகரிசில்பன்மணிப டமொன்றமைத்து க், கொற்றமாருமப்பீடத்தின்மேலாற்கொண்றைமாலிகைப்பிரானுலகின்று ளற்றமேறுமில்கந்தரிம்மூவரமையுமாறுநன்காய்ந்தினிதமைப்பான். (கங)

குணகடற்றலையெழுமிளங்கதிருங்குறிக்கொணுச்சமழ்ப்புளக்கொடுவட்க த், தணவருங்கதிர்பரப்புபொன்மோலிசமைத்து மறறதுகதிரொன மருண் டே, யணவுசந்திரகலையெனப்பிறையுமமைத்துமற்றதனுருவடிவொத்து நணவமைந்திடுபுன்ல்மகளொருபாலுநேகண்கவர்வருந்திறனமைத்து. ()

தூயவாகமப்படியருச்சிக்கத்தொடங்கியோர்மலரொடுத்திடும்போதே மேயநின்கருத்தெவனுரையென்றுவெள்ளிதாஞ்சிறுமுறுவலுந்தோற்றி நேயவாய்மலர்ந்திடுவதுமானமிலவுகண்கவர்திருமுசமமைத்துப் [லால். பாயபேரிருள்சவட்டுவெங்கதிரோன்பறம்பிற் றேற்றமுமொடுக்க முமுற

† பொருள் - சநதி.

என்றுமுற்றலையில்லவாய்விளங்குமிரண்டுசெங்கதிர்படைத்தவிட்டன்ன
நன்றுசெம்மணிக்குண்டலமிரண்டியக்குமாறிருசெவியினும்பொருத்தி
யொன்றுநீண்முடியுறுபிறையமுதமொழுக்கமற்றதுமுழுக்கனன்மார்ப
நின்றுகீழிழிந்திடுவதுகடுப்பநிகரிலாவுபவீதமுமமைத்து. (௧௬)

தருமமாதியநான்குநன்களிக்கச்சமைந்தவேயெனத்தயங்குபொன்னுக[ல்
வருமையாமலர்த்தொருதிறத்தமைந்தவங்கைத்தாமரைநான்கினுமாண்பா
ப்ருவமங்கைபாலென்பதற்கியையப்பரசுவாயொருபரசுமொண்மானு
மருவுபேரருள்புரியபயமூநல்வரதமுங்கவின்குதிகொளவமைந்து. (௧௭)

பிரியமேவியவிடப்பதமடக்கிப்பிறங்குவேதவேதாந்தமுங்காண்டற்
கரியதாயபொற்கிண்கிணிபுலம்பவமைந்தவோர்வலப்பதந்தகநீட்டித்
தெரியமற்றவுஞ்சிறப்புறவமைத்துத்திருந்தமூவுலகின்றநற்றுயுங்
கிரியவாய்க்குடிகொளுமிளஞ்சேயுங்கிளந்தமற்றவற்கேற்புறவமைத்து. ()

எடுத்துவந்தலகளந்தவன்முன்னரியையவைத்தனன்விச்சுவகன்மன் [லை
கடுத்துவேறொருபொருளுறுப்பொருளைக்கமலக்கண்களிகொளக்கண்டுகவ
விடுத்துமிக்கபேருவகையனுகிவிசுவகன்மனைப்போக்கியைம்பொறியுங்
கெடுத்துமாதவனெனும்பெயர்க்கியையக்கிளர்பெருந்தவம்புரிவதற்கெழு
[ந்தான். (௧௯)

விதியிற்புன்னலியகங்கைநீராடிவெள்ளைநீற்றுமுப்புண்டரம்புனைந்து [த்து
கதியிற்சேர்த்திடுகண்மணிதரித்துக்கருத்தினுள்ளுறவெழுந்தைந்துங்கணி
மதியிற்றனமுற்றுய்மையதியற்றிமஞ்சனதியாவையுமுறக்கொண்டு
விதியிற்செய்யருக்கியமுதற்பலவுநிரப்பிமேதகுபூசனைபுரிவான். (௨௦)

திருந்துமன்பினுவாகனமாதிசெய்துவாசனைத்தயிலமுனூட்டிப்
பொருந்துபற்பலபணிகளும்பூட்டிப்புகரிலாதபல்சுவைகளுமமைந்த
மருந்துநேர்நிவேதனங்களுமூட்டியயங்குபற்பலதீபமுங்காட்டிக் [ன்,
கருந்துழாய்முகினிலனுறப்பணிந்துகைகுவித்துறச்சூழ்ந்துபோற்றிடுவா

பூசையின்னணமாயிரவருடம்புரியவந்தவிக்கிரகத்தினின்று
மீசைபாலுறமழகுடப்பொருந்தவெம்மையாளுடையிறையவன்றோன்ற
வாசையாலடியானன்னதுகாணுஉவங்கைகூப்புபுவிரைந்தெழுந்தாடி
யோசைமேவுறவரவொலியெழுப்பியுவந்துபன்முறைபணிந்துநின்றன
[னே. (௨௨)

நின்றமான்முகநோக்குபுபெருமானினைத்ததென்னெனமகவிழவாமை [ளு
யொன்றநல்கெனமுறுவல்செய்தொருபாலுமைமுகத்தினைநோக்கமற்றவ
மென்றன்வாய்மொழிபிழைபடாததனுலெரிந்தநின்மகவெய்துவனுயிரை
நன்றனங்கனுய்மருவுவன்வருந்தேனளினைநாயகவென்றருள்புரிந்து(௨௩)

பின்னுமோரிவாளிவ்வுருக்காணப்பெற்றயாவர்க்கும்வழிவழிமகவு, அ
ன்னும்வேண்டுசெல்வங்களும்பெறுவாரென்றுசொற்றனன்கரும்பிவர்குழ
லாண், மன்னுமிந்தவிக்கிரகத்தினென்றுமருவிப்பிரசன்னமாயிருந்து, மின்
னுபோகங்கள்பலவுமெவ்வுயிர்க்கும்விருப்பினல்கெனமீட்டுமொலிரப்பு; ()

இரந்தவாறுபல்வரங்களுமருளியெம்பிரானுமத்திருவுருப்புகுந்தான்
சுரந்தபேரருட்டாயுமொண்சேயுஞ்சொற்றமற்றவருருவத்தட்புக்கார்
பரந்தவோகையனாகியநெடுமால்பரவுமப்பெருமூர்த்திகளோடும் [தான்.
வரந்தவாததன்னிருக்கையுட்புகுந்துமாவொடுங்கலந்தினிதுவாழ்ந்திருந்

வேறு.

மந்தரம்பொருவுதோண்மாலிருக்கையைமருவிச்சோமாக்
கந்தரமுழுதுநோக்கிக்கண்களிப்பூதநாமஞ்
சுந்தரவிடங்கவென்றுசொல்லிமுனையிலும்பூசை
யந்தரமுதறபன்னாடுமெதிசயித்திடப்புரிந்தான. (௨௬)

புரியுநாண்மதவேளென்னும்புதல்வனைப்பெற்றானன்னான்
வரிசிலைவல்லோனாகிவாழுநாட்பரமன்மேலோர்
தெரிகணைதொடுத்துநெறறிததீவிழிசுடலான்மாய்ந்தவ்
வரியவனருளானமீட்டுமுய்ந்தெழுந்தனங்கனானான். (௨௭)

கரியுரிபோர்த்தமேனிககடவுடனருளையுன்னி
யரிமகிழ்ந்தமருநாளிலவுணருட்சம்பனென்பான்
விரிகடற்சேனைசூழவிண்ணுலகதனைமுற்றித்
திரிபொடுவம்பினென்றுசினந்தறைகூவினானே. (௨௮)

பொரவழைத்தவன்யாவென்றுபுரந்தரன்றூதிற்றேர்ந்து
கரவுடைச்சம்பனென்பான்கடுகிவந்தனனாலென்று
வரமுடைத்தேவரோடும்வளைந்தமர்பன்னாட்செய்து
முரணிலனவுணன்போருக்குடைந்தனன்வெந்நிட்டானால். (௨௯)

இனியியற்றுவதென்னென்னாவிந்திரன்கரந்துசென்று
பனிபடுகடலினூப்பட்பாப்பணைமீதுதுஞ்சும்
புனிதனையடுத்தானன்னான்புரிநதுயரமைநோக்கிக்
கனிதுயின்மிக்கானென்றுகாவலனிதனைச்செய்தான். (௩0)

தவாமயக்கியற்றிவைகுஞ்சத்திசாம்புவியையவேண்ட
வவாவறுத்தவர்க்குச்சன்மமகன்றெனத்துயில்பிடிக்கைக்
கவானுடைத்திருமுஞளற்ககன்றஞீகழிதரக்கட்
குவானுடைக்குலிசவேந்தைநோகசுபுகூறலுற்றான். (௩௧)

வந்ததையெவனடைந்தவாட்டமெனுரைதந்தெனமு
னிந்திரன்பணிந்துசம்பனெனபவனனிகத்தோடு
முந்தவந்தமர்த்தல்செய்தான்முயன்றுபோர்புரிந்துந்தோற்றே
னந்தலினின்பாற்கூறநண்ணினேனென்றுசொற்றான். (௩௨)

புரந்தரன்மொழியுட்கொண்டுபுயல்வண்ணன்கருணைமேன்மேற்
சுரந்துதன்னிதயமேயசுந்தரவிடங்கப்பெம்மான்
வரந்தருசரணமெண்ணிவானகம்புகுந்துவைகற்
கிரந்தனனுடம்பாடோர்ந்துமகபதிக்கிசைக்கலுற்றான். (௩௩)

அருளினென்னிதயமேயவழகியவிடங்கர்தம்மைத்
தெருளுறக்கொடுபோய்நின்பொற்றிருநகர்ப்பதிட்டைசெய்து
மருளறப்பூசைசெய்யின்வாள்வலியவுணன்செய்யும்
வெருளறவெல்லலாகும்விரும்பியவனைத்துமேவும். (௩௪)

இந்தவிக்கிரகமேன்மையியம்பரிதெம்மனோர்க்கு
முந்தநீகொடுபோவென்றுகொடுத்தனன்முகுந்தனென்பா
னந்தமிலுவகைபொங்கவடிபணிந்ததனையேற்றுச்
சந்தநல்விமானமேற்றித்தன்னகரடைந்தான்வேந்தன். (௩௫)

பொருவருங்கோயிலொன்றுபுரிந்ததனிடைத்தாபித்துத்
தருவருமலர்முன்னாயயாவையுந்தழுவக்கொண்டு
மருவருமன்புபொங்கமாண்புசால்பூசையாற்றி
வெருவரும்வன்மைபெற்றான்விண்ணுலகொருங்குகாப்பான். (௩௬)

விடாதபூசனைசெய்நாளில்விடங்கர்தங்கருணைபெற்றுத்
தடாதபல்லணிகத்தோடுஞ்சதமகனெதிர்ந்துசென்று
கெடாதவாளவுணர்தம்மைக்கிடைத்துமிக்கடுபோராற்றிப்
படாதபல்படையின்மாய்த்துச்சம்பன்முன்படர்ந்தானன்றே. (௩௭)

அடுதிறற்சம்பன்மெய்யையவன்பெயர்க்கடையீரொன்பான்
படுமொருமெய்யொழித்துப்பத்தாமெய்புணர்த்தவாய
தடுவரும்பொருளால்வீசித்தரையிடைப்படியவீழ்த்தி
வடுவரும்வாகைபூண்டான்மலர்ந்தவாயிரங்கணானே. (௩௮)

இறந்தனன்சம்பனென்பானெஞ்சியவவுணர்யாரும்
பறந்தனரோட்டெடுத்துப்பல்லிடத்திலுங்கரந்தார்
மறந்தலையெடாதுவென்றவானவர்பெருமானீர்தோய்ந்
தறந்தழைவிடங்கர்பூசையாற்றிகண்கிருந்தானன்றே. (௩௯)

வாள்வலிச்சம்பனென்பான்வானகத்தமர்த்தவாறுந்
தோள்வலிமகவான்றாக்கத்துடிதுடித்திறந்தவாறுங்
கோள்வலியவுணர்மற்றோர்குலைகுலைந்தொளித்தவாறு
நாள்வலியிழந்தோனாயநமுசிகேட்டுளங்கொதித்தான். (௪0)

நாடியதிறலான்முன்னைநமுசியிற்பதின்மடங்கு
கூடியவலியின்மிக்கான்கூற்றிற்குங்கூற்றம்போல்வா
னீடியவவுணர்க்கெல்லாநிறைகளைகண்ணாயுள்ளான்
றாடியதும்பையோடுதுடிதுடித்தெழுந்தானன்றே. (௪௧)

அரியினைகரிவென்றாங்குச்சம்பனையடர்த்தான்வெள்ளைக்
கரியினையுகைப்பான்கொல்லாமெனக்கனன்றதிர்த்துச்செம்பொற்
கிரியினையுகைத்தல்போலக்கிளர்மணித்தேருகைத்துப்
பரியினையாதியெல்லாப்படைகளுஞ்சூழவந்தான். (௪௨)

வந்துகற்பகநன்னாட்டைவளைத்துயர்மதிலழிக்க
முந்துபற்பலவாயேவிநினைத்தவாமுடித்துப்பின்னர்
கந்துகொல்களிற்றினூர்கலந்தரம்பையனைப்பற்றி
நந்துபல்வளமுந்தெவ்விநடுங்கிடவடுபோர்செய்வான். (௪௩)

மந்தரம்பொருவுதிண்டோண்முசிதன்வரவுதேர்ந்து
சுந்தரவிடங்கர்பாதந்தொழுதுளமுருகப்போற்றி
யந்தரமிதுவென்றோனவுணனையடுதற்கென்று
கந்தரமுழக்குங்கோமான்கசிந்துவிண்ணப்பஞ்செய்தான். (௪௪)

நாரணனாட்டினின்றுநான்மருப்பேந்தும்வெள்ளை
வாரணனாட்டில்வந்தசுந்தரவிடங்கவள்ளற்
பூரணனாட்டமூன்றுபொருந்தினோன்புணரிசூழ்ந்த
பாரணனாட்டம்வைத்துப்பகருவான்மகவாநகீது. (௪௫)

கதிரவன்குலத்துத்தோன்றுங்காவலன்வலியான்மிக்கா
னதிர்கழற்காலான்சாலீசுகனெனவறையும்பேரோ
னெதிரினம்மடிகட்கென்றுமிடையறுவன்புபூண்டா
னுதிர்தலில்புகழானன்னூரநகர்கோன்மகளைவேட்டு. (௪௬)

பாதலநின்றும்போந்துபைந்திரைக்கடலுடுத்த
பூதலமருங்கிற்காயாரோகணம்புகுந்துமிக்க
மாதலமிதுவென்றெண்ணிவைகுவானவனடைந்தாற்
சாதலங்கமையுமாறுதகுவனைவெல்வனென்றான். (௪௭)

அற்புதவிடங்கப்பெம்மானருளியதிருவாக்காய
பொற்பருணிரம்பப்பெற்றுப்புலோமசைமணாளனின்னே
லற்பமைநமுசியாவிமாட்டினேனென்றெழுந்து
கற்பலமதில்சூழ்நாகைக்காரோணநகரத்துற்றான். (௪௮)

கற்றவர்புகழுநாகைக்காரோணர்பாதம்போற்றி
யற்றமில்கருந்தடங்கணம்மையைவணங்காநின்ற
கொற்றவனாயசாலீசுகன்முனங்குறுகிநின்றான்
செற்றவொள்வயிர்வேலானவன்களிசிறப்பக்கண்டான். (௪௯)

கண்டலுமுவகைதுள்ளக்கைகுவித்தவன்கைபற்றி
மாண்டரன்னிருக்கைமேவிவந்ததென்னாத்தியென்னைப்
பூண்டவெஞ்சினத்தனையதகுவனைப்புரட்டவெண்ணி
யாண்டவனருளிச்செய்தவனைத்தையுமறியச்சொற்றான். (௫௦)

சொற்றலுங்கைகுவித்துச்சுந்தரவிடங்கப்பெம்மா
னற்றவஞ்சிறிதுமின்றிநாயினுங்கடைப்பட்டேனை
யுற்றதோர்பொருளாக்கொண்டிதுவாதுதனல்கொல்லோவென்று
பொற்றடம்புயங்கள்வீங்கப்பொருக்கெனவெழுந்தானன்றே. (௫௧)

எழுந்துபல்புவனத்துள்ளாரியாவருந்தடுத்தபோது
முழுந்தருண்முன்னம்வாளோர்க்குறுக்கேவிளைக்குந்தீயோ
னழுந்துபட்டிடச்செகுப்பேனன்றிமற்றொன்றுஞ்செய்யேன்
றழுந்தரமிதுவேயென்றான்சதமகனுவகைபூத்தான். (ருஉ)

மகபதியொடுமெழுந்துவரிகருங்கழற்காற்சாலி
சுகனெனுமரையன்வானத்தொன்னகர்புகுந்துதோலா
விகல்கெழுகமுசிதன்றனோடேற்றனன்பன்னாட்போர்செய்
தகலருமவன்றனுவியொளிறுவாள்வீசியுண்டான். (ருந)

பொருசதகோடியங்கைப்புனிதனால்வெல்லக்கூடாப்
பெருவலியவுணனுவிமானிடப்பிறவியுற்றா
னொருவனைக்கொண்டுமாய்த்தானொருநாரும்பால்விண்ணாட
ரருவலிமுழுதுமாய்த்தாற்கிதுவுமோரருமைத்தாமோ. (ருச)

பகையுயிர்பாறலோடும்பார்புரந்திடுவார்சென்னித்
தொகைமணிபடுகாற்சாலிசுகன்றனையிறுகப்புல்லி
நகைமுகத்தவன்கைபற்றிநலங்கொடன்னிருக்கையுய்த்துத்
தகைபடுவிருந்தளித்தான்சசிமுலைத்தடநதோய்மாரபன. (ருரு)

விழைதருபொன்னாட்டுள்ளமேதருவளங்களெல்லாங்
குழைதருவிருப்பினோக்கிக்குலிசவேற்கோமானோடு
தழைதருநட்பனுகித்தராதிபனமருநாளி
லுழைதருவிழியோர்பாகற்றரிசிக்குமுள்ளங்கொண்டான். (ருசு)

வலனுயிர்குடித்ததோன்றன்மன்னவன்விருப்பந்தேர்ந்து
நலனுயாவிடங்கப்பெமமான்பூசனைநடாத்துங்காலை
நிலனமைமன்னற்கூவிநேருறத்தரிசியென்றான்
புலனொருப்பாடுமேவத்தரிசித்தான்புவியாள்கோமான். (ருஎ)

விழிகவர்வனப்புவாய்நதவிடங்கரைந்கண்டபோதே
பழிதவிர்காந்தங்கண்டவிரும்பெனும்படியனுகி
வழிதருகண்ணீர்சோரவார்மயிர்ப்புளகம்போர்ப்பக்
கழிபெருங்காதல்பொங்கக்கவருமோர்வேட்கையுற்றான். (ருஅ)

எறிகடலவனிகாப்போனிவ்வணநிற்குங்காலைப்
பறியுலகாளும்வேந்தன்பண்புசானட்புமிக்காய்
செறிநினக்கியாதுவேண்டுஞ்செப்புதிதருவலென்றான்
வெறிமலர்த்தொடையலானும்விடங்கரைத்தருதியென்றான். (ருகூ)

விடங்கரைத்தருதியென்றுவேந்தர்கோன்விளம்பலோடு
மடங்கலைவலாரிசோர்ந்துமயங்கிமூர்ச்சித்துவீழ்ந்து
திடங்களைசில்லோர்தேறுநதெளிந்துமால்யானைகாப்பா
னிடங்கரையறுநதானுமளமிலையதரினியைவனென்றான். (சுo)

சொற்றசொன்மறுத்தற்கஞ்சியிவ்வணஞ்சொல்லலோர்ந்து
கொற்றவெண்கவிகைச்சாலீசனகங்குளிரப்புமேவப்
பொற்றபாற்கடலடைந்துபொங்கராவணையினுய்ய
ணுற்றமின்ருகத்துஞ்சுமண்ணல்பொற்பதம்பணிந்தான். (௬௧)

பணிந்தமன்னவனைநோக்கிப்பைந்துழாய்ப்படலைமார்பன்
றுணிந்தசிந்தையனாயீங்குவந்ததென்சொற்றியென்னத்
துணிந்தசிந்தனையில்லாதமுசியைச்சாடினேனுங்
கணிந்தசுந்தரவிடங்கர்திருவுருவமையக்கண்டேன். (௬௨)

ஆய்ந்தவின்னுளியர்நீவேண்டுவதருள்வேனென்றான்
வாய்ந்தசுந்தரவிடங்கவள்ளலைத்தருதியென்றே
னேய்ந்தினனானுமைந்தபெற்றீயகெய்தகவென்றான்செம்பொன்
றேய்ந்தமார்புடையாயினனேயருளெனத்தொழுதானீதே. (௬௩)

தொழுபவற்கிரங்கிமாயோன்சுந்தரவிடங்கர்பாதம்
வழுவறமனத்தினெண்ணிமற்றவர்குறிப்புந்தேர்ந்தே
யழுவலனபுடையாய்கொண்டுபோகெனவுரைத்தான்வேந்தன்
பழுதறுத்துய்ந்தேனென்றுபைம்பொனாட்டகத்துச்சென்றான். (௬௪)

மறைபலவுதிர்த்தவுந்திமலரினன்வார்த்தைகேளாக்
கறைபடியுறைவறக்கோதித்தருகெனக்கசிந்துநின்று
னறைமலர்த்தொடையனமாபாசசியபடியேயடாங்
குறைவிலிபொருளைக்கொண்டுபோகெனக்கொடுத்திட்டானே, (௬௫)

அளிகிளர்கருணைமிக்கவழகியவிடங்கர்தம்மை
யொளிகிளர்கதிர்சமழ்ந்துமொருவிமானத்திலேற்றித்
துளிகிளர்முகிலுநாணுஞ்சுத்தமத்தளமுழங்க
கிளிகிளர்சிறப்புவாய்கொக்கரைபெருமுழக்கருசெய்ய. (௬௬)

பல்லியமற்றையாவும்படுகடலினுமுழங்க
மெல்லியலரம்பைமாதர்மின்னெனவெதிர்நடிப்ப
வல்லியங்குழலாசிலலோரலங்குசாமரையிரட்டப்
புலலியபவளக்காம்பிற்பொலிமணிக்குடைநிழற்ற. (௬௭)

மறைமுழுதுடையான்வந்தான்மால்விடையாளிவந்தான்
கறைவிடமமுதாக்கொண்டகடவுளர்ப்புரந்தான்வந்தான்
அறைகெழுபலரும்போற்றுஞ்சுந்தரவிடங்கன்வந்தா
னிறையவன்வந்தான்வந்தானென்றுசின்னங்களூத. (௬௮)

திரிபுரமெரித்தவாறுஞ்சிலைமதற்காய்ந்தவாறுங்
கரியுதனுரித்தவாறுங்காலனைக்காய்ந்தவாறும்
விரிமலர்க்கிழவன்சென்னிவிழுத்தியவாறுமெய்த்தோ
ரரியுடற்கவர்ந்தவாறுமலைமதத்தொகுவளைகையோர்பாட. (௬௯)

கடிமலரொன்றிட்டாலுங்கனிந்தோர்பச்சிலையிட்டாலு
நெடியவன்பிரமனுங்கிலத்தினின்றுயர்த்தியின்னு
மடியவர்க்கெளியராகியருள்செயுந்திறமனைத்து
மொடிவறப்பாடல்செய்தாங்கொருவகையார்கள்பாட. (எ௦)

சங்கரசம்புபோற்றிசச்சிதானந்தபோற்றி
பொங்கரவணிந்தமுக்கட்பூரணபுராணபோற்றி
செங்கரமழுமானேந்துஞ்சிவபரஞ்சோதிபோற்றி
நங்கரவறுப்பாய்போற்றியெனப்பலர்நயந்துபோற்ற (எக)

செறிபலகோணற்றண்டந்திகழ்பலகோணுத்தண்ட
மறிவருஞ்சிவிறியாலவட்டமொள்ளொலியலேற்றுக்
குறிகெழுதுவசஞ்செம்பொற்குடைமணித்தோரணங்க
ளறிதருமறறயாவுமடர்ந்தனகாடுசெய்ய. (எஉ)

வானவரியக்கர்சித்தர்வித்தியாதரர்வயப்போர்த்
தானவர்கிருதர்நாகர்கின்னரர்தடந்தோட்பூத
ரானவர்கருடர்மரமையமைந்தகாந்தருவர்சொல்லா
வேனவர்கணங்களெல்லாமெங்கணுந்துவன்றிமல்க. (எ௩)

மணிபலவிறைக்கின்றுரும்வயங்குபொன்வீசுவாரு
மணிமலரளவிலாதவள்ளுபொழிகின்றாருங்
கணிதமில்விரைநீர்சாந்திற்கரைத்தனரூற்றுவாரும்
பணிபலவின்னுமாற்றும்பான்மையர்பல்லோர்மொய்ப்ப. (எ௪)

இன்னவைபலமேன்மேலுமியம்புதற்கரியவாகப்
பொன்னலந்திகழும்வானம்புழுங்குபுசமழ்த்தேமாற
நன்னலமரியதென்றுஞாலமிக்கிறுமாப்பெய்தக்
கன்னவிறேளான்வந்துகாரோணம்புகுந்தானன்றே. (எரு)

எண்ணியவெண்ணியாங்கேயியற்றிடுவலியொருங்கு
நண்ணியவானநாடுநயந்தகம்பியனைக்கொண்டு
புண்ணியவளங்கூராதிபுராணருக்கடுத்ததென்பா
லண்ணியசெம்பொற்கோயிலழகுறச்சமைத்தபின்றை. (எசு)

செழுநலம்பொலிகாரோணத்திருப்பெருவீதியெல்லாம்
பழுதறப்பந்தரிட்டப்பந்தரின்கால்கடோறுங்
கொழுவரைக்கதலிகந்திகுலவுசெங்கன்னல்யாத்து
வழுவிறேரணமுந்தூக்கிவிதானமும்வயங்கக்கட்டி. (எஎ)

தங்குசுந்தரவிடங்கர்தமையெழுந்தருளப்பண்ணிப்
பொங்குநாற்றெருவுஞ்சூழ்ந்துபோதரப்புரிந்தபின்னர்
கொங்குசார்கோயில்புக்குக்குலவரியாசனத்தி
னங்குமேவுறத்தாபித்தாருயிரனைத்தும்வாழ. (எஅ)

சிறியிலைவெதிரினோடுஞ்செந்நெலங்கழனிமூதூர்
குறிகிளர்வருக்கைதேமாவாதியகுலவிநாளு
முறிமலர்பயிலுஞ்சோலைமொய்வளத்துடைவையின்று
மறிதரவிடங்கர்க்கென்றேயமைத்தனனளவிலாத. (௭௯)

சதுமுகனாதியாயவுயிரெலாந்தழுவியுய்ய
மதுமலர்க்கடுக்கைமாலைவள்ளலாரருளிச்செய்த
முதுமொழியாகமத்தின்முறைசெய்நித்தியமுன்மூன்றும்
புதுமையினடக்குமாறேபுரிந்தனன்புலியாள்வேந்தன். (௮௦)

அருமறைமுடியின்மேவுமழகியவிடங்கருக்குத்
திருமலிசிறப்பினானித்திங்களினத்தநாளிற்
பொருவிடைக்கொடியொன்றேற்றிப்புவனங்கண்முழுதும்போர்ப்பப்
பெருகுறுமீரொன்பானாட்பிறங்குமெண்கொடியுமேற்றி. (௮௧)

இருபத்துநாலாநாளினிரதமூர்விழாநடத்தி
யருமைத்தாமூவொன்பானாளமைந்தவுத்திரத்திற்றீர்த்தன்
திருவத்தினுயிர்களெல்லாஞ்செழித்திடநல்கச்செய்து
மருமொய்த்தவலங்கற்சாலீசுகன்மிகமகிழ்ச்சிபூத்தான். (௮௨)

விடங்கர்தந்திருவிழாவையின்னணம்விருப்பிற்செய்து
மடங்கிரும்வானாட்டுள்ளார்வருதினி † மன்னர்யார்க்கு
மடங்கருமுவகைபொங்கவளவிலாமுகமன்செய்தான்
கடங்கலுழ்கபோலச்சிற்றக்கந்துகொல்களிற்றுவேந்தன். (௮௩)

அருட்டிருவாரூராதிசிருட்டியினண்ணலாரை
மருட்டிறனறத்தாபித்தமுசுகுந்தனினுமாண்புற்றான்
பொருட்டிறமலிகாரோணபுரத்தழகரையிரண்டாஞ்
சிருட்டியினிறுத்தசாலீசுகனென்றார்தெளிந்தோர்யாரும். (௮௪)

தெளிதரவின்னுமூன்றாஞ்சிருட்டியிலிவன்குலத்தோர்
களிகிளர்மன்னன்றோன்றிக்காமருவிடங்கர்தம்மை
யளிமறைக்குலம்பூசித்தவருண்மறைக்காட்டிற்றாபித்
தொளிகிளர்பெரும்பேறுற்றானும்பராதியர்வியப்ப. (௮௫)

மற்றுமோர்விடங்கர்தம்மைவயங்குநாலாஞ்சிருட்டி
யுற்றிடுநாளவ்வெய்யோனுயர்குலத்தொருவன்றோன்றிக்
கற்றவர்புகழ்ந்துபோற்றுங்காமருதிருநள்ளாற்றி
லற்றமின்றாகத்தாபித்தளவிலாப்பெரும்பேறுற்றான். (௮௬)

இன்னுமோர்விடங்கர்தம்மையியைந்தவைந்தாஞ்சிருட்டி
முன்னுநாளம்மார்த்தாண்டன்குலத்தொருமன்னன்றோன்றிப்
பன்னுநான்மறையும்போற்றும்பைம்பொழிற்றிருக்காறாயி
லென்னுமோர்தலத்திற்றாபித்திறிலாப்பேறுபெற்றான். (௮௭)

---

† வருதினி - சேனை.

இளங்கதிரின்மணிமுடியுமெதிர்ப்பகைகொண்மலர்முகமுங்
களங்கமில்பொற்குழைக்காதுங்கருணைபொழிகருவிழியும்
வளங்குலவுசெவ்வாயும்வழங்கெழில்கட்கொடுவாரி
விளங்குமணிவறைநிறைத்தார்கிண்கிணித்தாடெரிவிருப்பார். (கூஎ)

காலங்கடவருமலிவ்வாறுகண்டிறைஞ்சிச்
சீலங்கொள்பெருமுனிவர்திருந்துதவம்புரிகாலை
யாலங்கொடிருமிடற்றுவிடங்கரவரெதிர்தோன்றிக்
கோலங்கொளதுவேண்டுங்குறித்ததுவாத்தடியேனென. (கூஅ)

களிசெயசபாநடனங்காணவிரும்பினமனவா-
வொளிசெய்திருமேனியாயுவந்தருளவேண்டுமெனக்
கிளிசெய்மொழியொருபாலார்க்குமதியிற்றினர்செங்கை
யளிசெய்நடம்புரிதுமெனவருளிமறைந்தனரன்றே. (கூகூ)

கலைமுழுதுமையமறக்கற்றுணர்ந்தமுனிவர்மதிச்
சிலையிலொருசெங்கையுறந்தெதிர்தருகுனித்தருளுமெனத்
தலைபமைசுந்தரவிடங்கர்நம்மெதிர்சார்ந்தனரவரு
முலைவின்முழுவாதியமொருங்கியம்பும்படிநடித்தார், (௪00)

நானந்தவாதகுழலுமையையொருபுறங்கொண்
டானந்தமேயுருவாயமைந்தருள்சுந்தரவிடங்கர்
தேனந்தமலர்தூவியிருவர்களுஞ்சேவிப்ப
மோனந்தவாப்பிறருமுயங்கியுவப்புறநடித்தார். (௪0௧)

இந்நடமிந்நாளியாங்கண்டுதொழுதபடி
சந்தமுறவெவ்வுயிருந்தாங்கண்டுதொழுகுமா
றந்தவரந்தருகென்றுமுனிவரிருவருமிரப்ப
வந்தமிலாப்பரமனுமற்றுகவெனவருள்புரிந்தான். (௪0௨)

நல்லார்கடாம்பெற்றநாடரியபெரும்பேற்றை
யெல்லாரும்பெறவேண்டுமெனக்கருதிமுயன்றிடுவா
ரல்லார்மற்றதுசூழியார்களிலத்தென்பதையுணர்ந்தாம்
வல்லாரிவ்விருவருமிவ்வரம்பெற்றதறங்கொண்டே. (௪0௩)

ஒள்ளியகிண்கிணியொலிக்குமொண்மலர்த்தாளதுகாட்டத்
தெள்ளியசித்தனைமுனிவர்சேவித்துக்களிகூர்ந்து
நள்ளியவானந்தமெழநயந்தேத்திவிடைகொண்டே
யுள்ளியதம்மிருக்கைமரீஇயுவந்துவாழ்ந்திருந்தனரே. (௪0௪)

புலிமுனியும்பணிமுனியும்போற்றியினிதுறவேண்டு
மொலிகெழுகிண்கிணியணித்தாளருந்தவரத்தின்படியே
நலிவில்சிலைநுதற்றோழுநலங்கினார்த்திடைநாளின்
மலியருளினசைநடம்புரிகுவர்மன்னுமிருப்ப. (௪0௫)

எதுகாறுதொழிந்தாலுமிக்கடமாத்திரங்காண்பார்
மதுமாலைக்குழன்மனைவிமக்களுடன்வாழ்ந்திருந்து
முதுவானப்பெரும்போகமுயங்கியனுபவித்தீற்றிற்
சதுர்வேதன்முதலோருஞ்சாரூபியபதஞ்சார்வார். (கoசு)

அந்திமதிபுனைந்தமுடியழகவிடங்கருக்குயர்செவ்
வந்திமலர்தொடுத்தணியவல்லவரம்மலரொன்றற்
குந்தியெழுபெருங்கற்பமொன்றாகவேறுலகைக்கு
நந்தியமர்சிவலோகநண்ணிவாழ்ந்தினிதுவப்பார். (கoஎ)

வாளுடுவெறுத்துவரிமண்ணுடுதக்கதெனக்
காளுடுபொழில்சூழுங்காரோணம்புகுந்தமர்வார்
தேனுடுமதுப்பொழியுஞ்செங்கழுநீர்விரும்புதலாற்
பானுடுமலைவிருத்திபண்ணநிலங்கொடுத்தாரும். (கoஅ)

கூடுபலவோடைபெருங்குளங்களுறச்சமைத்தாரு
நீடுபுனனிறைத்தாருநிகழ்கிழங்குபதித்தாரு
நாடுமலைவசிதையாமனகுவேலியமைத்தாரு
மேடுசெறிமலர்புனிதத்தெடுத்துவநதுகொடுத்தாரும். (கoகூ)

மறிதிரைவாரிதிபுடைசூழ்வையமுழுவதுமொருகோ
னெறிமுறையிறசெலவுய்த்துநெடுங்காலமுறவாழ்ந்து
முறிமலர்க்கற்பகநாடுமுதலியபற்பலநாட்டுச்
செறிபலபோகமுந்துய்த்துச்சிவபதமீற்றடைந்துவப்பார். (ககo)

புண்ணியமேமிகத்தழையப்போதுமீரயனங்கள்
விண்ணியல்செங்கதிர்துலாமேடவிராசியின்விரும்பி
நண்ணியவேலைகளாணிநலங்கெழுபங்குனிமதியத்
தெண்ணியவுத்திரமுறுநாளிவைவிசேடம்படுநாள். (கக௧)

இந்தவிசேடம்படுநாளெழில்விடங்கர்தமையாட்டச்
சந்தநறுந்தயிலம்பாறயிரயிர்செங்கழைச்சாறு
நந்தவிளாபடும்பனிநீர்முதலியவுநயந்தளித்தா
ரந்தயிலாதடைபேற்றையாரேயோவறைகிற்பார். (ககஉ)

தென்புலவாணருக்கியற்றுமருங்கடன்றீர்த்திடற்பொருட்டு
நன்புலமைந்தனைவேண்டிநானிலத்திற்றவமுழப்போ
ரன்புநெகிழ்ந்துருகுவிதமிருந்தாநடித்தருள்வானை
யன்புமிகத்தவிராதோராண்டுபணிதரிற்பெறுவார். (ககங)

அருநதவர்தமுளத்தொளியாமழகவிடங்கரைப்போற்றிற்
றிருநதமகப்பெற்றுவத்தறிண்ணமிதற்கையமிலை
பொருநதவழிபடுநாளிற்புனத்துழாய்முடியாற்குக்
கருநடங்கனுமையளித்தகாதல்வரம்பொய்போமோ. (ககச)

அருமறையின்முடிப்பொருளாயமருமழகியவிடங்கர்
தருமசரித்திரஞ்சிறிதுசாற்றினுமயோத்திவளர்
பெருமனுவின்குலத்துதித்தசரதன்பெட்பொடுபுகுந்து
பொருமலறச்சனிப்பதிட்டைபுரிந்ததிறமெடுத்துரைப்பாம். (௧௧௫)

சுந்தரவிடங்கப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உ௧ ஐ திருவிருத்தம்-௧௭௧௧.

## சனிப்பிரதிட்டைப்படலம்.

புதையிருள்கிழிசுடர்போன்றநந்திதா
ளிதையம்வைத்தொருசனற்குமாரனேத்துபு
ததைபுகழ்த்தசரதன்சனிப்பதிட்டைசெய்
கதையுரைத்திடுகெனக்கழறுவானவன். (௧)

நலமலிகோசலநாடளிப்பவன்
வலமலியயோத்தியின்வாழும்வாழ்க்கையான்
குலமலிபரிதிதன்குலத்திற்பூத்தவன்
நிலமலியுயிரொலாங்காக்குநீர்மையான். (உ)

கலைமுழுதுணர்ந்தவன்கருதலாருயி
ரலைசெயும்வாளினனருளின்வாழ்க்கையான்
றலையமைநீதியான்றடித்ததோள்வட
மலைபுரைதசரதமன்னனென்பவன். (௩)

அன்னவன்மன்னுயிரனைத்துமோம்பிடு
நன்னலத்தமைந்துகோனடாத்துநாள்வயிற்
பன்னருஞ்சோதிடப்பயிற்சிமிக்கவ
ரொன்னருமடைந்தனரிருக்கைநல்கினன். (௪)

ஒருங்குநீரடைந்ததென்னுணர்த்துவீரென
வருங்குறைத்தெனவுலகனிக்குமாரருட்
பெருங்குணத்தவவுயிரனைத்தும்பேதுற்று
முருங்குவதாக்குநாண்மூளக்குமேலரோ. (௫)

விராவுமற்றஃதெவனெனவினவிடிற்
றராதிபவுரோகணிசகடம்பேதித்தே
யிராவுகதிர்மகனியங்குநீர்மையாற்
பராமழைபன்னிருவருடம்பாறுமால். (௬)

மழையொருபன்னிரண்டாண்டுமாறுமேற்
குழையுயிர்படுந்துயர்கூறல்வேண்டுமோ
கழைசுளிகளிற்றினாய்கருத்திதேனெனப்
பிழையில்சோதிடத்தவர்பேசிப்போயினர். (௭)

மற்றதுகருத்துறமதித்தமன்னவ
னுற்றவித்துயர்க்கெவனுழிவென்றாய்ந்தனன்
செற்றவெங்கதிர்மகனமருந்தேமுறக்
கொற்றவனைத்தேர்மிசைக்கொண்டுபோயினான். (௮)

கடுவிசையோடுதேர்ககனஞ்செல்லுழி
வடிவிறன்குலமுதல்வழியிறைவன்றிரு
னாடுதிறற்களிற்றினனவனைத்தாழ்ந்தனன்
முடுகியிங்கடைதரமுடிந்ததென்னென்றான். (௯)

உயிர்திறம்பாவகையொருங்குகாத்திடுஞ்
செயிரறுவிரதநான்சேரக்கொண்டுளேன்
கயிரவப்பகைவநின்காதற்சேய்வெளி
றயிருடைப்பதுவெனவுடைத்தருளசெய்வான். (௧௦)

தருதிறனுரோகணிசகடம்பேதித்து
வருதிறலடைந்தனன்மற்றவனொடும்
பொருதிறல்புரிந்துமாற்றப்புரந்தசெய்
தொருதிறலாழிதந்தேராயுற்றேனென்றான், (௧௧)

என்றலுமவன்கருத்தெய்த்தசூரியன்
கன்றமராற்றிடிற்கழியுநாள்பல
பொன்றல்செய்வற்கடம்போகுமீனுமா
னன்றலவிதுவினுநவிலக்கேட்டியால். (௧௨)

கோணிலையனைத்துநங்குழுகளுனையே
நாணிலையியக்கமுநவிலில்வேறுகொல்
வீணிலையுடற்றலின்விழைவதென்னையோன்
வாணிலைதடற்றினுய்மதித்தல்செய்தியால். (௧௩)

முனிசமராற்றுபுமுடிக்குமாண்பினுங்
கனிதரவடுத்துறக்கலந்துகண்ணிய
தினிதுறமுடித்திடலேற்றமாதுமாற
றுனியறவுயிர்க்கருள்சுரத்தல்பூண்டுளாய். (௧௪)

ஓங்குசீர்நாகைக்காரோணமுற்றருட்
பாங்குமேவுறப்பரம்பரனைப்போற்றுபு
தேங்குபேரருள்கொடுசெயிர்கரும்பங்குவை
யாங்குநீதாபித்தர்ச்சனையியற்றிடில். (௧௫)

எண்ணியகாரியமெளிதினெய்தலாங்
கண்ணியதல்லவுங்கைக்கனெல்லியா
வண்ணியவதுபுரிந்தருள்விராவிட
மண்ணியமணிநிகர்மைந்தபோவென்றான். (௧௬)

உற்றதன்குலமுதலுரைத்தவாய்மொழி
யற்றமின்றாலெனவகத்தமைத்தனன்
கற்றவர்புகழ்கழற்கானரேந்திர
னற்றவர்மருவுங்காரோணநண்ணினான், (௧௭)

மேதகுபெரும்புகழ்விருத்தகாவிரித்
தீதறுசங்கமஞ்செறிந்துமூழ்கினான்
போதரமற்றுளபுனலுமாடினா
னாதரத்தொடுந்தலமனைத்தும்போற்றினான். (௧௮)

மருந்தமுண்டமரரையன்றுவாழ்வித்த
பெருந்தகைப்பரமனைப்பேணிப்போற்றுபு
கருந்தடங்கண்ணியைக்கலந்துதாழ்ந்தன
னருந்தவத்திறலுடையயோத்தியாண்டகை. (௧௯)

உள்ளநெக்குருகிடவுவகைபொங்கிடத்
தள்ளரும்விழிப்புனறாரையாயிட
வெள்ளநன்முடியெழில்விடங்கத்தாணுவாம்
வள்ளலைத்தொழுதெழூஉவழுத்தல்செய்தபின். (௨௰)

அவனருளடைந்தவற்கயலிராக்கதத்
தவலருந்திசைத்தனிசமைத்துக்காரியை
நவமுறத்தாபித்துநயக்குநீணிறக்
கவலருங்கலைநலங்கவினச்சாத்தியே. (௨௧)

திலம்படுசோறுஞ்சிறப்பவூட்டுபு
நலம்படுபூசனைநயக்கவாற்றலும்
வலம்படுசவுரியவ்வுருவின்றேவரைக்
குலம்படுதோளன்முன்குறுகினின்றனன். (௨௨)

மன்னநின்பூசனைமகிழ்ந்துளேனுளத்
துன்னியவரமெவனுரைத்தியாலெனத்
தன்னிகருரோகணிசகடம்பேதித்தா
லின்னலினழுந்துமெவ்வுயிருமேந்தலே. (௨௩)

அதுபுரியாதியென்றரசன்வேண்டலு
முதுமகனியைந்தனன்மொழிந்ததன்றியு
மதுமலர்த்தாரவென்வாரத்திவ்வயிற்
புதுமலர்கொண்டெனைப்போற்றுவாரெலாம், (௨௪)

கலங்கயான்புரிதுயர்கைக்கொளாரென
வலங்கொருவரமுநன்கருளியவ்வுரு
விலங்குறவமர்ந்தனன்சனிவேந்தனு
மலங்கலிலயோத்தியேபுக்குவாழ்ந்தனன். (௨௫)

பராவுமன்னவன் சனிப்பதிட்டைசெய்திறம்
விராவுபல்லுயிர்ப்பொருட்டாவிளம்பினாம்
தராதலம்போற்றிடுமேன்மைதங்கிய
விராமநாதன்வரவினியியம்புவாம். (உக)

சனிப்பிரதிட்டைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உஉ இ திருவிருத்தம் - கசருஎ.

## இராமநாதப்படலம்.

வானோர்பலருந்தொழூஉந்திவள்ளலிருதாண்மலர்பழிச்சி
யூனார்பிறவிப்பிணிப்புமுழுதொழிந்தானற்குமாரமுனி
யானோர்தவசம்வலனுயர்த்தவருள்கூரிராமநாதரது
தேனார்சரிதங்கூறுகெனச்செவ்வாய்மலர்ந்தன்னவன்புகல்வான். (க)

போகமலிந்தபொன்னாட்டிற்பொலியுமொருகோசலநாட்டின்
மேகமுரிஞ்சுமதிலுடுத்தவயோத்திநகரான்விறல்வேந்தன்
மாகம்வழுத்துந்தசரதப்பேர்வள்ளன்மகவுபெறவேண்டி
மோகமிரித்தகலைக்கோட்டுமுனிவன்யாகம்புரிகாலை, (உ)

ஆயபிண்டார்கூறிட்டமைந்தமூன்றுமனைவியர்க்கு
நேயவிறைநல்கிடப்பின்னருந்திகழ்ந்துமொழியானெடியமா
றாயதுணை[illegible]தோன்றியிராமனெனும்பெயர்பூண்
டேயவனை[illegible]லொருமுனிபின்னெய்திருனேரிளவலொடும். (௩)

அந்தமுனிவன்மகங்காப்பானாக்கியொபிமற்றவண்மகவுஞ்
சிந்தவடுவெங்கணைதூண்டிச்சிலைமாதாடும்படிநடந்து
முந்தமிதிலைவின்முறித்துமுயங்குஞானகிதனைமணந்து
வந்தபரசிராமனடன்மாற்றியயோத்திநகரடைந்து. (௪)

சிறுதாய்மொழியத்தம்பியொடுஞ்சீதையொடாரணம்புகுந்து
தெறுவெட்டிவிராட்டுகெடுந்திறல்விராதனுயிர்கவர்ந்து
மறுவீர்முனிவரொடுங்கலவிவளமார்கோதாவிரிதீரத்
துறுநாளடைந்தசூர்ப்பநகைமுலைமூக்கொருங்குகெடலாலே. (௫)

வந்தகாரனதியர்மடியமாட்டிமாயமான்றொலைத்து
நந்தவொருபுட்பெற்றுகடனவின்றுசீதைதனைத்தேடி
முந்தவருகாற்கவந்தனுயிர்முடித்துச்சவரிபூசனைபெற்
றுந்தவொருகிட்கிந்தையடைந்தாயங்கவாலியுயிர்மாட்டி. (௬)

நட்டபரிதிமகற்கரசுநல்கியவனும்வருதலியுங்
கிட்டவளியீன்றவன்சீதைநிலைமைதேர்ந்துகிடைத்தொப்பப்
பட்டவிலங்கையடைவதற்குப்பரம்புசெறித்துப்பரவையணை
கட்டமிதித்துமேற்செய்யக்கடவனுணர்ந்துஞ்சாகுத்தன. (௭)

நீடுசீர்சைக்கர்ரோணநயந்துபுகுந்துபெருஞ்சிறப்புக்
கூடும்விருத்தகாவேரிகூடும்பரவையகந்தோய்ந்து
நீடுதிருவெண்ணீறணிந்துநிலவுதிருவைந்தெழுத்தெண்ணி
யாடுபெருமான்காரோணத்தண்ணலடித்தாமரைபணிந்து. (௮)

ஆன்றவருள்சால்கருந்தடங்கண்ணம்மைமலர்ப்பாதம்மிறைஞ்சி
யென்றநாகேசனைவணங்கியிலங்குமவர்க்குத்தென்பாலிற்
றோன்றலிலிங்கமொன்றுநிறீஇத்தூசனில்பூசைபுரிந்திடலுஞ்
சான்றபெருமானவ்விலிங்கநின்றும்வெளியேதனிவந்தான். (௯)

வந்தபெருமானடியில்வீழ்ந்தெழுந்துபலகால்வலஞ்சூழ்ந்து
முந்தவிருகண்ணீரிறைப்பமொழியீாநின்றநாக்குளறச்
சந்தவிமையாளொருபாகத்தனியேதனித்தார்பெருவாழ்வே
யந்தமருவாப்பெருந்துயரத்தாழ்ந்தேனடியேனென்றழுதான். (௧0)

ஒழிபாக்கவலையுற்றழுங்குமொருகோசலைமைந்தனைநோக்கிப்
பழியாப்பெருமான்றிருவுள்ளமிரங்கிவிழைவுபகர்தியென
வழியாப்பொருளேநினதுள்ளமறியாததுமொன்றுண்டுகொலோ
கழியாக்காதலென்மனையைக்கவர்ந்தான்கடும்பாதகவரக்கன். (௧௧)

அனையகொடியற்செகுத்திடவுமவன்வாழிலங்கைநகரடைய
வினையமுறந்தபெரும்பரவைவெற்பாலடைத்துவழிசெயவு
நினையமுடியாப்பரம்பொருளேநிகரில்வரங்கடால்வேண்டு
மினையவரங்களல்லாமலின்னும்வேண்டும்வரமுளவால். (௧௨)

இந்தவிலிங்கத்தெஞ்ஞான்றுமிரியாதொருநீயுறல்வேண்டுஞ்
சந்தமருவுநினக்கொருபேரிராமநாதனெனச்சாற்றி
முந்தவெவருந்தொழல்வேண்டுந்தொழுதார்பலருமுழுப்போக
நந்தலடையாதுறல்வேண்டுமல்லாயிவற்றைநல்கென்றான். (௧௩)

கேடில்புகழ்க்கோசலைவள்ளல்கேட்டவரங்கண்முழுதுணர்ந்து
வீடில்பெருமான்முறுவலித்துவிளம்புமிந்தக்கேத்திரந்தா
னூடிற்குரோசமைந்தளவுநலமார்திரநம்பராசத்தி
யீடிலதிட்டிக்கப்படுவதின்னுங்கேட்டியிராகவனே. (௧௪)

எறியுந்திரைப்பைங்கடலிலொருகுரோசத்தளவென்றெண்ணுதியுற்
செறியுங்கங்கைமுதலாயதீர்த்தமனைத்துமிவ்வளவு
மறியுந்தவத்தினுயர்ந்தோரேயமையச்செறிந்துவாழ்தருவார்
மறியுங்கரணச்சித்தவொலாஞ்சித்தாச்சிரமம்வசித்திடுவார். (௧௫)

இன்னுந்தவஞ்சால்குறுமுனிவனிக்குவசிப்பாணிந்தலத்தைத்
துன்னுமவர்க்குச்சவுமியமாந்தொழினல்கிடுதலல்லாது
பன்னும்பிறிதுநல்கவிலைபரிதிகுலத்தோயானுமு
மன்னுசமைபர்ச்சித்தடைந்தமாண்பாலுரைத்துங்கேட்டியால். (௧௬)

மறைபூசித்தநகர்த்தென்பான்மகிடற்காய்ந்தாளமர்நகரிற்
குறைதீர்பரவையடைந்திலங்கைகுறுகிக்கொடியோன்றனைமாட்டி
நிறைசால்புடையாடனைமீட்டுநேயத்தவரோடிங்கணைந்தே
யறைசாலிந்தக்குறிபோற்றியயோத்தியடைந்துவாழ்ந்திருப்பாய். (௧௭)

மதியொண்பரிதியுபராகமத்தோதயமகோதயமற்
றுதிபுண்ணியகாலங்களினிவ்வொலியாநின்றகடன்மூழ்கித்
துதிகொணின்னாற்பதிட்டைபுரியிராமநாதனடிதொழுவார்
பதியுங்கொடியபாதகங்கள்பலவாமேனும்பாற்றிடுவார். (௧௮)

தீயவரக்கன்றனைமாட்டுஞ்செயனிற்களித்தோமற்றுமுள
வாயவனைத்துநீவினாவியவாறளித்தோமென்றருளிப்
பாயபுகழ்நம்மான்மறைந்தான்பையுணீங்கிநனிமகிழ்ந்து
தூயகுணத்தான்றேவிபுரம்படர்ந்தான்சேனைசூழ்வரவே. (௧௯)

ஆழிவரைகொண்டடைத்திலங்கையகத்துப்புகுந்துகொடியோனைப்
பாழியமைந்தசேனையொடும்படராகவபூமியிற்படுத்து
வீழிபொருவாய்ச்சானகியைமீட்டுவிமானமேற்கொண்டு
வாழிதுணைவர்பலரோடுவளஞ்சானாகைப்பதியடைந்தான். (௨0)

வேறு.

நாகைமேவிநயந்துபரவையிற்
பாகைநேர்மொழிப்பைந்தொடிச்சீதையோ
டோகைமேவவுறுவிதிமூழ்கினான்
வாகைவெஞ்சிலைவள்ளலிராகவன். (௨௧)

அருந்தவத்தருளத்தமராதியைக்
கருந்தடங்கணுமையொடுங்கண்டுதாழ்ந்
திருந்தகோலவிடங்கர்முனெய்துபு
திருந்துநெஞ்சநெகிழ்ந்திடச்சேவித்தான். (௨௨)

இராமமோருருக்கொண்டியங்குற்றன
விராமலர்க்குழற்சீதையொடெய்தியே
யிராமநாதன்பதமுமிறைஞ்சிவில்
லிராமன்மூதூரயோத்தியையெய்தினான். (௨௩)

ஆங்குவேதியராதியர்சூழ்தரப்
பாங்குமாமுடிசூடிப்பல்லோர்களும்
வீங்குபோகத்தினமூழ்கவியனிலந்
தாங்குமாதரவிற்றகவாழ்ந்தனன். (௨௪)

இராமநாதர்சரிதமியம்பினும்
பராவிரண்டாயிரமருப்புப்பரூஉக்
கராசலத்துக்கயிலாயநாதனார்
விராவுமேன்மையெடுத்துவிளம்புவாம். (௨௫)

இராமநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௩ இ திருவிருத்தம் - ௧௪௯௨.

## கயிலாயநாதப்படலம்.

நாடுசேர்ச்சனற்குமாரமாமுனிவரனந்தி
நீடுநாண்மலர்ப்பதந்தொழுதிருண்மலமெறியச்
சாடுமாகயிலாயநாதப்பெருந்தகைதன
பாடுமான்மியம்பகரெனவன்னவன்பகர்வான். (௧)

தோற்றமீறிலாச்சிவபிரான்றுணையடிக்கமல
நாற்றமோடலரளிப்புனனகுமனக்குளத்தான்
சாற்றமேவுபன்முனிவராந்தாரகைநாப்ப
ணேற்றமார்முழுமதிப்புரைபராசரனென்பான (௨)

கஞ்சநாண்மலர்மேல்வனுலகமுங்கமலத்
தஞ்சமார்பிறனுலகமுந்தன்னுளத்தமையா
னஞ்சமாரமுதாக்கினோனருடனைநண்ணிற்
றஞ்சமாக்கிடுநாகையம்பதிவந்துசார்ந்தான். (௩)

தேவதீர்த்தநன்காடிநீறணிந்துவெந்தீய
பாவகாரியர்கருதொணாப்பழம்பரம்பொருளை
மேவநேர்சென்றுபருகுவான்போன்றிருவிழிநீர்
தூவமும்முறைவலஞ்செய்துபன்முறைதொழுதான். (௪)

எழுதுமோவியமெனுந்திருவுருவெடுத்துலக
முழுதுமேம்பிடுங்கருந்தடங்கண்ணிதன்முன்போய்த்
தொழுதுசுந்தரவிடங்கர்பொற்பாதமுந்துனைந்து
பழுதிர்தரப்பழிச்சுபுபன்முறைபணிந்தான். (௫)

அங்குநீங்கிநல்லமுதகும்பேசனையடுத்துப்
பொங்குகாதலிற்போற்றுபுமற்றவர்குணபாற்
றங்குதூயவாச்சிரமமொன்றமைத்தனன்றவத்தி
னெங்குநாடிமிக்காயினுந்தனக்கிணையில்லான். (௬)

அறியவாற்றியவாச்சிரமத்தினிதமர்ந்து
வெறியவாய்விடயநதபப்பொறியைந்தும்வீட்டி
நறியதாமனநளினத்துக்குறியொன்றுநவிலாக்
குறியதாஞ்சிவக்குறிபதிதரும்படிகொண்டான். (௭)

ஒளிசெயெண்ணிரண்டாயிரங்கோடிகளுற்றுக்
களிசெய்மாகயிலாயநாதனையுளங்கருதித்
தெளிசெயாயிரவருடம்வன்சிலையெனவிருந்தா
னளிசெய்தம்பிரானன்னவற்கருள்செய்வானமைந்தான். (௮)

கந்தமாமலர்க்கடவுடன்பதமுரட்கருதார்
சிந்தநோக்குமொண்ணேமியான்பதஞ்சிதைகாலு
நந்தமேலெழுந்தொளிமிகப்பரப்பிநிலத்த
தந்தமாதியிலானினிதமர்பெருங்கயிலை. (௯)

முனிவர்யோகியர்சித்தர்வித்தியாதரர்முதலோ
ரினியெமக்கெவன்வேண்டுவதென்றிறுமாந்து
துனிகெழும்பவத்தொடர்பினைமுதலறத்தொலைத்துப்
புனிதனின்னருள்பருகுபுகும்பொலிவினதால். (௧௦)

தரியவானவமுதலியகழற்றியாருயிருக்
கரியவின்னருட்சத்தியாலோங்கொளியண்ண
றெரியவாக்குமெய்ஞ்ஞானத்தின்பொலிவெனத்திகழ்ந்து
புரியவாமெழிற்பொலிவிருல்வளம்பொலிந்தன்றால். (௧௧)

தங்குதாபரசங்கமப்பரப்பெலாஞ்சார்புற்
றெங்குமாம்பொருளிருத்தலினிலங்கும்பொருளோ
நங்குதீர்ந்தவப்பொருட்டிடனன்குநல்கியதோ
பொங்கியாதுகொல்பெரிதெனநனிபொலிந்தன்றால். (௧௨)

தருவராருயிர்சிதைதரச்சக்கரநோக்கு
மிருவதாந்திறன்மால்பலவிண்ணப்பஞ்செய்ய
வெருவதாகியசிந்தையினமையநோநோக்கப்
புருவதெண்ணிவைகுறுமிடம்பொலிந்துளதொருபால். (௧௩)

ஓதிமத்திழிந்தன்புகழ்க்கொருந்ததாங்காலம்
யாதிதற்கிறையம்புயனீவிவொன்றிறைஞ்சித்
தீதில்வாயில்சார்கணுதிபாதம்மொடுஞ்சேர்ந்து
போதின்மேயவனவைகிடம்பொலிந்ததொருபால், (௧௪)

சந்தவிந்திரனுதியர்தனித்தனியிவர்ந்து
வந்தவூர்திகள்செய்மையேமருவுறநிறுவி
யந்தமாதியிலெங்கடம்பிரானருட்பார்வை
நந்தமேவுபுவைகிடநருவதையொருபால். (௧௫)

சினகரங்கிலமாயதுதெரிந்ததபுதுக்கி
யனகமேமிகத்திருவிளக்காதிகளமைத்து
முனகர்மேவுருச்சிவபிரான்றிருப்பணிமுயன்றோர்
கனகமேனியிற்பொலியிடங்கஞலியதொருபால. (௧௬)

பத்திமேவுறமலர்முதற்பல்லவுங்கொண்டு
சுத்தியைநதொடாவாகனமாதியதுலக்கி
யத்தியீருரியண்ணலையருச்சித்தவறவோர்
சித்திவாய்ந்துறப்பொலியிடஞ்சிவணியதொருபால். (௧௭)

சிவசரித்திரங்கேட்டவர்சிவன்றிருநாம
மவமறப்புகலன்பினர்சிவனடியவனாத்
தவமிதிற்பிறிதெவனெனப்பூசித்ததகையோ
ருவமையற்றிறுமாந்தமரிடங்களுமொருபால். (௧௮)

பரமதந்தராயதற்குரிவேடமேபயின்று
மரமுழக்கெழினதிற்பெருவாஞ்சையுளனமைத்தத்
திரமுறச்சிவனடிமலர்கருதியதிறத்தா
கரவறப்பொலியிடங்களுங்களுவியதொருபால். (கக)

ஆகுசைவர்முற்பற்பலசைவருமடுத்துப்
பூதிமேவியமேனியும்புனல்யொழிகண்ணுஞ்
சோதிதானபதிசிரசடைதயுமாயருடுதைநதார்
நீதிவாய்ந்தினிதமரிடங்கிலவியதொருபால். (உ0)

மனனுமின்னமாகயிலைமால்வரைபதிஞுருப
பனனுமாயிரங்கோட்டதப்பருப்பதமேலாற்
றன்னுபேரொளிகவமணிகுயிற்றியஞ்சுடர்சேர்
மினனுகேசரிதாயகுபுவிளங்குபீடதது. (உக)

மாசுதீர்ந்தவெண்பளிங்கெனவயங்குறுமேனித்
தேசுசாலுமாலெட்டிலக்கணங்களாறறிசமு
மூசுமாமையீசானமுனமுகமைந்துனமதாப்
பேசுமற்புதிலத்தெமுடிந்தசைதிசைபிறங்க. (உஉ)

அஞ்சுகூறுசான்மூவிழிதனித்தனியில்கு
மஞ்சுமேயசெந்தாமரைமலர்ககரம்பத்து
நஞ்சுவாணமுதலொருபதுநதனிதனிநயக்க
விஞ்சுவெள்ளியபூணுறானமார்பிடைவிளங்க. (உங)

அற்றமேதுமின்முடிமிசைச்சிறபிறையலங்கச்
சொறறவாகமப்பாப்பிடைத்தொகுத்தனவெல்லாம்
பெறறகோலநதிறறிகழ்தரபபிறங்குறைத்திங்க
ளுற்றபூசதநிற்காட்சிநநதருளினுறுரவோன. (உச)

வநதநாதனைகசண்டெழூந்துறுவரன்னுணங்கி
யநதமிலவீழ்பெறறிலனழுதுகாண்பதறகென்
றுநதவெணணியுடனைகருநெகநடைசரவுருகி
நநதமுனனின்றுநாகருளதிடத்துதிரவிலவான். (உரு)

கலைமுன்னுகியகருவிகடந்துகாரிருள்வா
யலைடனுக்கட்குக்கன்மமாநதொடக்கறபோகந
தொலைவுசெய்தழியாவின்பத்துறையருடுய
நலைவரின்மலதற்பரநின்னடிபோற்றி. (உசு)

அருநதவம்புரியோகியரகத்திருளகற்சி
பொருநதவாதியீறிலாதமர்பரிந்தியேபோற்றி
திருந்தலைம்பொழிசெந்திருவினைச்சமஞ்செறிந்தார்
வருந்தநோக்குறுதவர்க்கெதிர்வள்ளலேபோற்றி. (உஎ)

பொறிபுலன்கழன்றமைதரப்போதமேபொலிந்தா
ரறிவினிக்குருவானந்தவெள்ளமேபோற்றி
குறிகுணந்தவிர்பிரமமென்றருமறைகூறச்
செறியரும்பொருட்சின்மயப்பரஞ்சுடர்போற்றி. (௨௮)

மறையினந்தமுந்தொடரொணுவள்ளலேபோற்றி
யறையுமாலயனுறியரறியொணுய்போற்றி
நிறைவளம்படுநாகைக்காரோணத்துநிலாவி
யுறைபெருங்கயிலாயமேவுத்தமபோற்றி. (௨௯)

என்றுபோற்றிடுமுனிவனுக்கிருவிழிகளிப்ப
வன்றுநின்றவனவன்முகநோக்கிமிக்கன்பா
லொன்றுமுள்ளத்துநீபுரிபூசனையுகந்தோ
மின்றுவேண்டியதெவனுரையெனவவனிசைப்பான். (௩௦)

அடியனேன்றவம்புரியவிங்கிழைத்தவாச்சிரமத்
தொடிவினிபெருங்கயிலையோடுறைதரல்வேண்டு
முடிவதாயுளவாயுளின்முறைதபயானிவ்
வடிவினித்தமாய்மருவவும்வேண்டுமென்றிரந்தான். (௩௧)

இரந்தவாபெருங்கயிலையோடுறைகுதுமென்றுஞ்
சுரந்தமாதவமித்தலத்தியற்றியதுணிபாற்
பரந்தநித்தியத்துவமுநீபெறுகெனப்பணித்து
வரந்தவாவவற்பார்த்திறைபின்னரும்வழங்கும். (௩௨)

நாலெனபபுகல்யுகமிரண்டாயிரநடந்தாற்
சேலெனப்பிறழ்கண்ணமர்நாவற்கோர்திவசம்
பாலெனப்படாவதுபதினைநதொருபக்க
மாலெனகவொளாயஃதிரண்டுற்றதுமாதம். (௩௩)

அநதமாதமோர்பன்னிரண்டுற்றதோராண்டாம்
பந்தமில்லவவஃதைம்பதுறறதோர்பரார்த்தங்
கந்தவத்தகுபரார்த்தமோரிரண்டுறிற்கற்ப
முந்தவத்தினமேமலர்மிசையவனொடுங்கும். (௩௪)

இநதவண்ணநான்முகனொருகோடியரிறந்தா
லந்தமாயவற்கொருதினமதமுந்நூற்றறுபா
னந்தமேவலோராண்டதுநூறுநடந்தாற்
பந்தவாமுலைத்திருமகண்மணாளனும்பாறும். (௩௫)

செயிரின்மாறபுங்காலநின்னுடம்பிடைச்செறிந்த
மயிரோர்மூனறனைக்கோடியுளொன்றுபோய்மாயு
முயிர்வியக்குமிவ்வாறினைக்குதவினமாலென்
றயிர்கொளாழிநஞ்சயின்றவன்பின்னுமீதருளும். (௩௬)

அழுவனியாழ்பவரியாவரேயூராயினுமடைந்து
தவலிலாதவிப்பெருங்கயிலாயத்தைத்தரிசித்
துவமைதீர்தரத்தொழினவமரனைத்தையொழிவார்
நவமிலாம்பலபோகமுநயந்துதுய்த்திடுவார். (௩௭)

என்றுதம்பிரான்வாயிலோரீரிரண்டிலங்க
வொன்றுமப்பெருங்கயிலையிற்றிப்பியவுருவந்
துன்றுசோதிசாலிலிங்கமாயமர்ந்தனன்றொழுவார்
கன்றுவெம்பவத்தொடக்கறுத்துயர்கதிகாண்பார். (௩௮)

பாராசரப்பெயர்முனிவரன்றயப்பயனாக
விராவுமாகயிலாயநாதப்பிரான்மேன்மை
யொராதவன்பிறைஞ்சினனெழுமுனிவர்முற்பல்லோ
ராராவணிந்தவற்பூசித்தவனையுமறைவாம். (௩௯)

கயிலாயநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உஅ க்கு திருவிருத்தம் - ௧௫௦௧.

## எழுமுனிவர் முதலியர் பூசித்தபடலம்.

முழுவலிச்சனற்குமரமுனிவரனைத்தபிரானை
செழுமலர்ப்பதம்போற்றிநிகழ்பெருங்காரோணத்
தெழுமுனிவராமுதலிட்டோரினிதுபூசித்த
பழுதிலற்புதஞ்சொலெனவனையவனபகருவனால். (௧)

மன்னியபெருந்தவத்தவசிட்டன்முனெழுவோரும்
பன்னியபதிஞானப்பயன்புணர்தருமமொருட்டு
முன்னியதிருநாகைமுழுத்தலத்துறப்புகுந்தார்
நன்னியமத்தமரதீர்த்தநன்காடினரால. (௨)

புனிதவெண்ணீறணிந்துபோற்றுகண்மணிபூண்டு
கனிபுளத்தெழுத்தைந்துங்கணித்தனர்காரோணத்
தினிதமாபெருவாழ்வையிறைஞ்சுபுகருந்தடங்கட்
புனிவளாமகள்பாதம்பணிந்துபணிந்துசெய்தார். (௩)

அத்திருத்தளியெழுவாய் ‡ ஆவிருதியிற்குணபாற்
பதகியிறசிவலிங்கப்பதிட்டைசெய்தருச்சித்துச்
சித்தியெய்தினர்நினைத்திருப்பெருஞ்சிவஞான
முத்தியெய்துவதுளையமாதிதியைத்தொழுவோரே. (௪)

முழுவலிபெறவேண்டிமுயன்றபிராமிமுத
லெழுவருமாங்கெயக்கியிமையவர்புனல்படிந்து
செழுமுனிவரரிலிங்கத்தென்றிசையிலிங்கநிறீஇ
வழுவறப்பூசித்துவள்ளறனருளாலே. (௫)

‡ ஆவிருதி-பிரகாரம்.

எண்ணியவலிபெற்றாரிலுறுமவ்விலிங்க
நண்ணியதொழுசீலநயந்தவர்பகைமுருங்க
கண்ணியவலிபெற்றுக்கருதியபோகமெலா
மண்ணியவொருங்கடைவாரமருமதிசயிப்ப. (௬)

துன்றியபுகழ்க்கங்கைசுந்தரவிடங்கருக்குத்
தென்றிசையோரிலிங்கஞ்சிவனுறப்பதிட்டைசெய்து
நன்றியினருச்சித்துநயநதுவந்தாடுவார்
கன்றியவிடுபாவங்கழிதரவரம்பெற்றாள். (௭)

பொலிதருமவ்விலிங்கம்போற்றுபுதரிசிப்பார்
கலிதிரைபரபியெழுங்கங்கையையடைந்தாடு
மெலிவறுபயன்பெறுவார்விலகருந்தீவினையு
நலிதரவுயர்புற்றுநன்னலத்தினிதமர்வார். (௮)

ஆத்தகுமிலிங்கத்தின்றென்றிசையழற்கடவு
ளுத்தமவிலிங்கநிறீஇயுரனுறப்பூசித்துத
தத்துறச்சுடுதலினுலைவினைதபப்பெற்றான்
பத்தியினதுதொழுவார்பாறுவர்பாவமெலாம் (௯)

இருந்தவத்துயர்புண்டரீகனஞ்சலித்தேத்தும்
பெருந்தகைநைருதத்திற்பிறங்குமோரிலிங்கநிறீஇப்
பொருந்திறற்சூடுவான்போயவனாட்குகவே
ளருந்தவத்துயர்பூசையாற்றினனழகுறவே. (௰)

அற்புதப்பூசைபுரிந்தாரருணனிபெற்றான்
பொற்புயராறுமுகன்போற்றியவவ்விலிங்கங்
கற்புயர்கலைஞானங்கரிசறக்கொடுத்தலொடு
பற்பலபெருந்திருவும்பாலிக்குந்தொழுவார்க்கே. (௧௧)

பெருவலிச்சூரனாம்பிளந்தவனருச்சித்த
திருமலியிலிங்கத்தின்றென்றிசையோரிலிங்க
மருமலர்ப்பெருங்கோயின்மாமகடாபித்துப்
பொருவரும்பூசைசெய்துபுணர்ந்தனடிருமாலே. (௧௨)

பொறியருச்சனைபுரிந்தபுண்ணியவிலிங்கத்தை
நெறிமுறைதொழுதேத்துநியதியரிலம்பாடு
முறிதரப்பெருந்திருவமுயங்குபுபல்கிளையுஞ்
செறிதரவொப்புரவிற்சிறந்தவராய்ப்பொலிவார். (௧௩)

இன்னமூநாம்பூசையியற்றியவிலிங்கமுதற்
பன்னரும்புகழிலிங்கம்பலவுளகாரோணத்
துன்னரும்பெருமையெவருரைப்பவரெனமுடித்தா
னன்னலச்சனற்குமரனயர்ந்தடிபணிந்தெழுந்து. (௧௪)

தெரிந்தவித்துணைகொண்டேசிறந்ததித்தலமென்று
விரிந்தமெய்ப்புகழ்க்காயாரோகணம்விருப்புற்றே
னரிந்தவெவ்வினையடிகேள்விடையளித்தருள்கவெனப்
பரிந்தநெஞ்சினனாகிப்பண்புறப்பெற்றெழுந்தான். (௧௫)

கலமலிகடனாகைக்காமருகாரோணம்
புலமலிதரப்புகுந்துபொருந்தியதீர்த்தமெலா
நலமலிதரத்தோய்ந்துலங்கிளர்தலமனைத்தும்
வலமலிதரப்பணிந்துமன்னியமகிழ்ச்சியனாய். (௧௬)

கருந்தடங்கண்ணியொடுங்கலந்தமர்பெருவாழ்வைப்
பொருந்தநன்கடிதொழுதுவிடங்கனைப்பூசித்துத்
திருந்தமெய்ம்மயிர்சிலிர்ப்பச்சிந்தையுநெக்குருக
வருந்தவச்சனற்குமாரனுநற்பேறுற்றான். (௧௭)

எழுமுனிவரர்முதலோர்பூசித்தலிங்கச்சீர்
முழுதுரைத்தனம்வாதராயணன்மொழிப்படியே
செழுமையிற்பொலிநந்திநாதர்தஞ்சிறப்பாதி
பழுதறப்புகலுமெனப்பகர்ந்தனன்புகழ்ச்சூதன். (௧௮)

எழுமுனிவர்முதலியர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௨௫ இ திருவிருத்தம் - ௧௫௧௧.

## நந்திநாதப்படலம்.

முன்னுருத்தமுனிவனே, மின்னுமைமிசைத்தவர்
மன்னுநந்திநாதர்சீர், பன்றுகென்னப்பகருவான். (௧)

சூளதாயகயிலையின், வாளருமுன்வாயிலைக்
கோளவாயநந்திமா, காளர்நாளுங்காப்பவர். (௨)

தாயினாள்விநாயகர், மாய்தராப்பிருங்கியும்
பாய்வளங்கொடேன்றிசை, வாயில்காக்குமாண்பினார். (௩)

இருமருப்பிடபமும், பெருகுமாற்றன்முனிவருங்
கருதுமேலைவாயிலுக், கொருவிலாதகாவலார். (௪)

விடக்குவாயுறம்பெய். விடக்குமாற்றறகொற்றியு
மடக்கும்வீரச்சண்டனும், வடக்குவாயில்காப்பவர். (௫)

பேசநீளிக்காவலாம், பரசமுற்றெரீஇத்தரு
வாசனென்னுமாமுனி, யீசனைத்தொழப்புகா. (௬)

ஆசிருக்குமாவயிற், பரசுதற்குநோக்கிலான்
வரசுகோதயப்பொருள், விரசுவளசம்புகா. (௭)

விருத்தகாவேரியாழிமேவுமோர்தானத்தென்பாற்
பொருத்தமாயொளிரத்தானம்பூரணிசேர்ரூபமாயே
யருத்தமாஞ்சிவனுக்கென்றமைவிலாப்பிரியஞ்செய்யுந்
தருத்தவாவளத்தாலோங்கித்தழைப்பஃதெந்தஞான்றும். (௨௨)

வேறு.

மேவும்மாபெருங்கானம்விடுத்தகூ
ரேவுமுண்ணுழையாதென்றிமையவர்
நாவுமோதுமென்றேதலென்ஞாயிறதின்
பாவுமொண்கதிரும்படராவெனில். (௨௩)

## கலிவிருத்தம்.

திரிபு.

அம்புன்னாகத்தமர்தருப்போகமா — ம்
வம்புனாகமின்மாதவர்சேரவ — ண
வெம்புனாகமடங்கல்விருப்பி — னி
தம்புன்னாகமருங்குசரிக்கு — மே.

இ-ள், அம் புல் நாகத்து அமர்தருபோகம் ஆம் வம்பு—அழகுபுல்லிய தேவலோகத்தமராநின்ற வைந்தருவின போகமாகியநிலையில்லாமையை, உன, ஆகம் இல் மாதவர் சேர் அவண் புன்னாகம் மருங்கு—நினைக்கும் நெஞ்சமில்லாத பெரியதவத்தையுடையோர் சேர்ந்த வவ்விடத்துள்ள புன்னைமரத்தினபக்கத்து, வெம் புல நாகம் மடங்கல் விருப்பின் நிதம் சரிக்கும்—வெவ்வியபுலியும் யானையும் சிங்கமும் பகைமையின்றிநாள் தோறும சஞ்சரிக்கும்-எ-று,—ஐந்தருவூட்டும போகம் உண்போர்க்குப் புதிதாக விளங்குதலின், வம்பென்பதற்குப புதுமையெனப்பொருள் கொண்டு, போகமாகியபுதுமையை மனத்தினா லெண்ணுதலில்லாத மாதவரென மொழிமாற்றிப் பொருள் கூறினுமமையும். அஞ்சுசரிய மிருகங்கள் அவராணைவழி நடக்குமெனபார்-விருப்பினி தஞ்சரிக்குமென்றார். பகையின்மையென்னுங்காரணத்தை விருப்பெனக்காரியமாக்கிக்கூறியது உபசாரவழக்கு-ஓம்படுக்க ஒரிய நம்பியென்றாற்போல, ஆகமின்மாதவர் என்பது ஒருமைச்சினைப்பெயர்முதல்வினையோடு முடிந்ததனை வழுவமைதி - புல் நாகம்மடங்கலென இடைச்சொல்லானன்றிப் பெயரா னெண்ணப்படுஞ் செவ்வெண் ணின்றொகையு முற்றும்மையும்விகாரத்தாற்றொக்கன. (௨௪)

தந்தத்தானத்தறுகட்கறைய — டி
நந்தத்தானத்தமரருங்கண்ண — ரு
மந்தத்தானந்தரும்புகழ்கூறற் — கு
முந்தத்தானத்தநீங்கமுயலு — மே.

இ-ள், தந்தம் தானம் தறுகண் கறையடி நந்த—கொம்பினையும் மதத்தினையுங் கொடுமையினையுமுடைய யானைகள் பெருகுதலால், தானத்

து அமரரும் கண்ணரும் அந்த தானத்து அருபுகழ்கூறற்கு—தேவலோக த்துள்ள தேவர்களும் பொருந்துதற்கரிய வவ்வனமாகிய விடத்தினரிய கீர்த்தியைச்சொல்ல, நால் முந்த நத்தம் நீங்கமுயலும் - நாவானது முந் துதலால், அவித்தையாகியவிருளை நீங்குதற்குமுயலாநிறகும்-எ-று.—சொ ல்ல முந்தன், அவித்தைநீங்குமெனவே,சொல்லின் வரும்பேறுவலாயப்ப டாவென்பதுபொருளாற்றலாற்போந்தது. நந்த முநத என்னும் எச்ச ம் காரணப்பொருளில்வந்தது. அமரரும் என்பதினும்மை இறந்ததுத ழீஇ நின்றவுயர்வுசிறப்பும்மை. அந்த வென்னுஞ்சுட்டுத் திரிபு ,அவ்வன த்தின் பெருமையைக் குறித்துநின்றது. கூறற்கு எனபது பகுப்பப்பி ளவுபட்டுருபும்பெயரும்வேறாய் நின்றதொழிற்பெயர்போலாது, பிளவு படாதொன்று பட்டிசைந்து நிற்றலான் வினையெச்சம். (௨௫)

யமகம்.

ஆகமஞ்சரியாவயின்வேத ஞெ
டாகமஞ்சரியாதியரின்பமு ண
டாகமஞ்சரியார்தருவைகலொ ன்
றாகமஞ்சரியாமையுமார்வ ரே.

இ-ள்,ஆகமம் சரி ஆவயின்—சைவாகமங்கள் சஞ்சரிக்குமவவிடத்து, வேதனொடு ஆகம் மஞ்சு அரி ஆதியர்—பிரமனொடு மேகம்போன்ற மேனி யையுடைய விட்டுணுமுதலியோர், இன்பம் உண்டாக மஞ்சரி ஆர்தருவை கல் ஒன்று - தங்கடங்க ளுலகங்களி லனுபவிக்கு மின்பமுண்டாகவும்பூங் கொத்துக்கள் பொருந்திய பலதருக்கடோறும நிட்டைகூடி இராசதலொ ன்றுமாத்திரமோ,கமம் சரியாமையும் ஆர்வர்—(சிவானந்தபோகமாகிய) நிறைவுஞ்சாய்தராமறபொருநதுவர்.எ-று.—பிரமன் முதலாயினோர் தங் கடங்கள் பதங்களி னுகரு மின்பத்தை யருவருத்து நிட்டைகூடலும, சி வானந்தபோகமு மவ்வனத்துட் பொருநதுவ தொன்றமையால், அவரவர் பதங்களினும், அவ்வனம் மேன்மையுடைத் தென்பதுபோநதது. ஆகமம் தெய்வப்பகுதியதாதலின், ஈறுதிரியாதஃறிணைச் சொல்லா யுயர்திணைப பொருளை யுணர்த்திநின்றதோர் திணைவழுவமைதி - இழிவு சிறபபும்மை விகாரத்தாறறொக்கது. தொல்காப்பியம் இடைச்சொலலியல் - ௩௬-ஞ "ஏஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாயிற் பிற்படக்கிளவார் முறபடககிள த்தல் ,, என்பதனால் வைகலுமென உம்மைகொடாதொழிநதார். (௨௬)

குவலயத்தடந்தோய்துவர்கோற்ற ந
குவலயத்தடநதோளாவெங்கூற்றிசை க்
குவலயத்தடநதோவெனக்கூறுமு ற்
குவலயத்தடந்தோற்றங்குமைக்க வே.

இ-ள், வெம் கூற்று இசைக்குவல் அந்தோ அயத்து அடு எனை கூறுமு ன்—வெவ்வியயமனானவன் உனக்குச்சொல்லுவேன்றுயோ இரும்பாலாகி

யவாயுதங்களாற் கொல்வாயென்று தூதுவனைப்பார்த்துச் சொல்லுமுன், குவலயத்து அடம் தோற்றம் குமைக்க-பூமியின்கணுள்ள பொல்லாங்கு களையும் பிறவிகளையுங்கெடுக்கும்பொருட்டு, கொற்றம் ஈகுவலயம் தடம் தோள்மைந்தர் - வெற்றிவிளங்காநின்ற வாகுவலயமணிந்த பெரியதோ ளினையுடைய மைந்தர்கள், குவலயம் தடம் தோய்குவர் (அங்குள்ள) நீ லோற்பல மலர்ந்த பொய்கைதோறு மூழ்காநிற்பர்-எ-று.—இதனுலங்கு ள்ள தீர்த்த விசேடங்கூறினர் - சுட்டு அதிகாரத்தால் வருவிக்கப்பட்டு து. அயிம்-கருவியாகு பெயர் - அடு என்பது ஈறுகெட்டு நின்றதோர்முன் னிலைமுற்றுச்சொல் - தொ-எச்சவியல் - ருச-கூ " செய்யாயென்னுமுன் னிலை வினைச்சொல் செய்யென் கிளவியாகிட னுடைத்தே,, என்பதற்குச் சேனுவரையர்கூறிய கடாவிடைகளானுணர்க-கூற-முதனிலைத் தொழிற் பெயர்-குமைக்க-காரியப்பொருளில் வநத எச்சம். (உஎ)

இரண்டடிப்பாடகமடக்கு.

கண்டலங்ககனங்கவராவிரை க்
கண்டலங்ககனங்கவராவிரை க்
கொண்டலங்கண்டநாகங்குலாவு மே
கொண்டலங்கண்டநாகங்குலாவு மே.

இ-ள், கண்தலம்ககனம் கவரா—பார்த்தோர் கண்கள் வெளியைக்கவ ராமல்,விரைகண்டல் ககனம்கவிர் ஆவிரை—வாசனைபொருந்திய தாழங் காட்டினையும பிளவுபட்ட ஆவிரைகளையும், கொண்டு அலம் கண்ட நாக ம் குலாவும் - கொண்டமைதி பொருநதிய புன்னைமரங்கள்குலவாநிற் கும ; அங்கு கொணடல் அண்ட நாகு அங்கு உலாவும்—அவ்விடத்துச் சஞ்சரிக்கு மேகங்களை (தமக்கினமெனறு கருதி யவற்றை) பொருந்தப் பெணவெருமைகளங்கு உலாவும்-எ-று.—அம்-பதத்தொடுபதம் புணர்த நகணவநத சாரியையிடைச்சொல் - முதலொடு சினைகொற்றுமையுண மையிற் சினைவினை முதன்மேலேற்றிக் கவிராவிரையெனருர். சுட்டுத்திரிபு ஓரடியுளடுதது வந்தமையிற சொறபின்வருநிலையணி-தொ-பொருளதிகா ரம் மரபியல்-சுஙு-ரு " எருமையுமரையும் பெறறமுநாகே ,, என்பதனுல், நாகென்ருர் - மருத நிலத்திற் குரிய வெருமைகள் முல்லை நிலத்தி லுலா மென்றது புகழ்ச்சிப்பாறபடுதலின், இடமலைவமைதி - இது அடிமடக்கிசெ னினு மமையும். (உஅ)

முற்றுமடக்கு.

வஞ்சித்துறை.

தானமணக்கும், தானமணக்கு ம்
தானமணக்கும், தானமணக்கு ம்.

இ-ள், தானம் அணக்கும் தானம் மண் ணக்கும் தானம் மணக்கும்- தேவலோகத்தை விழுங்குதற்கண்ணுக்கும் அவ்வனமாகிய விடத்து மண் ணைத் தடவிச்செல்லாநின்ற யானை மதம்பரிமளிக்கும்-தானம் மணக்கும்

மந்திவிடத்துஞ் சுரபுன்னையினிடத்தும் மாதளையினிடத்தும், மணி கொண்டு உவப்புக்கொள் சந்து பனசத்தும் ; அழகு கொண்டு (கண்டோர்) உவகைகொள்ளு தற்குக்காரணமாகிய சந்தனத்தினிடத்தும்பலாவினிடத்தும, வண்டுகிண்டி மதுப்புனல் மாந்தும்—வண்டுகண் மூக்காலுழுது மதுவாகிய நீரையுண்ணுகிறகும்-எ-று.—சினைவினை முதன்மேலேற்றி, விண்டுநின்று மிளிர்கிஞ்சுகமெனுறா - சாரியையிடைச்சொல்லும் எண்ணும்மையுமிறுதியினின்று சொற்றொறுமியைந்த தமையிற் கடைநிலைத்தீவக வணி - அன்றி " ஒருசொன்னினறே தனித்தனியுதவுதல்,, என்னும் பிரிவினுளடக்கினுமமையும. (௩௪)

முரசபந்தம்.

ஒவ்வோரடி யொவ்வொருவரியாக நான்கடியு மெழுதி மேலிரண்டு வரியுந் தம்முட் கோமூத்திரியாகவும், கீழிரண்டுவரியுந் தம்முட் கோமூத்திரியாகவுஞ் சிறுவார்போகப்பட்டும, மேலவரி யிரண்டாம்வரியினு மூன்றுமவரியினும நான்காம்வரியினும், கீழ்ச்ற்றுமீண்டு மேனோக்கவும் கீழ் வரியினுமவமாறே மேலுற்றுமீண்டு கீழ்நோக்கவும் பெருவார் போக்கப் பட்டும, இந்த வாரானதும் நான்குவரியாகவருவது.

வஞ்சிவிருத்தம் - அடிமடக்கு.

புன்னையாரமைபாடலம, தெனனையாரமைபாடலம்
புன்னையாரமைபாடலம, தெனனையாரமைபாடலம்.

இ-ள், தென் னையார் அமைபு ஆள்தலம்—(தவத்தின்)பெருமைகொடாதமுனிவர் தங்கியாளுந்தலமாகிய வவ்வனம், புனனை ஆர் அமை பாடலம் தெனனை ஆரம்—புன்னையுமஆத்தியும மூங்கிலும்பாதிரியும் இலாங்கலியும் சந்தனமரமும், ஐபாடு அலம் புல் னை ஆர் அமை—அழகுபடுதலும்-அமைவுமுள்ள தருப்பைப்புல்லும (ஆகியவிவைமுதலியவற்றுற் கண்டோமனம) கனிதல்பொருந்திய வளமுடைமையால், பாடலம்—யாம் புகழ்ந்துபாடேம்(பாடுதற்கு முடியாதெனறபடி)-எ-று.—எண்ணும்மையுமஉம்மையெண்ணின கணனுருபுதொகுதல வரையப்படாமையால், உருபும வினைமுதல் வினையுந்தொகனி. அமைதி என்பதின் ஈறுதொககது. ()

சுழிகுளம்.

ஒருசெய்யுள் எவவெட்டெழுத்தாக நான்குவரி யெழுதப்பட்டுமேனின்று கீழிழிந்தும், கீழ்நின்று மேலேறியும் புறநின்றுவந்துணமுடிய வவ்வரிநான்குமேயச் செய்யுளாவருவது.

வஞ்சித்துறை.

அதவமராவார்மா, தவழுவவாயாகார்
வழுவல்புதையாவா, மவல்கனிபுவாரா.

இ-ள், அதவம மராஆர் மா கார் ஆயா தவழுவ(அவ்வனத்தின்)அத்திமரத்தினுங் கடம்பமரத்தினும் ஆத்திமரத்தினும் மாமரத்தினும் மேகங்

கள் சேடில்லனவாய்த்தழைவன;—ஆலமூலவல்புதையா—ஆச்சாமரங்கள் சாய்தலான்மறைவனவல்ல;—மவ்வல்கனிபுவாரா-வனமுல்லிகைக்கொடிகணெருங்கிப்பகுத்தறியத்தெரியாவாய் நிறைந்தன - எ-று.—வார்தல் தெரிதல்-மவல்-தொகுக்கும்வழித்தொகுத்தல். (௩௩)

மாலைமாற்று.

ஒருசெய்யுளையீறுமுதலாகக்கொண்டுவாசிப்பினுமச்செய்யுளேவருவது.

கலிவிருத்தம்

தேயாவாமாவாவாடாதே, தேசாமூவாயாவாறு தே
தேறுவாயாவாமூசாதே, தேடாவாவாமாவாயா தே.

இ-ள், ஆமா தேயா-காட்டுப்பசுக்கள் (பிணிமுதலியவற்றால்) தேய்வனவல்ல; ஆ-வாடாத-மற்றைப்பசுவும் (அவற்றால்) வாடாது; தேசு ஆம் மூவா யா ஆறு - ஒளிபொருந்தியமுதிராதயாவென்னு மரம் நீங்காது, தேன் நாவாய் ஆ ஆம் மூசாத-இருவினைதேறுனத (அடைந்தோர்)நாவினையுடைய வாயின்கண்ணுக (ஒழுகுதல்) உண்டாகும (அவ்வாறொழுகுதலிற்சிறிதும்) சாயாது; தேடா வாவா மா ஆயாது-தேடுதற்கரிய(பிறவிடங்களில்) தாவுதலில்லாத மாமரங்கள்கெடாது-எ-று. ஏகாரங்கள்தேற்றப்பொருளில்வந்தன—உவ்வனம் முனிவருறைவிடமாதலினங்கிருக்குங் காட்டுப்பசுக்களும் மற்றைப்பசுக்களும் பிணிமுதலியவற்றாற் கெடாவென்பார்-தேயாவாடாதுஎனறார், பஞ்சகவ்வியப்பொருட்டாலினம்பற்றியவர்களோம்புதலில,தேயாவாடாதுஎன்றொணினுமமையும். தெய்வத்தன்மையுளவென்பார் தேசாமூவாயாஎன்றும், தேறுசாதென்றும், மாஆயாதென்றுங்கூறினார்-ஆவென்றுமுதனிலை வினையெச்சப்பொருளில்வந்தது-ஈறுகெட்டதெனினுமமையும். (௩௪)

காதைகரப்பு.

ஒருசெய்யுள் முடியவெழுதப்பட்டதனிறுமொழியின்முதலெழுத்துத்
தொடங்கி யொவ்வோரெழுத்திடையிட்டுவாசிக்கப்
பிறிதொருசெய்யுள் போதுவது.

சாறுபாயதடாவமையிரளித் த
தோதபோயசமேகதகளிப் பு
மீறுமேயமராகவிதேளிப ப
போதுதுயவளாவியமாளிக் க.

இ-ள், தயா அமை சாறு பாய-தயாவமைந்த சாறுத்தன்மைகள் பரவின; துளித்த கோது போய சமேதந்த-கெடுதலையுடையகுற்றந்தீர்ந்தநல்ல யாகங்களையுடையன; வாளிப்பு மீறு மேய மரா கவி தேளிப்ப-மேற்கட்டிபோல மேலிடத்துப்பொருந்தியமராமரங்கள்குரங்குகள்(பயில)உவப்பன;—மாளிக்க துய போறுவளாவிய-கண்டோரியாவருமபிமானிக்கத்

தூயமலர்கள் கலந்தன-எ-று. ஆனித்தல்-கெடுதல்-வாணிப்பு-மேற்கட்டி-தேனித்தல்-உவத்தல்-மேத்தத-தொகுக்கும்வழிததொகுத்தல்-பாய தேனிப்ப வளாவியன, வினைத்துறைபொருளின்றொழிற்பன்மைகூறிமேதத்த என, அவ்வினைதனையே பன்மையாகக் கூறியதென்னையெனின்; யாவுங்க முதல்அவ்வினைத்தின முனிவருறைவிடமெல்லாமாதலான்முதலொழிசினைக் கொற்றுமைநோக்கிச்சினைப்பன்மையைமுதன்மேலேற்றிக்கூறினானென்க, மராதேனிப்பன, உயர்திணைப்பொருளின தொழிலையஃறிணைப்பொருண் மேலேற்றிக்கூறியது மரபுவழுவமைதி. (௧௫)

காதைகரயபிறகரந்தது.

## வஞ்சித்துறை.

கனியளாயது, நனிவிராயது, புனிதமேயது, தனிமையாயது. (௧௬)

இ து வெ ளி.

## திரிபங்கி.

ஒருசெய்யுளாயுருப்பமைந்தஒருபொருள்பயப்பதனைமூன்றாகப்பிரித்து
எழுதிவெவ்வேறுசெய்யுளாய்த்தனித்தனியேபொருள்பயந்து
தொடையுங் கிரியையும் தனித்தனியே காணவருவது.

நேரசைககட்டளைக்கலித்துறை.

கூடியபூநிறைகொம்பரொலாங்குளிர்வானணை வு
நீடியகாய்குறையெனபதுபோமிளிர்நேயமி கு
நாடியசீர்நறைகொண்டனவேதளிரானடமா ம
பாடியவேமறையங்கமுலாம்வெளிபாறிய தே.

இ-ள், கூடிய பூ நிறை கொம்பரொலாம் குளிர் வான் அணவும்-நெருங்கியமலர்நிறைந்தகொம்புகளெல்லாங்குளிர்ந்தவானத்தைத் தடவும்; குறையென்பது போம் காய் நீடிய(அதுவன்றியும் குறையென்பதொழிந்த காய்களானிறைந்தன; — மிளிர் நேயமிகு நாடிய சீர் நறை கொண்டன-விளங்காநின்ற நேயமிககவாராய்ந்தசிறப்பினையுடையதேனையுங் கொண்டன; தளிரால நயமாம்—தளிர்களாலு மழகாகும்; வெளிபாறிய து-அவற்றால் வெளியிடந்தோன்றுவது மின்று; பாடிய வேம் மறை அங்கம் உலாம்-ஓதுதலாலின்பத்தை (பயக்கும்)வேதமுமவேதாங்கமும் (அவ்விடத்து) சஞ்சரியாநிற்கும்-எ-று. இயக்குவான்றொழிலையியங்குபொருண்மேலேற்றியிவ்வூர்க்குக்காணம்வருமென்றாற்போல,மறையங்கமுலாமெனவுடையான்றொழிலையுடைமைமேலேறறிக்கூறியது, தொ-சொ-எச்சவியல்-௬௬-கு "வாராமரபினவரக்கூறுதலும்,,எனபதில்ஒன்றினமுடித்தலென்பதனாற்கொள்க. (௧௭)

## இக்கவியுட்பிரிந்தசெய்யுள்கள்.

### வஞ்சித்துறை.

கூடியபூ
நீடியகால்
காடியசிர்
பாடியவே. (ரு ௪)

விறைகொம்பரொலாம்
குறையென்பதுபோம்
விறைகொண்டனவே
மறையங்கமுலாம். ()

குளிர்வானணவு
மொளிர்சேயமிகு
தளிரானயமாம
வெளிபாதியவே. (௬0)

இவைவெளி

### மாத்திரைச்சுருக்கம்.

ஒருபொருள்பயக்கும்ஒருசொல் ஒருமாத்திரையைக்குறைப்ப
வேறுபொருள் பயக்குஞ் சொல்லாய்வருவது.

கலிவிருத்தம்.

ஒடியுமாத்திரையொன்றுடைத்தாத — வி
மடியுமொன்றுடைமாந்தருச்செய்தி — ல
கடியுமொன்றுடைக்காவிகையாற்கிழி — த்
திடியுமொன்றுடைக்கிலகமேய்க்கு — மே.

மாத்திரைஒன்று ஒடியும் உடை தாதகி-ஒருமாத்திரை குறைதலுடைய ஆத்தி, ஒருமாத்திரைகுறைதலுடைய ஆத்திஎன்றமையால், அத்திஎன்றாயிற்று. அத்தி-யானைகள், மடியும் ஒன்றுஉடை மாந்தரு-ஒருமாத்திரை மடிதலையுடையசூதம், ஒருமாத்திரை மடிதலையுடையசூதம் என்றமையால், சுதம் என்றாயிற்று.சுதம்-கெடுதியை, செய்தில-எதிர்ந்தோர்க்குச்செய்திலவாய், கடியும்ஒன்று உடைகாவி-ஒருமாத்திரை கடிதலையுடையகானம், ஒருமாத்திரை கடிதலையுடைய கானமெனறமையால், கனம்என்றாயிற்று. கனம மேகத்தை, கையாற்கிழித்து—துதிக்கையாற்கிழித்து, இடியும் ஒன்று உடை கிலகம்-ஒருமாத்திரைகுறைதலையுடையஆப்பு, ஒருமாத்திரைகுறைதலையுடைஆபபு என்றமையால், அப்புஎன்றாயிற்று. அப்பு நீரை, ஏய்க்கும்(ஒழுக்குவித்தலால் அம்மேகத்தை) ஒத்துத்தோன்றும்-எ-று.யானைகள் எதிர்ந்தோர்க்கூறுசெய்திலவாய் மேகத்தைத்துதிக்கையாற்பற்றிக்கிழித்து, அதினின்றும் நீரையொழுக்குவித்தலால் அம்மேகத்தையொத்துத்தோன்றும் என்பது பொருள். தம்மளவிற்குறைதலால், ஒருமாத்திரையையுடையன, மறறையவற்றிற்குமிவ்வாறேயேற்குமாறுபொருள் கூறினுமமையும். ஒடியும் மடியும் கடியும் இடியும் என்னும் எச்சங்களும், முதனிலைபிரிந்த தொழிற்பெயராய் உருபேற்றுவந்தன. பின்னர்க்கூறிய வுரையுள், ஒடியும்முதலியஎச்சங்கள்காரணப்பொருளில் வந்தன.ஒன்று எண்ணுப்பெயர். (௬௧)

மாத்திரைவருத்தனே.

ஒருபொருள்பயக்கும் ஒருசொல் ஒருமாத்திரைபெற்று
வேறுசொல்லாய்ப் பொருள்பயந்துநிற்பது.

ஒன்றுமாத்திரையொன்றியபூமி யா
லொன்றுசேர்விண்ணவருணவோங்கு வ
வொன்றுசேரவொளிருமிழையெ லா
மொன்றுசேரும்விளர்ப்புற்றுயரு மே.

ஒன்று மாத்திரை ஒன்றிய பூமியால், ஒருமாத்திரைகூடிய நிலத்தால், ஒருமாத்திரைகூடிய நிலம்என்றமையால், நீலமென்றாயிற்று. நீலத்தால் குவளைமலரால், ஒன்று சேர் விண்ணவருணவு-ஒருமாத்திரைகூடிய தேவருணவு (தேவருணவு) அவி-ஒருமாத்திரைகூடியவென்றமையால், ஆவியென்றாயிற்று. ஆவி-பொய்கைகள் ஓங்குவ - விளங்குவன; ஒன்று சேர-ஒருமாத்திரைகூட, ஒளிருமிழை-விளங்குங்கலம், ஒருமாத்திரைகூடவிளங்குங்கலம் என்றமையால், காலம்என்றாயிற்று. காலமெலாம் - அறுவகைப்பெரும்பொழுதும், ஒன்று சேரும் விளர்ப்பு-ஒருமாத்திரை கூடிய வெண்மை (வெண்மை) சிதம் ஒருமாத்திரைகூடிய என்றமையால்,சீதம் என்றாயிற்று. சீதம்-குளிர்ச்சியை, உற்றுஉயரும்-பொருந்தி (அவ்வனத்தில்) உயர்ந்துதோன்றும்-எ-று. மரச்செறிவானும் மேகங்கள்படிதலானும் பொய்கைமுதலியவற்றின் மிகுதியானும் எப்போதும் ஒருதன்மையவாய்க்குளிர்ந்திருக்கும் என்பார் காலமெலாம் சீதமுற்றுயரும் என்றார். பொதுமைநீங்கியஃறிணைக்குரித்தாய்நின்ற எல்லாம் என்னும் பண்மைப்பெயர் வினைமுதல் வினைகொண்டுமுடிதலுமன்றிக்காலமென்னு முதற்பொருளின் சினையாய அறுவகைப்பொழுதினும்நின்றது. (சஉ.)

பிறிதுபடுபாட்டு.

ஒருசெய்யுளினடியையுந் தொடையையும் வேறுபடுப்பச் சொல்லும்
பொருளும் வேறுபடாது, அச்செய்யுளே வேறொருசெய்யுளாய்வருவது.

மேலாடுசோலைவிளையாடுபல்வண்ட ர்
காலாடுதோறுங்கதித்தேறியோலா டு
நூலாடுமார்பர்நண்ணிநோற்று யு
காலாடவாலாடுநாப்பணமைந் தே..

இ-ள், மேல் ஆடு சோலை விளையாடு பல்வண்டர்—விண்ணுலகத்திற் றோய்ந்த அங்குள்ள சோலைகளில் (தேனுகர்ந்து) விளையாடாநின்றபலவகைப்பட்டவண்டுகளும், கால் ஆடுதோறும் கதித்து ஏறி ஓலாடும்—காற்றுவீசுந்தோறுமதிகரித்துச்சென்று முழங்கும்;—நூலாடுமார்பர் நண்ணி நோற்று ஆயும் கால் ஆட நாப்பண் அமைந்து ஆல் ஆடும்—உபவீதம் விளங்கும் மார்பினையுடைய முனிவர்கள் நோன்புபூண்டு பொருந்திய

## கருமன்பூசித்தபடலம்.

பாயமலமுமதன்வேரும்பறித்துயர்ந்த
தூயபெருமுனிவர்சூதமுனியைப்பணிந்தே
யாயதருமனருச்சித்தவண்ணமெவ
னேயமருவச்சொலெனவந்தமுனிநிகழ்த்தும். (௧)

திராவிடதேயத்துச்செறியும்வணிகன்
பராவுதருமனெனும்பேர்படைத்தான்
விராவுதாய்தந்தைசிறுபோதேவீய
வராவுவறுமைக்கிலக்காயழிவான். (௨)

பொல்லாவறுமைபுகுந்தழுக்கப்பட்டுப்
பல்லாரகத்தும்பலியேற்கும்வாழ்க்கை
யொல்லாதகொல்லெனவொழிக்குந்திறம்பூணா
னல்லாதரவினயந்துமேற்கொண்டான். (௩)

பலியுணவியாரும்பரிந்திடாவண்ண
மெலியமுடம்பெல்லாம்வெண்குட்டமேவி
நலிபிறநோயுநடுங்கவுடற்றக்
கலிவறுமைமூழ்கித்தலங்கடேர்த்திரியுநாள். (௪)

பஞ்சகந்தகசேடபரமூர்த்தியென்றழலும்
வஞ்சமனப்புர்ராபிடகத்துவாஞ்சையனாய்
நஞ்சனிகருமமாகொள்கைநண்ணினு
னஞ்சவிலம்பாடிறத்தலாங்கருநுணிந்திலான். (௫)

சின்னாள்கழியவதினின்றூர்திரிந்தாரு
யெனனுணக்குவருமேற்றமெனக்கவல்வான்
பன்னாளொழியப்பளகுதவிர்கீறணிந்து
நன்னாளுறவுற்றானாகைக்காரோணத்தே, (௬)

ஆயகாரோணத்தடிகடிருக்கோயின்
மேயபலிபீடமிம்வெண்சோறெடுத்தயில்வா
னேயமுறவுட்புகுந்தானீண்டபசியுருத்த
மாயவுடல்சோரமாழாந்துமண்வீழ்ந்தான். (௭)

வீழ்ந்தானைநோக்கிமிகவிரங்கியெம்பெருமான்
றாழ்ந்தானமையென்றுதாவாவருள்செய்தான்
வாழ்ந்தானெழுந்தான்வறுமைவறுமையுறப்
போழ்ந்தானுடம்பிற்புணர்நோயெலாமொழிந்தான். (௮)

அந்தகரத்தனிமாளிகையாதி
யெந்தவளமுமியைந்தான்குபேரனினு
சந்தவமைசெல்வமனிவாய்ப்பநற்குணசம்
பந்தமனைவிமகவோரோடும்பரவினான். (௯)

வந்தாருக்கன்னமீயநன்மைசிதைத்தலினு
னொந்தாருக்காசைதருவன்மற்றாபிறவு
மந்தார்வணிகனைவாவியருளுவான்
கந்தார்களித்தூசர்சட்புநனிகைக்கொண்டான். (௧௦)

எணஞுவறுமையிடியைர்த்துஇரிந்தானளக்க
வொண்ணாத்திருவமுடையானேயாயினு
னண்ணுவரசேயென்னாமுதேயெனயார்க்குப்
பணணுவருளும்பரமற்குளதேயோ. (௧௧)

வளைகடலிற்பல்கலங்கள்வந்துவந்துசெல்லு
மனையுமவறருலமைபொருளும்பல்ல
விளைநிலத்துநாளும்விளைபொருளும்பல்ல
வுளைவில்வணிகறுகுறைவளபபாரார். (௧௨)

எங்குமவன்சத்திரங்களெங்குமவனீர்ப்பந்த
ரெங்குமவனாலயப்புரிகழக
மெங்குமவனாலினிதியற்றுங்கல்யாண
மெங்குந்தருமமெனிவிட்டபேர்காரணமே. (௧௩)

இந்தவிதமபொலிவானெங்கள்காரோணருக்குஞ்
சந்தக்கருந்தடங்கண்ணம்மைக்குந்தாவாத
பந்ததிருப்பணிகள்பல்லபுரிந்துவந்தே
யந்ததினமுந்தியடைந்தினிதுவாழ்ந்தனனே. (௧௪)

ஆபதருமனடைபேறெடுத்துரைத்தாம்
போயபொலிவிறபுரோகிதனெனபாணொருவ
னேயமருவநிகழ்காரோணதநடைந்து
நீயவொருவிததிகழ்ந்தகதைசெப்புவாம். (௧௫)

தருமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம ௩௦ இ திருவிருத்தம - ௨௨௬௧.

## புரோகிதப்படலம்.

செங்கனெடுமாலுந்தேருந்திருவடியை
யங்கணிதயத்தழுத்துவார்சூதமுனி
பங்கயப்பாதமபரவிப்புரோகிதன்யா
ரங்கவன்பேறேதுகொனவந்தமுனிபுகல்வான். (௧)

தென்னாடுகாக்குஞ்செழியர்குலத்தொருவன்
மின்னாடும்வேல்வலத்தான்வென்றிப்பெரும்பூணன்
பொன்னாடுறுவோர்புகழுமொருபுண்ணியனாட்
சென்னாடுதொற்கைத்துறைப்படைத்தமுழ்கினுன் (௨)

அந்தச்சமயத்தத்தபுரோகிதன்கை
யெந்தப்பொருளுமெடுத்தாளியுதவி
மூந்தக்கொடுத்திமுழுதுமக்றயோர்க்கென்று
னுந்தக்கொடியனுடன்பட்டுவாங்கினான். (௩)

காற்கூறுநல்கித்கழித்தெஞ்சியவாமுக்
காற்கூறுபொன்னுங்கவர்ந்தத்தனக்கேயென்மன்
பாற்கூறுநல்லோர்பழிமொழியோடாக்கினனைப்
பாற்கூறுசெய்யவருபாவமுமஞ்சாக்கயவன். (௪)

பொல்லாத்துரோகம்புணர்தலினான்மறறவனை
வெல்லாகக்கொடுங்காலன்வீந்தநாண்மிக்கொறுத்துக்
கல்லாக்கயவர்பெறுங்காணியாங்கும்பியெலாஞ்
செல்லாதுயரடைந்ததேம்பச்செலுத்தினான். (௫)

ஆவாதுரோகமனுவாற்றுதலுந்தீதென்னு
மாவாநமனாரடர்த்தல்கொடிதென்னு
மாவாநிரயமழுந்தறகாதென்னு
மாவாவறியாமையால்வினைநதீதென்னும். (௬)

அஞ்சியவித்துன்பமனுபவித்தவெங்கொடியோ
னெஞ்சியதாக்துய்ப்பபானிருங்கடல்சூழ்வைப்படைந்து
நஞ்சியனுந்துளபபிறவிபலநணணித்
துஞ்சியபினனுநதொலையாதசேடத்தால. (௭)

இரங்கும்பிரமவிராக்கதனேயாகி
யுரங்கொள்கபிலனுறைகுழனுறறுத்
திரளகொளொலியெழுப்பித்தேம்பியழுதான்
வரஞ்செயவனும்வரவுணாத்தியென்றான். (௮)

உள்ளவனைத்துமுணாத்தானறுசேட்டுக
கள்ளமறுக்குமுனிகாரோணநீயடைந்தோர்
தெள்ளறலின்மூழ்கிற்றீருமையென்றுரைகை
அள்ளவெழுந்துதுடிதுடித்துபபோயினான். (௯)

பாரோரும்விண்ணோரும்பல்லோருமேத்தெடுக்குங்
காரோணமேவிக்கமலமலர்க்கிழவன்
சேரோகையாணமைத்ததீர்த்தக்கரையமர்ந்தா
னோரோவொருவனடைந்தப்புனன்மூழ்கி. (௧௦)

ஈரம்புலரவிருஞ்சிகையைத்தட்டலுமா
காரத்தொருதிவலைநண்ணிற்றிவன்றலைமேல்
வீரக்கடற்புடவிமேன்மேலதிசயிப்பச்
சோரத்துயருருப்போய்த்தெய்வவுருப்பெற்றான். (௧௧)

தானுமதிசயித்துத்தாவாமதிழ்ச்சியெழு
மீனுஞ்சிவலோகமேவப்புன்றூழ்தி
வானும்பிறவுமதிக்குங்காரோணத்தெங்
கோனும்பலாய ‡ குழகனடிபோற்றுவான். (கஉ)

ஆதிபுராணரடிபோற்றியன்பர்வினை
காதியருளுங்கருந்தடங்கணம்மையையு
நீதியுறப்பணிந்துநேயமிகப்பெருகச்
சோதியமர்மற்றைத்தலமுந்தொழுதெழுந்து. (கங)

பொன்செய்விமானமெதிர்போதவதினிவர்ந்து
மின்செய்குழைமருங்குன்மேனகைமுன்னோர்பலரு
மென்செய்பணிவெனுறெதிர்வந்துகைகுவிப்பத்
தென்செய்சுவர்க்கத்திருநாடுபோயமர்ந்தான். (கச)

பொல்லாவினைசெய்புரோகிதன்காரோணத்தை
நல்லாதரவினயந்துற்றபேறுரைத்தாம்
புல்லாத்தவஞ்செய்நிருகனெனும்பூமான்
வெல்லாவுவபின்மிகததுனேநததோதுவாம். (கரு)

புரோகிதப்படலம் முற்றிற்று.

ஆ படலம ௩அ ஐ திருவிருத்தம்-௩உ௭௬.

## நிருகன்பூசித்தபடலம்.

துன்னியமாதவர்சூதமாதவன்
மின்னியமலரடிவிரும்பிப்போற்றுபு
பன்னியநிருகன்யாரவனயன்பண்புள
மன்னியபுகலெனவவன்வழங்குமால். (க)

பொருதிரைப்புடவியாண்மன்னனபொன்னவிர்
தருகழற்காலினன்றயங்குமோலியா
னிருகனென்றியாவருநிகழ்த்தும்பேரினு
னருமநறபெறுவதறகாசைமிகருளான. (உ)

மறையவர்முதலியோர்வகுத்ததானுங்க
ளிறைதரவியறறியநியமம்பூண்டுகோன்
பறைவதுசெய்துமாதீர்த்தமாடியு
முறைமுகமுனைவயிற்றுதிப்பக்கண்டிலான். (ங)

காண்டவாரணியத்தக்கடிகேப்புக்கவன்
மாண்டவாரழற்புன்றூழ்கிவாலுற
நீண்டமாலுணர்வருநிமலத்தாண்மனம்
பூண்டவாம்பெருந்தவம்புரியுங்காலையில். (ச)

‡. உம்பலாய - பிரணவகுஞ்சரமாகிய.

உருவில்வாக்கொன்றுகாரோணத்தினுறைப்
பொருவின்மாதவம்புரிபோதியென்றது
வெருவிலம்மொழியுணர்ந்தெழுந்துவேந்தன்வான்
றருவின்மன்பொலியுமத்தலத்தைச்சார்ந்தனன். (ரு)

உள்ளபஃறீர்த்தமுமுவந்துமூழ்கினு
னுள்ளபஃறலங்களுமொருங்குபோற்றினு
னுள்ளலர்வறியராமும்பர்தீர்த்தப்பா
லுள்ளமிக்குவப்புறவுற்றுநோற்றனன். (கா)

சிலபகலருந்தவஞ்செய்யவெம்மையா
ணிலவணிசடைப்பிரானெர்வந்தெண்ணிய
பலமவனடைதரப்பாலித்தானருள்
குலவரசனுமகிழ்கூர்ந்துபிற்றைநாள். (எ)

திருந்துகாரோணஞ்செல்வனாதற்குங்
கருந்தடங்கண்ணிக்குங்கதிர்விடங்கர்க்கும்
பொருநதுபல்பணிபரிவட்டம்பொற்புற
வருநதவத்தரசர்கோனன்பின்வீசினன். (அ)

விடைகொடுதன்பதிமேவிமைந்தனைத்
தடையறப்பெற்றுளந்தவாமகிழ்ச்சியி
னிடையறத்தனைநதுநாளிற்றினைற்றைகருங்
கடையுறுச்சிவபுரங்காணிகொண்டனன். (கூ)

மகப்பெறுவாஞ்சையினிருகன்வந்துநன்
இகப்பெருந்தவஞ்செய்ததெடுத்துச்சொற்றனந்
தகப்பயனொருசண்டதருமனுற்றது
நகப்புகல்வாமுளநயந்துகேண்மினே. (க0)

நிருகன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருஉ இ திருவிருத்தம்-உஉஅகூ.

## சண்டதருமன்பூசித்தபடலம்.

வினைமுதலறத்துமித்துமினிர்பரபோதந்துய்க்கு
நனைமலர்வனப்புவாய்ந்தநைமிசமுனிவர்குதன்
புனையடிவணங்கிச்சண்டதருமன்சீர்புகலுகென்ன
வனைநிகரனையானுள்ளத்துவகையினறையலுற்றான். (க)

மறையவர்குலத்துவந்தான்மறைமுதற்கலையுணர்ந்தா
னிறைதவவொழுக்கம்வாய்ந்தானிதியேகருதிநிற்பான்
முறைமையிற்றிறம்பல்செய்யான்மூர்க்கரோடுறவுபூணான்
றறையிலைச்சிறந்தான்சண்டதருமனென்றுரைக்கும்பேரான் (உ)

அனையவனினையனுக்கயமானான்முற்பவத்திற்செய்தீ
வினைபயனருத்தப்புக்காலியரவரோவிலக்கவல்லார்
துனையநல்லொழுக்கமெல்லாந்தொலைத்திடுங்காமவேட்கை
மனைவயினூடங்காதாமிகலிர்த்தான்மேலுமேலும். (ங)

பரமடமாதரியாவராயினும்பரிவிற்புல்லி
வரமுறக்களிப்பானோநாட்பழையர்தமமனையிற்புக்கோர்
குரவலர்கூந்தலாடனொடுங்கைகடழுவிதுய்த்தான்
விரவியகாமவேட்கைவீநதீராநசையிககனறே. (௪)

கடுமுதுவேனிற்காலத்தாகநோய்கனற்றலாலே
வடுவின்மோருண்டோவென்றுவினவவமமடந்தைநல்லாள்
படுகண்மொண்டருந்துகென்றுகொடுத்தனள்பாரானுண்டு
விடுகள்ளென்றீற்றிற்றேர்நதுவெகுண்டனன்வெளிவாதானே. (ரு)

வந்தவனமறையோர்பாற்போய்வந்தபாதகமுரைத்துச்
சிந்தவோர்கழுவாய்கூறிறசிறியனேனுயவேனென்று
னநதணர்தூயவானெய்யழலெழககாயச்சிவாயி
லுந்தவிப்பொழுதுவிட்டாலொழியுமித்திமையெனறார். (சு)

அன்னவனதுவேயாற்றியாவிமாய்ந்திடத்துணிந்தான்
றன்னமர்தநதைகேட்டுசதான்விரைநதோடிவந்தே
யென்னசெய்குதிநீயானுமிறப்பனினமுன்னமொன்றுண்
பின்னொன்செய்துமெனறுபேதுறறுக்கவலுங்காலை. (எ)

மொழிதவப்பெருமைகூர்சாண்டில்லியமுனிவனபோநது
கழியழனெய்யுண்ணுதிகாரோணத்தலததடைநது
பழிதபுதேவதீர்த்தம்படிந்தனையாயிறபாவ
மொழியுமென்றுரைத்தான்சண்டதருமனங்குடனேசென்றான். (அ)

புண்ணியதேவதீர்த்தம்புக்கினிதாடலோடு
மண்ணியகள்ளுண்டோடமகன்றனையென்றோர்வாக்கு
நண்ணியதிறம்பூதற்றுநயநதுபல்புனலுந்தோயநது
கண்ணியதலங்களெல்லாந்தொழுதுகாரோணத்துற்றான். (கூ)

கருந்தடங்கண்ணிபாகக்காரோணப்பெருமானுரைத்
திருநதாளிறைஞ்சிப்போற்றித்திருவருணிரமபப்பெற்றுப்
பொருந்துதனுறையுண்மேவிப்பொறபவாழ்நதிருந்தபினனு
மருநதவக்கயிலைமேவியளப்பருமினபநதுயததானே. (கo)

தாவருந்திருக்காரோணத்தலஞ்சண்டதருமனுற்று
மேவரும்பேறுபெற்றவிதத்தினையெடுத்துச்சொற்றாம்
யாவரும்புகழான்மிக்கபத்திரசேனன்போந்து
தேவரும்வியப்பப்பெற்றபேற்றினைச்செப்புவாமால். (கக)

சண்டதருமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருஉ இ திருவிருத்தம் - உஉஎ.

## பத்திரசேனன்பூசித்தபடலம்.

பணையயாருபாகத்தெம்மான்பங்கயப்பாதமுன்று
முளையனைமுனிவர்க்குதனெண்மலர்ப்பாதம்போற்றிப்
புனைதவிர்காரோணத்திற்பத்திரசேனன்போந்து
வினைதரப்பெற்றபேறுவிளம்பெனவவன்விளம்பும். (க)

இக்குவாகன்குலத்திற்றோன்றித் தவளிகவின்மிக்கா
ளக்குவாள்விதிர்த்தவ்லாடுகயிலொளுநடுக்கமெய்தப்
பக்குமாற்றலர்களோடும்பத்திரசேனனென்பான்
திக்குமேவியசீரன்றனில்லறஞ்சிறப்பச்செய்வான். (உ)

ஒருபதுமவதியென்னும்பெயரினளொழுக்கமிக்கா
டிருபதுமினியோவெனச்சிறப்புறவனப்புவாய்ந்தா
ளிருபதம்பதிமுறைத்தீர்த்திலகுமாதேவன்றன்க
டருபதுமங்கொண்டென்றும்பூசிக்குந்தன்மைமிக்காள். (ங)

அன்னநன்மனைவியோடுமேடங்கலரியேறனைய
மன்னனன்கமையக்கூடிமாவழிவாணாளைச்சம்
பன்னரும்புகழ்சால்காஞ்சிப்பதியினமருவியாரு
முன்னருஞ்செங்கோலோச்சிமுறையுளியாளுகாளில். (ச)

பூவலர்பலருமொன்றிப்பழுங்கழுக்காறுபூண்டு
கரவறுமினவொடாளுகைகருதினராகவல்லே
விரவினர்வனைந்துகொலைநிமிகுகறைகூவினனு
ரரவணிபயற்கன்பாயபத்திரசேனனுயக்கூ. (ரு)

மாவடியுலகமீன்றாளருச்சிக்கவருமணாளல்
பூவடிவணங்கியேத்திப்புரவலர்பலருமொன்றித்
தாவடிகொண்டுமேன்மேற்சண்டைசெய்திடுவான்வந்தார்
மேவடியேறகென்செய்கைட்ளம்பெனவேண்டலோடும். (சு)

நலங்கொளின்மனைவியோடுநாகைக்காரோணமெய்திப்
பலங்கொளுந்தேவதீர்த்தம்பகர்விதிப்படிநது
வலங்கொளிக்கும்பமாதமாசிபசாசிரவிலம்மை
யுலங்கொளப்போற்றில்வெற்றியடைந்தைவபோதியென்றான். (எ)

அந்தலவிசேடந்தேறவறிவிச்சானேயவென்று
முந்தலம்புகழ்க்கதபுமுனிர்மனையாட்டியோடும்
வைத்தலங்குவித்தெழுந்துநாகைக்காரோணஞ்சார்ந்து
வைபத்தலத்தமர்மன்றனும்பார்த்திவனவிதிவழாதே. (அ)

தேவநீர்முழுகவன்றுசிவவிசியடைந்ததாக
மேவும்பாருட்காரோணவிமலந்தியாமகாண்டு
மாவழிவடகமாதியாவையும்வயங்கச்செய்து
பூரவுபேரன்பிற்றுழ்ந்துபழிச்சினன்பாராள்வேந்தன். (கூ)

வழிவழியடிமைபூண்டமன்னவற்கிரங்கியையன
பழிதபுநன்காரோணப்பதிநமதிராவினமேவி
மொழிபெரும்பூசையாறறுமுறைமையானினதுமாற்றார்
கழிபெருமபோரிலாவைகழிநதுகட்பாவாகணடாய். (௧௦)

ஆதலினவருடநதோறுமணைதருநமதிராவிற்
காதலினிங்குமேவிககரிசறபூசைசெயதி
மேதகுமுத்தியுமபினமேவுவையெனவிடுதரான
போதகமனையவேநதனமனையொடுங்காஞ்சிபுககான. (௧௧)

காஞ்சிவநதடைதலோடுங்கடுகமுனைவனைநதமாறறா
தாஞ்சிவலிங்ககாரோணதரிசனஞசெயதவாறறு
ஞஞ்சினநதிடவகூடாதுகட்படேக்ருமமெனறு
பூஞ்சினைமாவினகீழவாழபுணணியபிரானையேத்தி. (௧௨)

பததிரசேனமனனனபாலவநதுடபுபபூணடு
தத்ரமககியனறதாயதிறைதநதுதழுவிடபோனறு
ரநதகுயிறைவனுகையாணடுதோறுருநாடபோறறி
யுததமமனைவியோடுமுறறனனமுகதியீறறில (௧௩)

வாகையநதனைடோணமனனனபததிரசேனனைசோ
நாகையநதலததுமேவிசமபிரானருளடபெறற
ஓராகையையெடுத்துச்சொறறுமோகநதமததலததையினறு
மூகைமறறெருவனபோறறிபபொறறநமொழிவாமனறே. (௧௪)

பததிரசேனனபூசிததபடலமமுறறிறறு.

ஆ படலம ௬௪ இஇ திருவிருததம - உ௬௧௧.

## மூகைபூசித்தபடலம்.

வாகைமாதவர்குதமாதவ
வீகையாரபதமிறைஞசிநாகையின
மூகைபோறறியமுறையுஞ்சொலலென
வோகையோடவனுமாகதுறறனன. (௧)

தணிதரளவளநதவகுநாகையின
வணிகாதங்குலததுதிததவனமுனப
பிணிசெயதீமையாறபேசிலாதவன
கணிதமிலபசுக்காவலபூணடுளான. (௨)

ஓகையாரபசுவொனறைநாடுபு
நாகைசூழநதனனிருளிருடிப்பின்
‡ மேகைதோநதவபபசுவுமீடரா
தாகைவாயபபுறச்சூழநததலலெலலாம். (௩)

‡ மேகை - மேவுதல.

கண்டுதாழ்ந்தனர்கருந்தடங்கணு
ணண்டுபேரருட்கிலக்கமாக்கிடுந்
தொண்டுபூண்டனர்தொழுதுவாழ்த்தினர்
பண்டுநேர்மையுட்பற்றிவந்தவர். (கரு)

மேயசுந்தரவிடங்கப்பேர்புனை
நாயனூர்பதாரண்ணிப்போற்றினர்
பாயவின்பமாப்பரவையாடினர்
நேயமூற்றெழுகிலவுநீர்மையார். (கஎ)

இந்தவாறிருவோருமெண்ணிறு
ளந்தமாத்தலத்தடித்தொணைபோற்றுபு
சந்தமாரருட்டலைமைவாய்ந்தனர்
முந்தமேவினார்முத்திவைப்பரோ. (ககூ)

கந்தர்தந்தையார்க்கருணைசெய்தவின்
வந்தமூகையார்வயங்குதாவிலா
னந்தரானதைநவின்றுஞானசம்
பந்தர்போற்றியபரிசுங்கூறுவாம். (கசா)

மூகைபூசித்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ருஙு இ திருவிருத்தம்-உகூஉஎ.

## ஞானசம்பந்தப்படலம்.

மூதிர்புகழ்முனிவர்சூதமுனிவரனபொறருள்போற்றி
யதிர்கடலுலகமேத்துமண்ணலார்காரோணத்துக்
கதிர்புனைதருசம்பந்தர்கலந்துபோற்றியதோதென்ன
வெதிரதுபோற்றியன்னதியம்புமச்சூதமேலோன். (க)

ஆழிசூழ்புடவியேத்துமகன்புனற்சோழநாட்டுக்
காழிமாமறையோர்தம்முட்கவுணியர்குலஞ்செய்நோன்பால்
வாழியாருயிர்களோங்கிவபாதவிதயர்வாழ
வூழியோனருளையென்னவொருவர்வந்தவதரித்தார். (உ)

ஆண்டுமூன்றணையுங்காலையப்பர்தம்பின்புசென்று
பாண்டுநீறணிவார்கோயிற்பைம்பொன்செய்தோணிநோக்கி
மூண்டபோரன்புமொங்கமுலைசுரந்துலகமீன்றுள்
வேண்டபோதூட்டவுண்டுகண்பிசைந்தழுகைவிட்டார். (ங)

ஊட்டினர்யாவரென்றுமொருவர்க்கோர்விரலாற்சுட்டிக்
காட்டினர்தமிழ்வேதந்தோடுடையமுற்கழறிப்பின்ன
நீட்டினவேணியார்தங்கோலக்காவினைந்துசென்று
கூட்டினவேரிசைசால்பொற்றாளங்கைக்கொண்டாரன்றே (ச)

பெருந்திருக்கூட்டத்தோடுந்தலமெலாம்பேணிப்போற்றி
யருந்திறற்பிள்ளையார்தாமாத்துறைக்கோயில்சார்ந்து
மருந்தமுண்டமரர்க்காத்தவள்ளலைவணங்கிமேன்மை
பொருந்தமுத்தமைந்தயானமாதியபொலிவிற்பெற்றார். (ரு)

அங்குநின்றகன்றுபல்லதலமெலாமணுகிப்போற்றித்
தெங்குவிண்டடவும்பாச்சிலாச்சிராமத்திற்சென்று
தங்குமன்மழவன்பெற்றகன்னிகைதவாததுன்புண்
மூங்குதற்கேதுவாயமுயலகனொழித்தப்பின்னர். (சு)

அறிபெருங்கொங்கர்நாட்டையடைந்தடியவரைவருத்துஞ்
செறிபனிக்கொடுமைநீங்கத்திருநீலகண்டம்பாடி
மறிவரும்வேனிலவெப்பமடக்கப்பட்டீச்சரத்துக்
குறிகுணமில்லார்நல்குளிர்முத்தினபந்தர்பெற்று. (எ)

பெற்றவரினிதுசெய்யும்பெருமகமுற்றுமாறு
கற்றவர்நிறையுமெங்களாவடுதுறைகலந்தாங்
குற்றவரினிதுநல்குமுலவாதகிழிபெற்றிஞ்சி
செற்றவர்தலங்களெல்லாஞ்சென்றுசென்றிறைஞ்சிப்போற்றி. (அ)

காவணமெங்குமிட்டுக்கமுகொடுகதலியார்த்துப்
பூவணமாலையோடுபொன்னரிமாலைநாற்றி
தூவணப்பனிநீர்சாந்தஞ்சுண்ணமெலவிட்டுத்தம்வீதி
யாவணவலங்காரத்தோடெவருமலங்கரித்தே. (கூ)

எல்லியன்மறையோராதியடியவரியாருமீண்டிப்
பல்லியமியமுழங்கப்பாவுபொற்குடங்கையேந்திச்
சொல்லியல்வாழ்த்தெடுத்துத்துதித்தடிவணங்கப்போற்றி
நல்லியனெறிமேயநாகைக்காரோணம்வந்தார். (கo)

கருந்தடங்கண்ணிபாகங்கலந்தமர்தருமாதேவை
யருந்தவருள்ளநீங்காவற்புதக்கூத்தினானைப்
பொருந்தநன்கருள்செய்யாதிபுராணனைப்புலவர்கோவைப
பெருந்தமிழ்பயில்காரோணப்பிரானைநேர்கண்டுதாழ்ந்தார். (கக)

மனங்கலந்துருகவோவாமழைவிழிபொழியமேனி
யினங்கொளுரோமமெல்லாமியைதரச்சிலிர்ப்பவென்று
முனங்கதிர்வல்லாணிம்மூர்த்தியித்தலயகற்பத்துங்
கனங்கலையாதுவைகுமெனபதுகருத்துட்கொண்டு. (கஉ)

தோகைக்கோர்பாகநல்குஞ்சுந்தரர்மதியஞ்சூடி
மோகைக்காபாலியாருக்குறையிடமாவதென்று
நாகைக்காரோணமென்றருந்தமிழ்நவின்றுபோற்றி
மேகைக்கர்மாங்குச்சின்னாள்விருப்பொடுமமர்ந்தாரன்றே. (கங)

அருந்தமிழதமுற்பல்லவறைந்துகாலங்கடோறும்
பொருந்தகன்னிறைஞ்சிமற்றைத்தலங்களும்புரிந்துபோற்றிப்
பெருந்தவருடங்குழுமப்பிறங்குநன்மருகல்சார்ந்து
மருந்தமோர்வணிகனீங்கியுய்ந்திடவாயமலர்ந்தார். (௧௪)

வற்கடமொழியுங்காறுமறையவர்வீழிமூதூ
ரொற்கமில்பொற்காசெய்தியுறுமிடிதவிர்த்தாவலி
யற்குநன்மறைக்காடெய்தியவிர்கதவடைபிணித்துக்
கொற்கையாநிறைவன்மேயகூடலையடைந்தாரன்றே. (௧௫)

கைதவன்மேனிவெப்பங்காற்றியாரழலிலேடு
பெய்ததனுலர்தன்மாற்றிப்பெரும்புனனதியெதிர்த்திட்
டெய்தவங்கேடுபோற்றியமணரைக்கழுவிலேற்றிச்
செய்தவச்சைவமொனறேபொருளெனத்தேற்றினரால். (௧௬)

வழுதிநாடடங்கவுள்ளதலமெலாமருவிப்போற்றிச்
செழுவியகொள்ளம்பூதூர்சேவிக்குமாறுமெய்த
வொழுகுதுமுளரிவாயத்தோடமதாகக்காலியக்கிப்
பழுதகறெளிச்சேரிக்கட்பாய்குறிமேவுங்காலை. (௧௭)

வழியொருபுத்தனசென்னிமடிதரவுருமுவீழ்த்தாக
கழிபுகழ்த்தொண்டைநாடுகலந்தோத்தூர்மேவுகாலைப்
பழிதபுமொருவர்வேண்டப்பரவுமாணபனைகளெல்லா
மொழிவருங்குரும்பையீனவாயமலர்ந்தொருசொற்பேசி. (௧௮)

பரவைவெண்டிரைக்கையாலேபவளமுமுத்தும்வீசு
முரவைநன்கமைபுன்னைக்கவொண்பொழின்மயிலைசார்ந்து
கரவையிலடியாருள்ளங்களித்திடவுக்கவெங்க
மாவைநேரலகுலாகவழுகியவாயமலர்ந்து. (௧௯)

எண்ணருந்தலங்களெல்லாமினிதுறச்சென்றுபோற்றி
நண்ணருங்காழிமேவிநயந்துபல்லடியாரோடு
கண்ணரும்பெருமஞ்ஞானசம்பந்தர்களிப்பினவைக
விண்ணரும்விழையுமன்றலாற்றவானவிழைந்தாரியாரும். (௨௰)

பெருமணநல்லூரெய்திப்பெண்பேசியாரும்வேண்டப்
பெருமணப்பதுமப்பூந்தாட்பிள்ளையங்காய்தியாங்குப்
பெருமணஞ்செய்துகாணப்பேணிவந்தடைந்தாரோடப்
பெருமணப்பெருமான்பாதம்பெற்றினபாந்துய்த்தாரன்றே. (௨௧)

ஞானசம்பந்தமூர்த்திநாகைக்காரோணமெய்தி
யீனசம்பந்தநீங்கப்பாடியதிசைத்தாமெய்யோ
டானசம்பந்தநாவுக்கரசருமாங்குமேவி
யூனசம்பந்தநீங்கப்பாடியதனைப்பாமன்றே. (௨௨)

ஞானசம்பந்தப்படலம் முற்றிற்று.

ஆ. படலம் ௬௯ இ திருவிருத்தம் ௨௲௪௧.

## வாகீசப்படலம்.

பந்தமில்பன்முனிவாருஞ்சூதமுனிபதம்போற்றி
யந்தமில்சீர்த்திருநாவுக்கரசராய்பல்வளமு
ந்தமிகுபுகழ்படைத்தநாகைக்காரோணத்து
வந்தமலற்பாடியதைவழங்கெனமற்றவனுரைக்கும். (க)

முக்கணிறைதனிசெறியுமுனைப்பாடிவளநாட்டின்
மிக்கதிருவாமூரில்வேளாளர்பெருங்குலத்துத்
தக்கதொறுக்கையரதிபர்புகழனார்பாற்சைவத்
தக்கமெனத்திலதவதியார்பினவதரித்தனரே. (உ)

வள்ளலருளாலுதித்தார்மருணீக்கியாரொன்றும்பே
ரொள்ளலடையாமலடைந்தினியகலைபலகற்று
விள்ளலறமேவுநாள்மலனருளாமையினா
லுள்ளல்குறியாவமணாசமயத்தினுட்புகுந்தார். (ங)

தௌவையார்பற்றொழியத்திருவதிகைத்தலஞ்சார்ந்து
செவ்வையார்பணிசெய்வார்சிவபெருமான்திருமுன்னர்
கவ்வையாரமண்சமயங்கைவிட்டுத்தம்பியா
ரிவ்வையார்திருச்சமயமெய்தவருள்புரியென்பார். (ச)

ஊழிமுதலருள்சூலைபுடற்றுதலாலமணர்செறி
பாழிமிகப்படைத்திருந்தபாடலிபுத்திரநீங்கி
வாழியதிகையிற்றிலதவதியார்தாள்வந்திறைஞ்சி
யாழிவிடமயின்றபிரான்வெள்ளியநீறவாய்த்தரித்தார். (ரு)

அண்ணலார்திருமுன்னரணைந்துபணிந்தெழுதலு
நண்ணலார்கொடுஞ்சூலைசிதைத்தருகூற்றாயினவென்
றண்ணலார்திருப்பதிகமோதினாரவரருளா
லெண்ணலார்திருநாவுக்கரசரெனும்பெயரேற்றார். (சு)

இடையறாவன்புமனத்தெழுதலாலுழவாரப்
படையறாத்திருக்கையும்பாட்டறாச்செவ்வாயு
மடையறாதொழுகுபுனன்மழையறாநோக்கமுநன்
னடையறாப்பெருந்தவமுமாய்ப்பொலிந்தார்நாவரசர். (எ)

புண்ணியநாவுக்கரசரிவ்வாறுபொலிவதனை
யெண்ணியவெஞ்சமண்கையரியற்றுநீற்றறையிருந்தும்
கண்ணியவெவ்விடநுகர்ந்துங்கடகரியைப்புறங்கண்டுந்
திண்ணியகல்லொடுகடலைநீந்தியுமேன்மேற்சிறந்தார். (அ)

பெருந்திருப்பாதிரிப்புலியூர்ப்பெம்மானையடிபணிந்தே
யருந்தமிழ்நாவுக்கரசரதிகைமீட்டும்பணிந்து
பொருந்தியவண்டூங்கானைமாடத்திற்புக்கிறைஞ்சி
யிருந்திறற்சூலமும்விடையுமிருதோளுமுறப்பெற்று (கூ)

ஆறைவடதளியமணராயிரும்றமாய்த்துச்
சேறைமுதற்றலங்களெலாஞ்சென்றேத்திக்கழனிதொறு
றூறைபயிறிங்களூர்நோற்றவருந்தவரடைந்து
கூறைதிசையாரருளாற்கொடுவிடமோர்மகற்கொழித்தார். (க0)

பொல்லாவற்கடகாலம்போமளவும்வீழிநகர்
நல்லாதரவினமர்ந்துநாடொறும்பொற்காசுபெற்றுச்
சொல்லாருமறையடைத்ததூயகதவந்திறந்து
பல்லநருஞ்சூழ்ந்தேத்தப்பஃறலமும்போய்த்தொழுவார். (கக)

வீதிதொறுந்தூராலக்றிமேயநறும்புனறெளித்துச்
சோதிசெய்காவணம்புரிந்துதோரணமாதிகளியாத்துப்
பாதிமதிபுனைந்தபரம்பரனுகைக்காரோணத்
தோதியுணர்ந்தவரெதிர்கொண்டுறப்போற்றவெதிர்போற்றி. (கஉ)

நெருங்குபலவடியரொடுநீல்நெடுங்கண்ணியார்
மருங்குதழுவுறவமரு மாதேவர்கழல்பணிந்தே
யொருங்குதலவிசேடமெலாமுணர்ந்துதிருவாய்மலர்வா
ருங்குறைத்தென்றியாவர்களுமதிசயிக்குந்திருப்பதிகம். (கங)

கற்பநீறணிபெருமான்காரோணத்தலமொன்றே
தற்புநாளினுமழியாக்காட்சியுறலாற்பலவி
கற்பமாத்தலத்தமருங்கடவுளர்யாவரும்புகுவார்
கற்பயாவருமிதன்சீர்காணலாமெனப்புகல்வார். (கச)

மூர்த்தியசெப்யுதிற்பழனமுதலாகத்தலமூன்றும்
பிந்தியதில்வீரட்டமெட்டனொடுபிறமூன்று
நந்தியமூன்றினின்மறைக்காடாதியாயயந்தேழும்
வந்தியலவொருநான்கினம்பர்முதல்வருமூன்றும். (கரு)

நாறுசுவையைந்தகத்துநல்லூர்முனிரண்டு
மாறுபெறப்புகலிமுதலாயதலமொருமூன்று
மேறுபுகழ்மிகுமேழிலேற்றசிராப்பளியொன்றும்
வீறுதருமிருநான்கின்விளங்கவைகம்பமொன்றும். (கசு)

மருவியவொன்பதிற்சோற்றுத்துறையாதிவயங்கிரண்டுந்
திருவியல்பத்தினில்விதந்துசெப்பாததலமனைத்தும்
பொருவரியவஞ்ஞொன்றிற்பாம்புரமுற்பொருநதிரண்டுங்
கருவரியபெருந்தகையார்காதலிற்சேர்த்தருளினார். (கஎ)

இன்னதிருப்பதிகமுதற்பலபதிகமெடுத்தோதிச்
சொன்னபுகழ்நாவரசர்சூழடியர்குழாத்தோடு
மன்னதலத்திடைச்சிலநாளமர்ந்தருள்பெற்றப்பாலும்
பின்னவரியாரமருந்தலம்பலவும்பரவுவார். (கஅ)

எண்ணரியதலமனைத்துமெய்தியுருகிப்பணிந்து
கண்ணரியவையாற்றிற்கயிலாயந்தரிசித்து
விண்ணரியதென்னுமன்மிகச்சிறந்ததவமிலார்
நண்ணரியதிருப்புகலூர்நாதனைச்சார்ந்தின்புற்றார். (கக)

ஆன்றதவத்துயர்முனிவராகியநாவுக்கரசர்
சான்றவர்சேர்திருநாகைக்காரோணத்தலஞ்சார்ந்து
தோன்றவருள்பெற்றதிறஞ்சொற்றனஞ்சுந்தரரடைந்து
தேன்றருசெந்தமிழ்பாடிப்பரிசுபெறுதிறம்புகல்வாம். (உ0)

வசிசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ுஎ இ திருவிருத்தம் - உ௲கசுக.

சுந்தரப்படலம்.

முனிவரர்குழமேலோன்முண்டகமலர்த்தாள்போற்றி
நனியருள்பொழிந்துமேவுநாகைக்காரோணமெய்திப்
பனிமலர்த்தொடையாலாலசுந்தரர்பரிசுபெற்ற
புனிதமாங்கதையோதென்னப்புரிதவன்புகலலுற்றான். (க)

திருமுனைப்பாடிநாட்டிற்றிகழ்திருநாவலூரி
லருமறையாதிசைவராகியசடையனார்பாற்
பொருவருங்கயிலைநின்றும்பூரணரருளாலின்பம்
பெருகவதாரஞ்செய்தாராரூரெனும்பேர்பெற்றார். (உ)

மருவருநன்மார்பிற்பூண்டுமாண்கலைபலவுங்கற்றுத்
திருமறையவர்கள்சூழமணம்வந்தபுத்தூர்சேர்ந்தே
பொருவரும்வெண்ணெய்நல்லூர்ப்புனிதனுரோலைகாட்டிப்
பெருவழக்காடிவல்லவன்றொண்டனெனும்பேர்பெற்றார். (ங)

புகழ்திருத்துறையூர்சார்ந்தபுலனென்றிப்பாடிப்பெற்றுத்
திகழ்திருவதிகைமேவிச்சேவடிசென்னிசூடி
யகழ்வினையாரோபோற்றுமம்பலத்தாடல்போற்றி
யிகழ்தலிலாரூர்மேவிப்பரவையைமின்பகநுய்த்தார். (ச)

ஒருவிறன்மிண்டர்வன்மைபுறமொழிசெவியினேற்று
வெருவருங்கடல்சூழ்வையபின்மிடையுயிருய்யுமாறு
பொருவரும்பெருமான்வாக்குமுதலெடுத்தருளப்போற்றிச்
சுருதியென்றொண்டத்தொகையினிதருளிச்செய்தார். (ரு)

குண்டையூர்பெருமான்மேயகோளிலிச்சரம்பணிந்து
குண்டையூர்நெல்லினைத்துங்குலவாரூர்வரவழைத்துத்
தொண்டையாதரித்துமேன்மேற்றலமெலாந்தொழுதுசெவ்வாய்த்
தொண்டையார்பரவையாரோடின்பந்துய்த்திருப்பாராரூர் (சு)

திருப்புகலூரின்மேவிச்செங்கல்பொன்னாகப்பெற்று
விருப்பமர்முதுகுன்றெய்திமேதகுபதிகம்பாடிப்
பருப்பதச்சிலையார்நல்கும்பளகில்பொன்னாற்றிட்டாரூர்
மருப்பதுமஞ்சூழ்தெய்வவாவியினெடுத்தபின்னை. (எ)

எண்ணருந்தலங்களெல்லாமெய்துபுபணிந்துபாடிக்
கண்ணகன்றெண்டைநாடுகலந்தொற்றியூராமேவிப்
பண்ணனைம்மொழியினார்சங்கிலியார்தோள்பரிவிற்புல்லி
யொண்ணலமருவியாங்கேயுறைந்தனர்சின்னாளம்மா. (அ)

அணிமதிலந்தணாரூரடைந்தபின்பரவையார்தந்
தணிவருங்கோபங்கண்டுகாங்கரும்வருத்தம்பூண
மணிமருள்கண்டத்தெண்டோள்வள்ளலேதூதுசென்று
பணிசெயற்குரிமைசெய்ப்பராயின்பநுகர்ந்துவாழ்நாள். (கூ)

குரவமர்கூந்தலார்தங்கொடைக்குறையறப்பானெண்ணிப்
பரவுவார்குருகுங்கூனும்பாற்றியநாவலூர
ரரவமேகலையார்பாடலாடனீங்காதாயென்றுங்
கரவர்சேராதநாகைக்காரோணங்கருதிவந்தார். (க0)

ஈங்குகாரோணமேயவடியவரொருங்குகூடிப்
பாங்குசான்கரமுற்றும்பண்புறவலங்கரித்து
வீங்குபேருவகையோடுமெதிர்சென்றுவிருப்பிற்போற்றி
வாங்குபேற்றழைப்பத்தாமும்போற்றுபுமகிழ்ந்துவந்தார். (கக)

அருண்மலிகருந்தடங்கணம்மையோர்பாகமேவப்
பொருண்மலிதமருமாதிபுராணனைக்கண்டுபோற்றித்
தெருண்மலிசிந்தைவேட்டபொருளெலாந்தெளியத்தேற்றி
வருளாறுஞ்சுவைத்தேந்தீஞ்சொற்பதிகமேல்விளம்பலுற்றார். (கஉ)

பத்தூர்புக்கென்றபாட்டிற்றொழுமைப்பண்புகூர
முத்தூர்வெண்ணகையுட்டோன்றப்பல்வகைமொழிந்துபோற்றிக்
கொத்தார்முத்தாரவைரக்கோவைபூண்டிடுமாதந்து
கத்தூரிசாந்துநீசக்கணிந்தினிதருள்கவென்றும். (கங)

வேம்பினொடென்றபாட்டில்விருத்திநான்வேண்டவேணி
பாம்பினோடலங்கக்காட்டிப்பகட்டவொட்டுவனோவொட்டேன்
சேம்பினோடாத்தஞ்சூழ்நீர்த்திருவாரூரிருந்தீர்நீரே
காம்புநேத்திரமும்வேண்டுங்கணிந்தருள்செய்கவென்றும். (கச)

பூண்பதோரொன்றபாட்டிற்பொல்லாதவேடங்கொண்டு
பாண்பேசித்தலைக்கலத்துப்பலிகொள்கைதவிரீர்ந்தோ
வீண்பேசிமடவார்செங்கைவெள்வளைகோடலாமோ
சீண்பார்மூர்டமல்குங்காரோணத்தமர்ந்தீரென்றும். (கரு)

வீசுநீள்வலைச்சேரிசூழ்விரிபுனலகழும்
பேசுவானகந்தோய்தரவெழுபெருமதிலு
மூசுநெய்தலொண்பன்மலர்க்கழியுங்கொண்மூவே
மாசுபோன்மெனமேற்கொளுந்தாலமுமன்றே. (௬)

வலையகப்படுமீன்குவித்திடலிறுமலையுங்
கொலையமீன்கணம்பிளந்தெறிதரவுயர்குன்றுந்
தொலைவிலுப்பமைத்தணைக்குமேலுயர்த்திடுசெரும்பும்
விலைசெய்பொன்குவியோங்கலுஞ்செறிவமேன்மேலும். (௭)

தரையில்யாருமோர்வினைசெயச்சமைதருங்காலை
விரையுமூர்திமேவுநர்சிலர்நடப்பவர்பலர்மே
லுரைசெயத்தகுசேரியார்வினைசெயலுறுகாற்
புரையிலூர்தியிற்றண்ணெனப்போவதேயமைந்தார். (௮)

சிறுமுழக்கமுண்டாயினுந்துயிலுதல்சிவணு
றுறுநிலத்தவரலைமுழக்கொழிதராதென்று
மறுவிலத்தகுசேரியோர்துயிறலும்வாய்ந்தார்
செறுபடைத்திருமால்கொலோசிந்தையிற்றேறேம். (௯)

அம்பரத்தியர்கொங்கையம்பரத்தியர்மருங்கு
லம்பரத்தியர்மற்றதுசூழ்பலவன்ன
வம்பரத்தியராள்வழக்கறுத்திடுநெடுங்க
ணம்பரத்தியரன்னராற்பொலியுமச்சேரி. (௧௦)

வானமுட்டிவவுணங்கண்மீன்போர்கண்மாத்திரமோ
பேனவெண்டிரைபெயர்த்தெறிசங்கவெண்போரு
மூனமொன்றறவலைவளத்தொழில்புரியுரவோ
ரானவன்றிவெம்பரதவர்சிலைத்திடுமார்ப்பும். (௧௧)

பாய்தரும்புனலுண்டமேகமூரணிபடர்கா
வாய்தருங்கருங்களிறும்வானியங்கலும்பரவை
வேய்தரும்புவியியங்கலும்விட்டிருந்தனவே
லாய்தருந்திறலார்க்கும்வேறறிதரற்காகா. (௧௨)

உணவுமீன்விலைப்பொன்னின்றிவெறிலார்க்குற்ற
பிணவுபல்லவுஞ்சிற்றில்கோலுவபெருமுத்த
முணவுசோறடுகுழிசியுங்கொக்கரையடுப்பிற்
றணவுறவிறகொண்டுகிர்பிறவுமத்தகைத்தால். (௧௩)

இன்னபல்வளச்சேரியிற்பரதவர்க்கெல்லா
மன்னனீன்கரசுரிமைசெய்குடிவழிவந்தா
ரன்னமூர்பவனுதியர்காணருமண்ண
றன்னதாட்டுணைப்பத்திமையியற்கையேசார்ந்தார். (௧௪)

முத்தராரருண்முதல்வர்தாளன்றிமுன்னிடுவார்
பித்தர்மற்றவரிணக்கமுமடாதெனப்பிரித்த
சுத்தர்நீற்றுமெய்யன்பினர்வாரிதிசூழு
மித்தராதலமியம்புபேரதிபத்தனென்பார். (கரு)

உலகநாயகிகருந்தடங்கண்ணியோடுலகத்
திலகமாகியநாகைக்காரோணத்துச்சிறப்புற்
றிலகமேவியவாதிபுராணர்தாளிறைஞ்சுங்
கலகமொன்றிலாவன்புபூண்டனர்பவங்கழிப்பார். (கசு)

அராவணிந்தவர்நாகைக்காரோணத்தெம்மாதி
புராணர்கோயிலைவலஞ்செய்வாராலயம்புகுந்து
பராவுவார்விழாச்சேவைசெய்தாணந்தம்பயில்வார்
விராவுமற்றவரடியரைமுற்பணிவிருப்பார். (கஎ)

இந்தநீர்மையராயவரியலுநன்னாளிற்
சந்தமார்வலைதாங்குபுதமர்பலர்சூழ
நந்தமார்திரைப்பெருங்கடற்புக்கனர்நயந்து
முந்தவார்வலைவீசினர்முதல்வரைத்தொழுது. (கஅ)

வீசும்மாமணிவலைக்கயிறிழுத்தனர்வெருவிக்
கூசுமீனமொன்றகப்பட்டதனைக்கரங்கொண்டு
தேசுசாலுமென்றுடுகாரோணத்தெஞ்செல்வர்
பேசுதாளடைந்திடுகெனப்பெருங்கடல்விடுத்தார். (ககூ)

நல்லமீனகப்பட்டதுநாடுபுகொள்ளார்
செல்லவென்றுறுமுகமனுஞ்செப்புபுவிடுத்தார்
வல்லமற்றிவர்செயலெவனென்றுளமதித்தா
ரல்லசெய்திடுவதிற்றலையாந்தமரானார். (உ0)

பின்னர்வீசிடுவலைப்படுமீனெலாம்பெயரா
தன்னர்வௌவுபுதமரொடுமிருக்கையையணைந்தா
ரன்னதேனுங்காரோணநாயகவெனவிசைக்கின
முன்னர்மற்றவர்தாள்பணிபதியிணமுதிர்ந்தார். (உக)

வழிவருந்தினமுதற்பெருவாரிவாய்ப்புகுந்து
மொழிதருந்திறலார்வலைவீசுபுமுயன்று
பழியிலார்முன்னானவாதியிற்படுமீன்
றழியெடுத்துவிட்டேனையகவர்ந்திலஞ்சார்வார். (உஉ)

இந்தவண்ணமுன்மீன்விடுத்தேனையகவர்ந்து
சந்தமேவுறவாழுநாட்டணிப்பெருந்தலைவ
ரந்தவன்பர்தமுறுதியையவனியோரறிந்து
புந்தமார்த்திடவெண்ணுபுதிருவருள்பதித்தார். (உங)

காராசலத்துரிபோர்த்தகாரோணத்தெம்மாதி
புராணர்பொருளாண்முதல்வலையிடைப்புக்கு
விராவுமீனமொன்றனதிப்பின்வீசிடுந்தோறும்
பராவுமீனமொன்றாயினும்படலொழிந்தன்றே. (உச)

ஒற்றைமீனன்றிப்பிறிதொருமீனுமொழியாக்
கற்றையார்திரைக்கடலிடைப்படாப்பெருந்துயராற்
பற்றையார்பெருந்தமரெலாம்பசிப்பிணிவருந்த
வெற்றைநாளுமெய்தாவிலம்பாடுற்றதன்றே. (உரு)

மன்றுமாடுகாரோணர்சேவடிக்கெனவழங்கு
மொன்றதாயமீனமுஞ்சிறுவாகப்படாதொழிய
வென்றவாரிபாடாராய்விளக்கதிபத்தர்
கன்றவார்துயருறாரன்புசிறுமையுங்கழியார். (உசு)

வறுமையென்பதுபலபகல்வருந்தவுமன்பிற்
சிறுமையுந்தளராதவரொருதினஞ்சென்று
பொறுமையார்தரயிசினாகலைகிரிபுவனம
வெறுமையாம்படிபட்டதோர்நவமணிமீனம். (உஎ)

விலைசெயப்புவிபோதராநவமணிமீன
மலையிடைப்படக்கண்டிசயித்தனரியாரு
மலைவிலிந்தருமீனிதுவறுமைநோய்சிதைய
நிலைபடைத்தனமெனத்தம்மனமகிழ்பூத்தார். (உஅ)

அந்தமீனையுநாகைக்காரோணரடிக்கீ
சந்தமாதரசெல்லெனத்தடங்கையாற்றாங்கி
முந்தவோகையினவிழ்ந்தனமொழியதிபத்தர்
வந்தபாசத்தோடிருந்ததும்விடுத்தனாமன்றே. (உகூ)

நெடியமான்முதற்றேவர்கைகுவித்தனர்நெருங்க
வெடிவிற்பம்பகணநாதருமொருங்குசூழ்ந்தேத்தத்
தொடியிராயிரங்கருங்கடங்கண்ணியோடெங்க
ளடிகண்மால்விடைமேற்பொலிகாட்சிதந்தளித்தார் (௩0)

தோகைமேயவோர்பாலொடுசுரர்களுஞ்சூழ
நாகைமேயகாரோணர்மால்விடைமிசைநண்ண
வோகைமேயவரிதுபெறற்கரியபேறியானென்
றூகைமேயவன்பூற்றெழுவடிமிசைப்பணிந்தார் (௩௧)

அடிபணிந்தெழுமன்பரைநோக்கியவையர்
முடிவிலின்பெரும்பத்திமைமுழுவதுமுகந்தே
நொடியினஞ்சிவபுரத்தமர்களைத்தொடுமுற்றுப்
படியிலின்பத்துய்த்தமக்கெனப்பணித்தனர்மறைந்தார். (௩உ)

பஞ்சதுந்துபிமுழங்கினபனிமலர்நிறைத்தார்
வஞ்சமின்றியெவ்வானரும்வள்ளலார்பச்சை
யஞ்சமேோடுகாரோணம்புக்கன ரதிபத்த
ரெஞ்சலில்சிவபுரம்புகூஉவின்பமுற்றிருந்தார். (௩௩)

மருவுபேரதிபத்தர்தம்வழிவருவாரும்
பொருவுதிருமத்தலத்தமர்புராணாதாட்பத்தி
யொருவுறுசெய்துயர்சிறப்படைகுவரொன்றும்
வெருவுதந்தொழிற்றலைநின்றுமேதனிவியப்ப. (௩௪)

வலைவளத்தொழிற்றலைநின்றுமயக்குவெம்பாச
வலையறுத்தருளடைந்தவர்சரித்திரம்வகுத்தாங்
கலைமதித்திடுமேலைக்காரோணத்திற்கலந்த
கலைமதிப்பருஞ்சட்டைநாயகர்திறங்களைவாம். (௩௫)

அதிபத்தப்படலம்முற்றிற்று.

ஆ படலம் ௩௧ இ திருவிருத்தம் - உ௪௩௧.

## சட்டைநாதப்படலம்.

முனிவரர்புலருஞ்சூதமுனிவரனபாதம்போற்றிப்
பனிமலர்ப்பொழில்சூழ்நாகைபதிப்பெருங்காரோணத்துத்
தனிவிறற்சட்டைநாதர்வரவினைச்சாற்றுகென்னக்
கனிவுளத்தரும்பவன்னான்கட்டுரைத்திடலுற்றான். (௧)

நாற்றஞ்சால்கடுக்கைவேணிநம்பிரானடிக்கேபோதுந்
தேற்றஞ்சாலன்புமிக்கார்செழுந்தவப்பெருமைவாய்ந்தார்
மாற்றஞ்சானீறுமொண்கணமணியுமைந்தெழுத்தும்போற்று
மேற்றஞ்சாலிராமதேவனெனுமொருசித்தருள்ளார். (௨)

ஆனந்தவனமென்றோதுமரும்புகழ்க்காசியெய்தி
யானந்தநதோய்ந்தார்க்கென்றுமளிக்குமொண்கங்கையாடி
யானந்தவுருவராயவகிலநாயகனைப்போற்றி
யானந்தம்பெருகச்சித்தியாவையுமடைதலவேட்டார், (௩)

சித்திகளனைத்தும்வேட்டசிந்தையார்காசியோர்பாற்
சத்தியருண்மேற்கொண்டுசித்திப்பார்தமக்கென்றும்
புத்திமுத்தியுநன்கீயும்வைரவர்பொற்புமேய
வத்திருவுருவங்கண்டாரிலக்கணமமையுமாறே. (௪)

தழுமுனொருகண்டிவாளங்குசம்மயங்கபால
முழுவலிநாகம்வட்டமுரண்மிகுபாசந்தண்டந்
தழுவியகரங்கள்பத்துங்கிண்கிணித்தார்சார்மார்பும்
ஒழுவில்பொற்கழல்சேர்தாளும்வயங்குறவடைந்தோர், (௫)

திரைகொழுகங்கைக்காசித்திருநகரிராமதேவ
ருரைவழிச்சட்டைநாதர்பூசனையுவப்பிற்செய்தாம்
புரைதபப்பன்றாளநதபுண்ணியரருள்வதெந்நாள்
வரைவிலின்புறுவதெந்நாளெனமதித்திருக்குநாளில். (கரு)

ஒருதினஞ்சட்டைநாதருவந்தவர்கனவிற்றோன்றி
மருவநின்னுள்ளங்கொண்டகவலைமாற்றிடுதியன்ப
பொருவருநினக்குமுத்திபுணர்ப்பதித்தானமன்று
கருநிறக்கடல்சூழ்நாகைக்காரோணமென்றுதேர்தி. (கசு)

அத்தலமித்தலத்துந்திகமாந்தேவதீர்த்த
முத்தமச்சரவதீர்த்தமொளிர்பெருங்காகதீர்த்த
மூத்தலம்புகழாநிறைமுனிதீர்த்தமாதியாகச்
சுத்தநற்றீர்த்தமெண்ணிலனநனிதொககவாங்கே. (கஎ)

பெருந்தவப்புண்டரீகமுனிவரன்பேணிப்போற்றிய
பொருந்தமெய்யன்புசெய்துபுனிதமாங்காயத்தோடுந்
திருந்தநந்தமையடைந்தான்றிசைமுகனுங்குபபோற்றி
மருந்தமுண்டொளிருநம்பால்வளமலிசிருட்டிபெற்றான். (கஅ)

தண்டுழாய்மாயோனித்தலத்துனைச்சார்ந்துபோற்றி
மண்டுவெவ்விடத்தாலுற்றகரிசெலாமாற்றிவாழ்வா
னண்டுவாருடர்கோமானுவயினமமைப்போற்றித
தொண்டுபட்டனவாமேன்மைபெற்றனனறாயவன்ப. (ககூ)

இன்னுமத்தலத்தினம்மையிணர்மலராதிகொண்டு
மன்னுமெய்வழிபாடாற்றிமுத்தியைமருவினோர்கள்
பன்னுபல்கணக்குநதீர்ந்தாபகருவதினுமுண்டான
முன்னுகற்பத்தின்மாயாதிருப்பதம்முழுந்தானங்காண். (உ0)

அதுபெருஞ்சோழநாட்டிலலங்குதலாவிரிக்குததென்பாற
சதுமுகனமுதலோர்போற்றுநதடநதிருவாரூர்கீழ்பான்
முதுகுணகடற்றீரத்தினமுயங்குதவதங்குமேவிக
கதுமெனநமைத்தாபித்திதாபிகருநகணூணுஞ்சொலவாம். (உக)

விருப்புறமுனிபூசித்தமேலைக்காரோணத்துள்ளா
லிருப்பதுகுறித்தேமந்தவிடங்கடைப்பிடித்திமுதநி
யருப்புவதான்கென்றேதிமறைநதணையரனபர்
பொருப்புவில்லுடையார்வார்த்தைதனைவெனப்புந்திவைத்தார், (உஉ)

விடியுமுன்னெழுந்துகங்கைவெண்டிரைத்தீர்த்தமாடிப்
பொடியணிந்தினியகொண்டுபூசைமுன்போலவாற்றி
யடிகள்வாய்மலர்ந்தநாகைக்காரோணமடைவானெண்ணித்
தீடிதலில்லொருபேழைக்குட்சட்டைநாயகனைச்சேர்த்து. (உந)

தலைமிசைச்சுமந்துகொண்டுதக்கணதிசையைநாடி
மலைகளுங்காடுமாயவழிக்கொடுநடந்துவந்து
நிலைபருப்பதமென்றோதுநெடுந்தலம்பணிந்துபோற்றிக்
கலைநவில்விருபாக்கத்தைக்கலந்துகைதொழுதாரன்றே, (உச)

ஆயவொன்றுநீங்காச்சோமநாதத்தைமேவிப்
பாயபன்மலர்கடூவிப்பரம்பரன்பாதம்போற்றி
யாயமேல்கடற்றீரத்தினமைந்தகோகன்னம்புக்கு
நாயனார்பாதம்போற்றிநயந்தங்குநின்றுபோந்து. (உரு)

வாங்குதெண்டிரைநீர்ச்செம்பொன்முகலியின்மருங்கிறேறு
மோங்குதென்கயிலைமேவியும்பர்தம்பிரானைப்போற்றி
நீங்குதலின்றிமாவாய்நெடுமறைநிலவமேன்மை.
தேங்குசீர்காஞ்சியெய்தித்தேவர்தேவைப்போற்றி. (உசு)

மறைபுகழாலங்காடுவணங்கிமாற்பேறுபோற்றி
யறைதிருவோத்தூர்பாகூரொற்றியூரவாவித்தாழ்ந்து
நிறைகழுக்குன்றமெய்திநிகரிலான்சரணந்தாழ்ந்து
பிறைதபுத்தினிதிருளும்பாதிரிப்புலியூர்மேவி. (உஎ)

புலியொடுமுயலுங்கண்டபுண்ணியப்பாதம்போற்றி
யொலிதழலுருவமாயவொருபருப்பதமும்போற்றி
வலியவர்பதமவிருத்தலாயினுந்தொழுதுதெய்வம்
பொலிதிருத்தில்லைமூதூர்புக்கினிதாடல்போற்றி, (உஅ)

காழிமுதலபலவும்போற்றிக்காவிரிநன்னீராடி
வாழிமாயூரமேயவள்ளலைத்தரிசித்தப்பா
லூழிகாணவழுவூரொத்தியொருதிருப்பனையூர்தாழ்ந்து
சூழிமாலயானைப்போரவைச்சுந்தராரூர்சேர்ந்தார். (உகூ)

நலமலியாரூர்மேயநம்பர்பொற்பாதம்போற்றி
நிலமலிகீழ்வேளூருஞ்சிக்கலுநினைந்துபோந்து
புலமலியன்பிறைஞ்சுபுண்ணியமுனிவர்சூழக்
கலமலிகடல்சூழ்நாகைக்காரோணநகர்வந்துற்றார். (௩0)

புண்ணியமலியும்வாரோர்புனலபடிந்தெழுந்தியாருங்
கண்ணியவருள்சான்மேன்மைகருந்தடங்கண்ணியோடு
நண்ணியகருணையாதிபுராணனைநயந்துபோற்றித்
தண்ணியவிடங்கப்பெம்மான்பாதமுந்தரிசித்தப்பால். (௩௧)

அருஞ்சுவைதக்கடேசம்யாருமறைநடுத்தலேசமேன்மை
தருந்தனிவிண்டுநாதந்தவாவகத்தீசமுண்மை
இருந்தமரேந்திரேசந்திகழுங்கார்முகேசமன்பு
பொருந்தியநாகநாதம்புண்ணியவிராமநாதம். (௩௨)

இவ்வைமுதற்பலவும்போற்றியினிதுவப்புற்றேயன்பு
சுவைமிகவையர்சோளீச்சரமுடையவர்வானொரு
நவையறுத்துய்யுமேலைக்காரோணநயந்துபுககார்
செவையுறபபணிநதார்முத்தியின்பத்துத்திளைத்தாரொத்தார். (௰௩)

அன்றுநம்மடிகள்செவ்வாய்மலர்ந்தவாறமையநாடி
யின்றுநூநாகைமேலைககாரோணததினிதினுற்றே
மொன்றுமேற்பதிட்டைசெய்யவுறுபொருட்கியாதுசெய்வோ
மென்றுதம்முள்ளங்கொண்டேயிருநதனரொண்ணமிக்கார். (௰௪)

அற்றைநாட்கனவின்முனபோலண்ணலார்சட்டைநாதா
பறறையாரவர்முற்றோன்றிப்பரிநதனரருளிச்செய்வா
ரிற்றைநாள்வருநதலெனனையிங்காவடதிசைக்க
ணுற்றையாவைங்குரோசத்துள்ளதானகரமொன்று. (௰௫)

அன்னமாநகர்புரக்குமரசனபுத்திரியைமுன்னே
பின்னமொனறில்லாவண்ணம்பிரமராககதமொன்றுற்றே
யினனனமிககியறறுநீயாங்கெய்திடினவிலருமநத
மனனனின்வயததனுவானெனறனர்மறைக்காரன்றே. (௰௬)

அருடலைக்கொண்டுவப்புறறங்கர்நேடிச்சென்று
பொருணமிகுமரசனமுன்னம்போயினானவனுநதேர்ந்து
மருடபபபூணிநதெழுநதுமகண்முனங்கொடுபோய்விட்டான்
கருளடற்பிரமராககதங்கழன்றடிவீழநதனறே. (௰௭)

அடிதொழுமகனைநம்பினவாவெனவழைததுவநது
படியறநதாஞசமாதிபயிலிடமதறகுமேலபாற
கொடியவல்விலங்குபூட்டிககுறும்பொழிநதிருததியென்றூர்
மடிதுயரனைததுநீததுமனனவன்புதல்வியுய்ந்தாள. (௰௮)

திருமலைராயனென்னுமரசிதுசிநதைசெய்தெம்
பொருமலையொழிததாரபோலவார்புவனததினுளரோவெனறு
கருமலைபவர்சூழ்நாகைக்காரோணநகரமேவி
யருமலைபோல்வார்சோளிச்சரமுடையாரைத்தாழ்ந்தான். (௰௯)

அடியனேன்செயுங்குற்றேவலருள்செயவேண்டுமென்னக்
கடியவிழ்மாலைமார்பகாசியினின்றும்போநத
முடிவினஞ்சட்டைநாதப்பதிட்டைசெய்முயறசியின்னே
யொடிவறப்புரிதியென்றுருவநதவனதுமேற்கொண்டான. (௨௰)

வினைவலயவனர்க்கூவியொண்பொருள்வெறுப்பவீசி
நினையொருமுனிபூசித்தநின்மலப்பிராறகுதெனபாற்
சனைகதிர்பொருவிமானமாதியகதிர்ப்பச்செய்து
துனைதரப்பதிட்டைசெய்தான்சுரர்கள்பூமாரிதூர்த்தார். (௨௰௧)

கலைபயிறெய்வநாகைக்காரோணம்புகுவதென்று
தொலைவருந்தேவதீர்த்தமுதலியதோய்வதென்று
புலையுணர்வடையாவாதிபுராணனைக்காண்பதென்றென்
றலைவுறவுளத்திலுன்னியிருந்தனரறிஞர்யாரும். (ருக)

சடைநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கூ0 இ திருவிருத்தம் - உசஅஉ.

## நைமிசமுனிவர்பூசித்தபடலம்.

தனியுயர்தவத்தினமிக்கசௌனகமுனிவனாதி
முனிவரர்பலருஞ்சூதமுனிவரன்பாதம்போற்றிக்
கனிதருமுள்ளநாகைக்காரோணஞ்சென்றுபோற்ற
நனிவிழைவுற்றனையநயந்தருள்செய்தல்வேண்டும். (க)

கணனுதல்வயங்குநாகைக்காரோணத்தலச்சீர்முற்று
மெண்ணுதல்செய்யவெங்கட்கினிதருள்செய்தநீயே
விண்ணுதலனையதானமவிரும்பியாமடைந்துகாணப்
பண்ணுதல்கடனென்மறைறையெவர்க்குணர்டுபுகராயென்றார். (உ)

முனிவரரினையவார்த்தைமொழிதலுமகிழ்ந்துசூத
னனியதுகாணும்வாஞ்சைநமக்குமிக்குண்டுகண்டீ
ரினியதுபழுதன்றேமெய்யதுமெனவெழுந்தான
கனிமகிழ்பூத்தெல்லாருங்கைகுவித்துடனெழுந்தார் (௩)

நண்பொடியாந்தசூதநாமவானமுனிவனோடும்
வெண்பொடியாருமேனிந்தலொலாமவிரவிமுச்சோ
றண்பொடியாக்கிநாகைக்காரோணநகரநோக்கிப
பண்பொடியாத்தணைபுபரிந்தனர்நடதல்செய்வார். (௪)

வடதிசைநின்றுநைமிபாற்கடலைஞ்றிஇவருதலெனனப்
படவியின்டலைக்கூடிப்போற்றுறுமவாசிநோக்கி
யிடவியந்தனறுங்காணுமயாறுமெண்ணிலகடந்து
தடநெடுங்காசியாதித்தலமெலாந்தாழ்ந்துபோற்றி. (ரு)

வாயரவொலியெழுப்பமனநெகிழ்ந்துருகாநிற்க
வாயகண்ணருவிவாரவலருரோமஞ்சிலிர்ப்ப
நேயமிக்கவராயல்லுமபகலுநேருறவியங்கி
நாயகமாயதெய்வநாகைக்காரோணம்வந்தார். (௬)

எல்லையைவணக்கியுள்புக்கிலையந்தபல்வளமுநோக்கி
முல்லைவெண்முறுவல்பாகர்மூயநகருள்வியந்துதொண்டு
செல்லையொண்முடிகொண்மாடத்தெருவெலாங்கடந்துவந்து
வல்லிவண்டளிமுன்றுயகோபுரம்வணங்கினாரால். (எ)

துங்கருள்ளத்துமேயதடந்திரைத்தேவதீர்த்தந்
திங்களொண்முடியார்கோயிலெதிரொருதிசையிற்கண்டே
யங்களவில்லாவினபமமைதரவிறங்கித்தோய்ந்தார்
கங்கனோராநான்குளானுங்கருதரும்பெருமைவாய்ந்தார். (அ)

வெள்ளியநீறுபூசிவிளங்குருத்திராக்கம்பூண்டே
யொள்ளியசிறப்பார்முத்திமண்டபத்துவந்துமேவி
வள்ளியவெழுத்தோரைந்துமனனுறக்கணித்தெழுந்தா
ருள்ளியகாமமாதியொருங்கவித்துயாந்தீரார். (கூ)

பரவினர்க்கருளுநாகாபரணமால்களிறறைப்போறறிக
கரமலர்குவித்துச்சென்னிமிசைக்கவின்கமயசசோதது
வரமருள்பெருமைசாலாவரணஞ்சூழ்ந்துட்புகுந்து
புரவுசெய்பரமராதிபுராணராமுனபோந்தாரன்றே. (க0)

அருமறைமுறையிட்டின்னுமறிவரறகருமையாய
பெருகொளிமணியையாதிபுராணனைபபெருங்காரோணத
தொருமுதலவனைநோககண்டேயுளளநெகருருகபபோறறி
யிருவிழியருவிவாரவினபவெளளநதுடைந்தார. (கக)

அரிதவணகனறுதெனபாலடைநதுசுநதரவிடங்கப
பெரியனைவணஙகிமாறுபபேரினபவெளளமூழகிப
புரிதரவலஞ்செயதுளளயாரையுமபொருநதபபோறறிக
கரிசறவடைநதாரமமாகருநதடஙகணணிமுனனா. (கஉ)

கருநதடஙகணணிஞனகசட்டைவமபொறியராய
வருநதவருளததிருஞனயவிலமுமீனறதாயைப
பொருநதகோகனகபோறறிப்பூரணனநதமேவிந
திருநதமாதவததாரமுததிமணடபஞ்சேர்ந்தாபினனும. (கங)

ஆலயினமாநதுகாடசியறபுதசசிறபபமைத்து
மோவறவியபபுமேயவொருவருககொருவரபேசிப
பூவமரயனமாலாதிபபுததேளிரபுரிநதுபோறறுந
தாவருநதலஙகளெலலாந்தரிசிககுமவாஞசையுறறா. (கச)

ஒருதினஞ்சுவேதகககடேசமொருதினநடுத்தலேச
மொருதினமவிண்டுகாதமொருதினமிநதிரேச
மொருதினநாகநாதமொருதினமிராமநாத
மொருதினஙகாரமுகேசமொருதினமகததியீசம். (கரு)

ஒருதினமேலைக்காயாரோகணமுனமைமேவ
வொருதினமௌனிசித்தீசமாக்சென்றுருசிபபோற்றி
யொருவறமறறுமுள்ளதலமெலாமுவந்துகாணபா
ரொருமலர்மகனுநதேருவுயாபுடையந்தனனா. (கசா)

ஒருதினநதேவதீர்த்தமொருதினமுனிவர்தீர்த்த
மொருதினங்காகதீர்த்தமொருதினஞ்சூரியதீர்த்த
மொருதினம்பிரமதீர்த்தமொருதினம்விண்டுதீர்த்த
மொருதினசித்தகங்கையுவந்தனர்மூழ்குவாரால். (௧௭)

திருவிழாச்சேவைசெய்துஞ்சிறப்பவைகண்டுரோசஞ்சூழ்ந்தும்
பொருவிலாக்காலநதோறும்போற்றியுமிருக்கவண்ணம்
வெருவிலாமுனிவர்சினருள்வசித்தனாலுடபெறறபபான்
மருவுலாநதமனுவைப்பையடைதரமனங்கொண்டாரால். (௧௮)

அருமைசெயபுராணஞ்சொற்றவருட்பெருஞ்சூதமேலோற்
கிருமைசெய்சிறப்புநலகியினிதவணிருசகையுமரசே
யொருமைசெய்யனையாதிபோற்றியுறுவிடைபெற்றுப்பின்னர்த்
தருமைமாமுகிலைத்தாங்குநதம்மிடமபுகுந்துவாழ்ந்தார். (௧௯)

கடவபுடையுடுத்தநாகைககாரோணப்புராணங்கேட்போர்
மிடல்கெழுபொருண்ணகாயவோர்விருடபெடுபபடிபபோர்நாளும்
விடலறப்படிபபோர்க்கம்பொன்வீசவோரொழுகிவைபபோர்
மடணமலராதிகொண்டுவயங்குறப்பூசைசெயவோர், (௨௦)

இமமையின்மனைவிமக்களியைதரச்செலவமெல்லாஞ்
செம்மையினனுபவித்துதேவாதம்போகமயாவு
மம்மையில்மிகததுய்ததீறறிலருமறைமுடிவுநதேருக்
கொம்மைவெள்விடையான்மேயசிவபுரங்குறுகிவாழ்வார். (௨௧)

கண்ணியபுகழ்சானாகைக்காயாரோகணப்புராணம்
புண்ணியம்பயப்பதெனறும்போற்றுபுபடிப்போர்கேட்போ
ரொண்ணியவனைத்துஞ்சாாவாரிகபரமாதிதமமை
யண்ணியபெயர்க்குநல்கும்வல்லவரவரோயன்றே. (௨௨)

கருநதடஙகண்ணியோடுகாயாரோகணப்பிரானு
மிருநதருடானம்போலுமேறறமாமிப்புராணம்
பொருநதநன்கமருந்தானாதலாபுகலததேத்துத்
திருநதவெவ்வளனுமன்னுமூரெனுஞசேராவாறே. (௨௩)

வேறு.

போற்றுபுகழ்மலிநாகைக்காயாரோகணத்தாதிபுராணர்வாழ்க
வாற்றுபெருங்கருணையேயுருவாயகருநதடங்கணம்மைவாழ்க
மாற்றுதலினீறுெருடுகணமணியணியுநதிருக்கூட்டம்வாழ்கமாசு
பாற்றுதிருவம்பலத்துணடநவிலுங்குஞ்சிதப்பொற்பாதம்வாழ்க. (௨௪)

நைமிசமுனிவர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௬௧ இ திருவிருத்தம்-௨௫௦௪.

திருச்சிற்றம்பலம்.

திருநாகைக்காரோணப்புராணம்முற்றிற்று.



# பிழை திருத்தல்.

| பக்கம். | பாடல். | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௪ | ௧௦ | கதிர்வான் | கதிர்வாள் |
| ௩௫ | ௧௫ | யானையாநோக்கி | யானையாநோக்கி |
| ௫௫ | ௩௭ | அன்னியம் | அனனியம் |
| ௫௮ | ௧௨ | குளிர்ந்து | குளிர்ந்து |
| ௭௧ | ௩௨ | தானவர்கள்சோர | தானவர்கட்சோர |
| ௧௧௪ | ௫௫ | மாக்களித்தேறி | மாக்களிற்றேறி |
| ௧௨௮ | ௨ | பரப்பிற்கும் | பூரப்பிற்கும |
| ௧௩௭ | ௮௫ | உவகை | உவமை |
| ௧௫௩ | ௯௯ | கிளிகிளர் | களிகிளர் |
| ௧௯௯ | ௧௪ | உளபுகழ்க் | உள்புகழ |
| ௧௮௦ | ௩௮ | நீடியகால | நீடியகாய |
| ௧௯௩ | ௧௮ | எய்வார் | ஏய்வார் |
| ௧௯௫ | ௮ | எழூத்தெனும் | எழூத்தெனும் |
| ௨௧௩ | ௧ | மருத்தபுகழ் | மருத்தருபுகழ |
| ௨௪௪ | ௮ | உணர்த்து | உணர்ந்து. |

உ

# சூசிபத்திரம்.

ஆக ௨௫0௬.